# தரங்கிணி




பேராசிரியர்
நாரண துரைக்கண்ணன் (ஜீவா)

# முன்னுரை

உலக மகாகவிகளின் வரிசையில், சிகரமாக வைத்து எண்ணத்தக்க பெருங்கவிஞர்களை இப் பூவுலகுக்கு ஈந்து, உயர் புகழ் பெற்றது நம் பாரத தேசம் என்பது உலகப் பிரசித்தம். பவபூதியும் காளிதாஸனும், உஜ்ஜயினி மன்னன் விக்கிரமாதித்தன் அரசவையை அலங்கரித்து வந்த மகாகவிஞர்கள் என்பது அறிஞர்களுக்குத் தெரியும். காளிதாஸன் சாகுந்தலம், குமாரசம்பவம் போன்ற காவியங்களை இயற்றி, 'காவியத்துக்குக் காளிதாஸன்' என்ற பெரும் புகழைப் பெற்றுவிட்டார். 'உத்தர ராம சரிதம்' என்ற ஒப்பற்ற காவியத்தைப் பாடிக் கல்லையும் மண்ணையுங்கூடக் கனிந்துருகச் செய்திருக்கும் பவபூதி, காளிதாஸன் அளவு புகழடைய முடியவில்லை. இதற்குக் காரணம், அவரவர்களுக்கு ஏற்பட்டிருந்த வாய்ப்பும் வாழ்க்கை வசதியும்தான். இந்நிலையை, எல்லா மொழிக் கவிஞர்களிடையிலும், தொன்றுதொட்டு நாம் பார்த்து வருகிறோம்.

சென்ற முப்பதாண்டுகளுக்கு மேலாக நான் புரிந்து வரும் இலக்கியப் பணிக்கு, நியாயமாகக் கிடைக்கக்கூடிய புகழும் பொருளும் கிடைக்கவில்லையே, தமிழகம் போற்றிப் பேணவில்லையே என்று கூறி, நண்பர் பலர் வருத்தப்படுவர். அவர்களுக்கு, நான், பவபூதி போன்ற கவிஞர்களின் வாழ்க்கை நிலையைச் சுட்டிக்காட்டி, ஆறுதலடையச் செய்வது வழக்கம்.

தமிழ் நாட்டின் இருண்ட காலம் என்று ஒன்று உண்டு என்பதை, தமிழ்நாட்டு வரலாற்றைப் படித்தவர்கள் அறிவர். தமிழ் வேந்தர்கள் ஆட்சி வீழ்ச்சியுற்று, களப்பிரர்கள் என்ற கொள்ளைக் கூட்டமொன்று தலைவிரித்தாடிய காலந்தான் அது. அதுபோல, என் வாழ்க்கையில் இருண்டகாலம் என 1949—1960 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட பன்னிரண்டாண்டுகளைச் சொல்லலாம். அக்காலத்தில், நிரப்பு என்னும் நெருப்பில் துயின்று துடிதுடித்துக் கொண்டிருந்தேன். வாழ்க்கைச் சோதனை மேலெழுந்திருந்த இக்காலத்தில், நான் ஏதேனும் சிறுகதை, கவிதை, கட்டுரை, நாடகம் என எழுதியிருந்தேனுல், அது நிர்ப்பந்தங்காரணமாக இருக்குமேயொழிய, இயற்கையின் உந்துதலால், உள்ளத்தின் எழுச்சியால் உருவானவையல்ல என்று அறியவேண்டும்.

1963 ஆம் ஆண்டு, குற்றாலத்துக் குளிர் சாரலிலும் அருவியிலும் மூழ்கித் தெம்புற்றுவர, கவிஞர் நண்பர்களுடன், ஆகஸ்டு மாத முதலில் போயிருந்தேன். அங்கிருக்கையில், ஏதாயினும் எழுதவேண்டும் என்று நண்பர்கள் தூண்டிக் கொண்டேயிருந்தனர். சிறிது காலமாக முத்தமிழ்க் கலைமணி யான டி. கே. ஷண்முகம் நாடகமொன்று எழுதித் தரவேண்டு மென்று கேட்டுக் கொண்டிருந்ததால், அங்கு நாடகம் எழுது வதற்குப் பிள்ளையார் சுழி போடலானேன். எங்களைப்போலவே அருவி நீராட வந்த நண்பர்களின் சந்திப்பாலும் உரையாட லாலும், என்னுல் தொடர்ந்து எழுத இயலாமல் போய் விட்டது.

சென்னை திரும்புகையில் தேக்கடிக்குப் போனோம். அங்கு 'ஆரண்ய நிவாஸி'ல் தங்கியிருக்கையில், இந்தப் பயணத்தில் உருப்படியாக ஒன்றும் எழுத முடியவில்லையே என்ற ஆற்றுமை எனக்கு ஏற்பட்டது. அதன் விளைவாக, அன்றிரவு எல்லோரும் தூங்கியபின் நான் எழுத உட்கார்ந்தேன். 10 மணியிலிருந்து 12 மணிக்குள் சாரதா என்ற சிறுகதை உருவாயிற்று. நான் இதை எழுதும்போது, பிரச்னைக்குரிய கதையாக அமையும் என எதிர்பார்க்கவில்லை. காலையில் இக்கதையை எடுத்துப் பார்த்த நண்பர்கள், இதுபற்றிப் பலமாகச் சர்ச்சை செய்யத் தொடங்கி விட்டனர். 'இச் சிறுகதை சிறந்த முறையில் அமைந்துவிட்டது. நீண்ட காலத்துக்குப் பின் உங்களிடமிருந்து ஒரு நல்ல கதை தமிழ் இலக்கியத்திற்குக் கிடைத்துவிட்டது. ஆனுல், கதையி லுள்ள கருப்பொருளை எங்களால் அப்படியே ஏற்க முடிய வில்லையே' எனத் தெரிவித்தனர். பின், இக்கதை 'அமுதசுரபி' என்ற இலக்கிய இதழில் செப்டம்பரில் வெளியானதும், எழுத் தாள நண்பர்களும் வாசகர்களும், பலவிதமான கருத்துக்களை வெளியிட்டனர். என்ன நிலை ஏற்பட்டாலும், சாரதா போன்ற இந்துப் பெண்ணொருத்தி வேறுமதத்தினனை மணக்க நினைப்பது வரவேற்கத் தக்கதல்ல என்பது பெரும்பாலோருடைய அபிப் பிராயம். 'பிரத்தியட்ச வாழ்க்கையில் அப்படி நடந்து வரு கிறதே! அதை எப்படி இலக்கியத்தில் பிரதிபலிக்காமல் இருக்க முடியும்?' என்று நான் நண்பர்களைக் கேட்டேன். நண்பர்களில் பலர் சமாதானமடையவில்லை.

நான் அடிக்கடி போய் வரும் ஒரு பேட்டையில் ஓர் உயர் சாதிக் குடும்பம்—படித்துள்ள பண்புள்ள குடும்பம். அக் குடும்பத்தைச் சார்ந்த ஒரு பெண்மணிக்கு நீண்டகாலமாகத் திருமணமாகாமல் இருந்தது. அப் பெண்ணின் தந்தை, ஏழை

யாயிருந்ததுதான் இதற்குக் காரணமாகும். நற்குணமும் ஒழுக்கமுமுள்ள அப்பெண், ஒரு கிறிஸ்துவ இளைஞனைக் கலியாணஞ் செய்துகொண்ட செய்தி, ஒருநாள் என் செவியில் விழுந்தது. இது என் நெஞ்சை நெகிழவைத்துவிட்டது. அப் பெண், அக் கிறிஸ்தவ வாலிபனைக் காதலித்தோ, அல்லது கிறிஸ்தவமதக் கொள்கைகளால் கவரப்பட்டோ கலியாணஞ் செய்து கொண்டிருந்தால், அதை நான் மகிழ்ச்சியோடு வரவேற்றிருப்பேன். ஆனால், அப் பெண், அவ்விதமாகக் கலி யாணஞ் செய்துகொண்டதாகத் தெரியவில்லை. தான் பெற் றோருக்கு மேலும் பாரமாக இருக்கக்கூடாதென்றே, அவ்விதம் சாதி மாறி, மதம் மாறினாள் என அறிந்தேன். இச்சம்பவத்தின் மீது எழுந்த சிந்தனை, நெடுங்காலமாக என் உள்ளத்தின் ஒரு மூலையில் துயின்று கொண்டிருந்தது. அதுதான், தேக்கடி ஓட்டலில் நான் உறக்கங்கொள்ளாத அன்று, என் சிந்தனையி லிருந்து சாரதாவாக எழுந்து வெளிவந்தது. இந் நிகழ்ச்சி குறித்து நான் சிந்தித்து வந்ததுபோலவே, சமுதாயத்தையும் சிந்திக்கவைக்க வேண்டுமென்பதுதான் என் விருப்பம்.

நான், சமுதாயத்தில் காண்பதை, கேட்பதை, உணர்வதை, ஊகிப்பதைக் கதைகளாக்கித் தருவது என் வழக்கம். சமுதா யத்தில் எத்தனையோ பிரச்சினைகள் எழுகின்றன; மறைகின்றன. நான், சமுதாய நிலையை, அதன் மாறுதலை மட்டும் பார்ப்ப தில்லை; கால மாறுதலையும் கவனித்து வருபவன். சமுதாயப் பிரச்சினைகள் பல, கால மாறுதலுக்கு ஏற்ப மாறிக்கொண்டே போகின்றன. ஆனால், பெண்கள் பிரச்சினையும், பெண்களைப் பெற்றவர்களின் பிரச்சினையும், முக்கியமாகத் திருமணப் பிரச் சினையும் என்றும் மாறாதவையாக இருக்கின்றன. எனவே, பெண்களின் திருமணப்பிரச்சினைதான் என் கவனத்தில் அடிக் கடி தென்படுகின்றது. இப்பிரச்சினையில் அவ்வப்போது எழும் சிந்தனைகள்தாம், பல கதைகளாக உருக்கொள்ளுகின்றன.

'சாரதா' சிறுகதை அவ்வகையில் எழுந்த ஒன்று. இக் கதைமீது, பல எழுத்தாளர்களும் வாசகர்களும் எழுப்பிய வாதப் பிரதிவாதங்களின் பயனாக உருவான கதைதான், 'தரங்கிணி' என்னும் இந் நாவலாகும்.

'ஜீவோதயம்'
சென்னை—94

நாரண - துரைக்கண்ணன்
20—1—64

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

எவ்வளவு நல்ல கொள்கையாக இருந்தாலும், இலட்சியமாக இருந்தாலும், நல்ல செயல் முயற்சியாக இருந்தாலும் அதற்கு நல்வரவேற்பும் போதிய ஆதரவும் இருந்தால்தான் அது வெற்றிபெற முடியும்; அதன் பயனை மக்கள் துய்க்க முடியும். அதுபோலவே, எவ்வளவு அறிவாற்றல் மிகுந்தவராயிருந்தாலும், செயல் திறனுடையவராயிருந்தாலும், அவருக்கு நல்ல சூழ்நிலையும் சுற்றுச்சார்பும் நல்லவர்களின் உதவியும் ஒத்துழைப்பும் இருந்தால்தான் அவர் உயர்வடைய முடியும். இதற்குச் சான்றுதேட வேறெங்கும் போகவேண்டியதில்லை. தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கத்தின் வளர்ச்சியும் அதன் வாயிலாக ஏற்பட்டுவரும் நல்விளைவும், எழுத்தாளர்களுக்குக் கிடைத்துவரும் பேருதவியும், கண்கூடான உண்மையாகும்.

நம் சங்கத்தின்மூலம் முதன்முதலாக வெளியிடப்பட்ட நான்கு நூல்கள், விளம்பரப்படுத்தப்படாத நிலையிலேயே விரைவில் விற்பனையாகிவிட்டன. ஓராண்டுக்குள் விற்றுப் போன என்னுடைய நாவலான 'தரங்கிணி'க்கும், நண்பர் அகிலனுடைய 'சகோதரரன்றோ?' சிறுகதைத் தொகுதிக்கும், இரண்டாம் பதிப்பு வெளியிடப்படுவதற்கான செலவுக்கு ரூபாய் கடன் தந்துதவ, சங்கத்தலைவர் கி வா.ஜ அவர்கள் அன்புள்ளத்துடன் பரிவுரை வழங்கினார். மற்ற டைரக்டர்களும் ஒப்புதல் தந்தனர். ஆனால் கடன்தொகை மார்ச்சுத் திங்களில்தான் கிடைத்தது. இவ்விதம் தாமதம் ஏற்படாதிருந்தால்'தரங்கிணி' சென்ற ஆண்டே வெளியாகி, வாசகர்களின் கரங்களில் இருந்திருக்கும். தில்லிப் பல்கலைக் கழக மாணவர்களும் தொடர்ந்து பாடமாகப் படித்துப் பயன் பெற்றிருப்பர்.

எத்தனையோ அல்லல்களுக்கிடையே 'தரங்கிணி'யை மீண்டும் உங்கள்முன் கொணர்ந்திருக்கிறேன். உங்கள் பேராதரவு என்றும்போல் இருக்கவேண்டும்.

'தரங்கிணி' வெளிவருவதற்கு உதவிய சங்கத் தலைவருக்கும், டைரக்டர்களுக்கும், என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சென்னை
15–9–67 } நாரண-துரைக்கண்ணன்

# மூன்றும் பதிப்பின் முன்னுரை

பழைய இலக்கிய மரபுப்படி, நல்லாசிரியர்கள் சிலர் வாயிலாகத் தமிழ் இலக்கியங்களைப் பயின்றுவந்த நான், புதுமை இலக்கியப் படைப்புப் பணியில் ஈடுபட்டது, நான் மேற்கொண்ட பத்திரிகைத் தொழிலால்தான்.

மேனாட்டுப் பல்கலைக்கழகங்கள், நீண்ட காலமாகவே புதுமை இலக்கியங்களை, அதாவது சிறுகதை நாவல்களை மாணவர்களுக்குப் பாடங்களாக வைத்துப் படிக்கச் செய்து வருகின்றன. ஆனால், நம் நாட்டில் உள்ள பல்கலைக்கழகங்கள் பழைய இலக்கியங்களையே திருப்பித்திருப்பிப் பாடங்களாக வைத்துவந்தனவே யொழிய, புத்திலக்கியங்களுக்கு இடந் தராமலே இருந்து வந்தன.

காலத்தின் கட்டாயம் நம்நாட்டுப் பல்கலைக்கழகங்களுக்கு மனமாற்றத்தை யுண்டுபண்ணியிருக்கிறது. சில ஆண்டுகளாக, நம் பல்கலைக்கழகங்களின் பாடத்திட்டத்தில் தற்கால இலக்கியங்கள் இடம் பெற்று, மாணவர்களுக்குப் பாடங்களாகப் போதிக்கப்பட்டு வருகின்றன.

பல கலைகளுக்கும் தாயகமாக உள்ள பல்கலைக் கழகங்கள். படைப்பு இலக்கியக் கலைக்கும் இடந்தந்து வளர்க்க முற்பட்டிருப்பது வரவேற்கத் தக்கதாகும். சென்னை, மதுரைப் பல்கலைக் கழகங்கள் அவ்வகையில் புரிந்துவரும் தொண்டு பாராட்டுதற்குரியது.

இந்நிலையில்தான் பல்கலைக்கழகப் பேராசிரிய நண்பர்கள் சிலர், என் நாவல்கள், நாடகங்களைப் பல்கலைக்கழகப் பாடத் தேர்வுக் குழுவினர்க்கு அனுப்பி வைக்குமாறு, என்னைத் தூண்டிக் கொண்டிருந்தனர்.

ஆனல், நான் தயக்கத்தோடுதான், பேராசிரிய நண்பர் களின் யோசனையை ஏற்று, என் புத்தகங்களைப் பல்கலைக்கழகப் பாடத் தேர்வுக்குழுவுக்குக் கடந்த மூன்று ஆண்டுகளாக அனுப்பிக் கொண்டிருந்தேன்.

இவ்வாண்டுதான் அம்முயற்சி வெற்றி கண்டது. சென்னைப் பல்கலைக்கழகத் தேர்வுக் குழுவினர் 1978-79-ம் ஆண்டிற்கான பி. ஏ., பி. எஸ்ஸி. பட்டப்படிப்புக்கு, என் நாவலான 'தரங்கிணி'யைத் துணைப்பாடமாகத் தேர்ந் தெடுத்திருக்கின்றனர். அவ்வறிஞர் பெருமக்களுக்கு நான் என்றென்றும் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

நல்ல வகையில், நல்ல புத்தகங்களை வெளியிடும் முயற்சி யில், எங்கள் தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் ஈடுபட்டு 12ஆண்டுகளுக்கு மேலாகப் பதிப்புத்துறையில் வெற்றி கண்டு வருவது, இலக்கிய உலகம் நன்கு அறிந்ததே.

கி. வா. ஜ., அகிலன், நா. பா., ராஜம் கிருஷ்ணன் போன்ற பிரபல எழுத்தாளர்களின் புத்தகங்களுடன், என் நாவல், நாடகங்களையும் வெளியிட்டு ஆதரவு அளித்துவரும் அச்சங்கத்துக்கு நன்றி தெரிவிப்பது என் தலையாய கடமை யாகும்.

பாரி நிலைய உரிமையாளர் திரு க. அ. செல்லப்பன் அவர்கள், தரங்கிணியின் இம்மூன்றும் பதிப்பு செம்மையாக வெளிவருவதற்குப் பலவகையிலும் பேருதவி புரிந்திருக்கிறார். நன்றி மறவா என் உள்ளம், அவரை என்றென்றும் வாழ்த்திக் கொண்டிருக்கும்.

தமிழ் வாசகர்களும் மாணவர்களும் 'தரங்கிணி'யை வரவேற்பார்களாக.

"ஜீவோதயம்"
சென்னை-94

**நாரண துரைக்கண்ணன்**
24-5-78

# தரங்கிணி

## 1

**தோ**மியார் கோயில் கோபுரத்தின் கூர்மையான சிகரம் நீலவான் முகட்டை எட்டிப்பிடிக்க முயன்று கொண்டிருப்பதுபோல் காணப்பட்டது. ஆகாயத்துக்கும் கடலுக்கும் உள்ள நிற ஒற்றுமையை வேறுபடுத்திக் காட்ட, மாலை மஞ்சள் வெய்யில், தன் மாற்றில்லாத பசும் பொன் நிறத்தை வானத்தில் படரவிட்டு, விதவிதமான கோலங்களை வண்ண ஓவியங்களாகத் தீட்டிக் கடல்நீரைப் பளபளக்கச் செய்து கொண்டிருந்தது. காற்றினால் உந்தித் தள்ளப்பட்டுக் கரையோரத்தில் வெண்ணுரைகளைக் கக்கிக்கொண்டு வேகமாக வரும் அலைகளின் ஓசையுடன் போட்டி போடுவதுபோல, கரையோர மணற்பரப்பை அடுத்து உள்ள செந்தோம் நெடுஞ்சாலையில் நடந்து சென்றுகொண்டிருந்த நாலைந்து இளம் பெண்களின் சிரிப்பு அலை, தென்றற்காற்றில் மிதந்து வந்துகொண்டிருந்தது. இசையரங்கில் சுருதி சுத்தமாகப் பாடும் பிரபல பாடகி யொருத்தியின் இனிமையான சங்கீதத்தில், கற்றுக் குட்டியான பிடில் வித்துவான் ஒருவன் தன் வாசிப்பின் அபஸ்வரத்தைப் பிடிப்பதுபோல, அப் பெண்மணிகள் எழுப்பிய இனிய நகையொலியினிடையே, காக்கைகள் கரையும் ஓசை கேட்கலாயிற்று.

கார்களும் சைக்கிள்களும் பிற வண்டிகளும் அடிக்கடி போகும் பெரிய வீதியில் தாங்கள் நடந்து போகிறோம் என்பதையும் மறந்து, உற்சாகமாகப் பேசிக் சிரித்துக் கொண்டு போகும் அப் பெண்களின் கரங்களில் புத்தக அடுக்குகளும் பைகளும் காணப்பட்டன. அவர்கள் தத்தம் குடும்ப நிலைக்கும் செல்வநிலைக்குந் தகுந்தவாறு அணி மணிகளைப் பூண்டிருந்தனர். சிலருடைய உடம்புகளில் பட்டாடைகள் பளபளத்துக் கொண்டிருந்தன. சிலருடைய தேகங்களில் பருத்தி ஆடைகள் அழகு செய்து கொண்டிருந்தன. அவர்கள் உடுத்திருந்த பாவாடைகள், சோளி, தாவணிகள் பல நிறங்கள் வாய்ந்தனவாயிருந்தன. சில பெண்கள் உயரமாயிருந்தனர்; சிலர் குள்ளமாயிருந்தனர். சிலர் வயதுக்கேற்ற உயரமும் சரீரவாகும் உடையவர்களா யிருந்தனர். சிலர் அழகாகவும், சிவப்பாகவும் காணப் பட்டனர். சிலர் கருப்பாயிருந்தாலும் கவர்ச்சியான தோற்றமுடையவர்களா யிருந்தனர். சிலர் மாநிறமா யிருந்தனர்; ஆனுல் முகம் களையாயிருந்தது. சிலர் அழகற்றவர்களாகவும் இருந்தனர். இவ்வளவு வேற்றுமை கள் இருந்தாலும், இவர்களிடையே காணப்பட்ட கல கலப்பு, இவர்களுடைய வயது, அறிவுவளர்ச்சி, புத்திக் கூர்மை, ஒத்த உணர்ச்சிபோன்ற விஷயங்களில் அதிக வித்தியாசமில்லை என்பதைத் தெரியப்படுத்தின.

இப் பெண்கள் நடந்து வந்துகொண்டிருந்த பாதை களில் இருமருங்கிலும் காணப்பட்ட பள்ளிக் கட்டடங் களும், பங்களாக்களும், வீடுகளும் சிறியனவாகவும் பெரிய னவாகவும், பழங்காலத்தனவாகவும் புதிய அமைப்புக் கொண்டனவாகவும் இருந்தன. செந்தோம் சர்ச்சை அடுத் துள்ள கான்வென்டுகளின் கட்டிடங்களை விட்டுவிட்டுப் பார்த்தால், மைசூர் மகாராஜா பங்களாவும், வானெலி வெளியீடு அலுவலகங்களில் ஒன்ருக இருக்கும், காலஞ்

சென்ற தமிழ்ப் பேரறிஞர் கா. நமச்சிவாய முதலியார் வாழ்ந்து வந்த "கடலகம்" போன்ற மாளிகைகள் இரண்டொன்றுந் தான் குறிப்பிடத் தக்கனவாயிருந்தன. மற்றவையெல்லாம் பழங்காலத்திய தாழ்ந்த சிறு வீடுகளாகவே காணப்பட்டன. கிழக்கு வரிசையிலுள்ள பெரிய பங்களாக்களை யடுத்தாற்போலிருந்த செம்படவர் குடிசைகள், பங்களா வாசிகளான பணக்காரர்களைப் பார்த்துப் பரிகசிப்பதுபோல் இருந்தன. நம் சமுதாயம் எவ்விதம் ஏற்றத்தாழ்வாக அமைந்து இயங்கி வருகிறதோ, அவ்விதந்தான் அந்த இளம்பெண்களின் நிலையும் காணப்பட்டது; அப்பகுதியிலிருந்த கட்டிடங்களும் குடிசைகளும் காணப்பட்டன. ஒரே வார்த்தையில் சொல்வதானால், நம் சமுதாயத்தை அப்படியே பிரதிபலித்துக் காட்டுவது போலவே அவ்விளம் பெண்களும் விளங்கினர்; வீடுகளும் இருந்தன என்னல் வேண்டும்.

பூத்துவரும் புதிய சமுதாயம் இப்படித்தான் நிர்மலமாக, பேதமற்றதாக இருக்கும் என்று பறைசாற்றுவது போல், கலகலப்பாகச் சிரித்துப் பேசிக்கொண்டு போகும் அவ்விளம் பெண்கள், நடந்தும், கார் முதலிய வாகனங்களில் ஏறியும் செல்லும் மக்களின் கவனங்களைக் கவர்ந்தனர்.

"தரங்கிணி! எங்களையெல்லாம் கவனித்தாயா? இன்று பிற்பகலிலிருந்து நாங்கள் அனைவருமே ஒரு முழம் உயர்ந்து போயிருக்கிறோம்."

ஒரு பெண்ணின் குரல் கணீரென்று ஒலித்தது.

"அது எப்படியடி, கோகிலா? உங்கள் விஞ்ஞான ஆசிரியர் ஏதாயினும் ரசாயனப் பொருள்களைக் கொடுத்து உட்கொள்ளச் செய்து வளர்த்துவிட்டாரா? அல்லது, மந்திர தந்திரம் எதையேனும் சொல்லித் தந்து உங்களை உயரமடையச் செய்து விட்டாரா?"

கடல் அலைகளைத் தம்புராச் சுருதிபோற் கொண்டு வானம்பாடிப் பறவையொன்று இன்னிசை மிழற்றியது போலிருந்தது. ஆம்; தரங்கிணிதான் பேசினாள்.

"அதெல்லாம் இல்லை. நீதான் உன் பாட்டால் எங்களை வளரச் செய்து விட்டாய்" என்றாள் பாகீரதி.

"பாவம்! சயன்ஸ் வாத்தியார் மீது ஏண்டி பழியைப் போடுகிறாய், நீ செய்வதைச் செய்துவிட்டு?" காதரீன் கிண்டல் செய்தாள்.

"பாட்டுப் பாடிப் பயிரை வளர்க்கலாம்; நாதசுரம் வாசித்து, சங்கீதக் கச்சேரி செய்து, செடி கொடிகளை, நெற்பயிர்களை வளர்க்கலாம் என்று, எங்கோ ஒரு பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சி செய்து கண்டுபிடித்திருக்கிறார்களாமே! அதுபோல், தரங்கிணி தன் கோகில கானத்தால் கச்சேரி செய்து, நம்மையெல்லாம் நெடுமரம் போல வளர்த்துவிட்டாள் என்று சொல்லு. அண்ணாமலை யூனிவர்ஸிடி செய்து வரும் தாவர வளர்ச்சி சங்கீத ஆராய்ச்சியை முதன்முதலாகப் பரீட்சைசெய்து பார்த்து, இது உண்மைதான் என்று காட்டிய பெருமை, நம்ம தரங்கிணிக்குத்தான் கிடைக்கப் போகிறது?"

இவ்விதம் சாரதா சொன்னாள்.

தரங்கிணியின் மாம்பழக் கன்னங்களில் குழி விழுந்தது. ஆமாம்; அவள் சிரித்தாள். சிரித்துக் கொண்டே கேட்டாள்:

"என்னடி, எல்லாருஞ் சேர்ந்துகொண்டு, ஏதோ புதிர் போட்டுப் பேசுகிறீர்கள்?"

சிறிது முன்னே நடந்து கொண்டிருந்த காதரீன், தரங்கிணியிடம் நெருங்கி வந்து, "நாங்கள் புதிரும்

போடவில்லை; வெறும் புகழ்ச்சியுமில்லை. நான் நிசமாகச் சொல்லுகிறேன். இன்று நம் பள்ளியில் நடந்த விழாவில், பாரதி பாடல் போட்டியில் நீ முதலாவதாக வெற்றிபெற்ற தாகத் தெரிவித்து, உனக்குப் பரிசளித்துப் பாராட்டிய தைக் கேட்டு, நாங்களெல்லாம் எவ்வளவு பூரித்துப் போனோம் தெரியுமா? அப் பூரிப்பில் நாங்கள் ஒரு சுற்றுப் பெருத்துவிட்டோம் என்று சொல்லவேண்டும். உயரமாக வளர்ந்துவிட்டதாகக் கோகிலா சொன்னது, நம் தமிழ்ப் பண்டிதர் அடிக்கடி கூறுவதுபோல் உயர்வு நவிற்சியல்ல; உண்மையே'' என்று மொழிந்தாள்.

மாற்றமில்லாத பசும்பொன் போல் பளபளத்துக் கொண்டிருந்த தரங்கிணியின் முகம், குங்குமச் சிவப் பாயிற்று. அவள் நாணத்தால் தலை கவிழ்ந்து கொண்டாள்.

''போதுமடி, உங்கள் பரிகாசம்.''

''உண்மையைச் சொன்னால், அது கேலியா?''

''நீ பாட்டுப் போட்டியில் வெற்றியடைந்து, முதல் பரிசு பெற்றுப் பிரமுகர்களின் புகழ்மாலையைத் தாங்க மாட்டாமல் தூக்கிக்கொண்டு வருஞ் செய்தி தெரிந்து தான், செயின்ட் தாமஸ் கான்வென்ட் மாணவிகளும், பெண்கள் உயர்நிலைப் பள்ளி மாணவிகளும், ஏன்? ஆசிரியர் பயிற்சிபெறும் வயது முதிர்ந்த மாணவிகளும் உன்னைக் காண வெடகப்பட்டுக் கொண்டு, முன்னதாகப் போய்விட்டனர் போலிருக்கு. அதோ பார்த்தாயா, செயின்ட் பிலோமினா ஹாஸ்டலில் தங்கியிருக்கும் மாணவிகள்கூட வெளியில் விளையாடிக் கொண்டிருந்தவர் கள், நீ தோழிகளான நாங்கள் புடைசூழ வருவதைப் பார்த்துவிட்டு, ஹாஸ்டல் அறைக்குள் போய் ஒளிந்து கொள்ள, விரைந்து ஓடுகிறார்கள்.''

"ஏது? ஐரின்! நீ கூடக் கேலிப்பேச்சுப் பேசக் கற்றுக் கொண்டாய்?" தரங்கிணி சிணுங்கியது, கிண்கிணி ஒலிப் பதுபோல் கேட்டது. "இன்று நான் உங்களுக்கு விளையாட்டுப் பொம்மையாகிவிட்டேன்—"

"நீ அப்படி நினைப்பது தவறு; தரங்கிணி மாந்தோப்பில் தன்னிச்சையாகப் பறந்து இனிமையாகக் கீதம் இசைக்கும் குயிலைப் பிடித்துக் கொண்டுபோய்க் கூட்டில் அடைத்துப் பார்க்க யாரேனும் விரும்பினார்கள் என்பதை நீ கேட்டதுண்டா? அல்லது கண்டதுதான் உண்டா? தெவிட்டாத தீந்தமிழ் இசைக்கும் எழில் கோகிலம் நீ! உன்னை நாங்கள் ஒருபோதும் கேலிப்பேச்சால் சிறைப் படுத்த மாட்டோம். இன்றுபோல் என்றும் நீ குதூகலமாக ஆடிப்பாடி மதுரகீதம் ஒலித்துப் பேரும் புகழும் பெற வேண்டுமென்ற ஆசையாலேயே, உன்னை உற்சாகப் படுத்தப் பலபடப் பாராட்டுகிறோம்."

"சாரதா, சாதுரியமாகப் பேசி யாரையும் வசப்படுத் தக் கூடியவளான நீ, என்னை மட்டந் தட்டுவதற்குக் கேட்கவா வேண்டும்? நன்றாகத்தான் பேசுகிறாய்."

"இல்லாத பொல்லாத இச்சகமொழி பேசி நாங்கள் உன்னை உச்சி குளிர வைப்பதற்கு, நீ 'பிளைமவுத்' காரில் வந்திறங்கும் பெருஞ் செல்வக் குடும்பத்துப் பெண்கூட இல்லையே; நீ எங்களைப் போன்ற நடுத்தரக் குடும்பத்து நங்கைதானே!"

"பாகீரதி! நீ சொன்னது நூற்றில் ஒரு வார்த்தை. நாமாயினும், நம் உணர்ச்சியை அடக்கிக்கொண்டு, பள்ளிக்கூடத்தை விட்டு வெகுதூரம் வந்தபிறகு, இவளைப் புகழ்ந்து பேசுகிறோம். மற்ற மாணவிகள் இவள் முதற் பரிசையும் பாராட்டையும் பெற்றுக்கொண்டு மேடையை விட்டு இறங்கியதுமே, சுற்றிலும் சூழ்ந்துகொண்டு, இவளை

வானளாவப் புகழத் தொடங்கிவிட்டார்களே! அதெல்லாம் கூட வெறும் வெற்றுப் பேச்சுத்தானு?"

"நான் பாரதி பாட்டுப் போட்டியில் பங்குகொண்டு பரிசு பெற்றதும் போதும், உங்கள் வாயில் சிக்கிக்கொண்டு படாத பாடுபடுவதும் போதும்!"

தரங்கிணி அலுத்துக் கொண்டாள்.

"இராம தூதரான அனுமாருக்குத் தன்னிடமுள்ள மகத்தான சக்தி தெரியாதாம்; அதுபோல, தரங்கிணிக்கும் அவளிடம் அமைந்திருக்கும் அறிவாற்றல் தெரியவில்லை. நாம் ஏதோ அவளை முகஸ்துதி செய்வதாக எண்ணு கிருள்."

"இதுதான், நம்முடைய ஆங்கில ஆசிரியர் சொல்வது போல் 'inferiority complex' (தாழ்வு மனப்பான்மை) என்பது."

"நம்மவர்கள், எந்தத் துறையிலும் மற்ற இனத் தாரைப் போல் அதிகம் முன்னேருமலிருப்பதற்கு, தன்னையே வியந்து கொண்டிருக்கும் அதிகத் தருக்குக் கொண்டோர் ஒரு பக்கமும், மிகவும் தாழ்வு மனப்பான்மை கொண்டிருப்பவர்கள் மற்ருெரு பக்கமும் இருப்பதுதான் காரணம் என்று, அந்த உபாத்தியாயர் பாடஞ் சொல்லி வருகையில் அடிக்கடி சொல்லுவாரே, ஞாபகம் இருக்கிற தல்லவா!"

"தரங்கிணி பணக்காரக் குடும்பத்தில் பிறந்திருந்தால் இப்படித் தன்னைப்பற்றித் தாழ்வாக எண்ணிக்கொண் டிருக்க மாட்டாள்..."

"தரங்கிணி குபேர சம்பத்துடைய கோடீசுவரர் குடும் பத்தில் பிறந்திருக்க வேண்டியவள்; எப்படியோ தவறிப் போய்..."

சாரதா சொல்லாமல் நிறுத்தியதைப் பாகீரதி நிறைவு செய்தாள்: "மாதம் முப்பது நாளும் நன்முக உண்டு உடுப்ப தற்குக்கூடத் திரிபுடைதாளம் போடும் ஏழை வாத்தி யாருக்கு அருமை மகளாக, இவ்வளவு சௌந்தரியமும் இனிய சாரீரமும் புத்திசாலித்தனமும் உள்ள தரங்கிணி பிறந்திருக்கக் கூடாதுதான். இவ்விஷயத்தில் ஆண்டவன் அநியாயம்தான் செய்துவிட்டான்."

"நீங்கள் இருவரும் சொல்வதுபோல் தரங்கிணி செல்வந்தர் குடும்பமொன்றில் பிறந்திருந்தால், இப் போதுள்ள பேரழகும், இனிய குரலும், அறிவாற்றலும் அவளுக்கு இருந்திருக்குமோ என்னவோ?"

"நன்முய்ச் சொன்ஞய், ஐரின்! நம் பள்ளியில் படிக் கும் பணக்காரப் பெண்கள் பலரின் லட்சணத்தைத்தான் நாம் பார்த்து வருகிருேமே! அவர்களைவிட அழகிலும் படிப்பிலும் ஏழைப் பிள்ளைகள்தாமே மிகுதியாய் இருக் கிருர்கள்?"

வானெலி நிலையக் கட்டிட முதற்பகுதியில், அழகாக வைக்கப்பட்டிருந்த குரோட்டன்ஸ் செடிகளுக்கிடையே வளர்ந்திருந்த சூரியகாந்திப் பூக்கள், பகலவன் மேற்றிசை யில் மறைந்து கொண்டிருப்பதைப் பார்த்துச் சோர்வுற்றுத் தலை சாயலாயின. தரங்கிணியும், தான் பிறந்துள்ள குடும் பத்தின் ஏழ்மைநிலையைப் பற்றித் தோழிகள் விமரிசனஞ் செய்வதைக் கேட்டு, முகம் கூம்பினுள்.

தரங்கிணியும் அவள் தோழிகளும் லேடி சிவஸ்வாமி ஐயர் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் மாணவி கள். தமிழகமெங்கணும்—சுதந்தரம் பெற்றதற்குப் பின்னர், செப்டம்பர் 11, 12—ந் தேதிகளில் கொண்டாடப் பட்டு வரும் பாரதி நினைவுவிழாக் கொண்டாட்டத்தை யொட்டி, மேற்படி பள்ளியிலும் பாரதி பாடல் போட்டியும்

பாரதி விழாவும் நடைபெற்றன. இப் பாரதி பாடல் போட்டியில், சென்னை நகரிலுள்ள மற்ற மகளிர் பள்ளிகளின் மாணவிகளும் ஏராளமாகக் கலந்து கொண்டனர். இப்போட்டியில்தான் தரங்கிணி எல்லா மாணவிகளையும் விட நன்ருகவும் இனிமையாகவும் பாடி முதல் பரிசு பெற்ருள். இவளுக்குக் கிடைத்த இப்பெருமை இவளுடன் படிக்கும் மாணவிகளுக்கும் தோழிகளுக்கும் பெரு மகிழ்ச்சியை அளித்தது. போட்டியில் கலந்து கொண்ட மற்றப் பள்ளிகளின் மாணவிகளும், தரங்கிணியை மனமாரப் பாராட்டியதைக் கண்டு, அவர்கள் பூரித்துப் போயினர். ஆனுல் அவர்களுடைய பூரிப்பை, விழாவனைத் தும் முடிந்து எல்லோரும் வெளிவரும்வரை மிகவும் சிரமப் பட்டு அடக்கிக் கொண்டனர். தரங்கிணியும், தனக்கு இன்று கிடைத்த பரிசையும் பெருமையையும் கண்டு, பிறரைப்போல தலைகால் தெரியாமல் ஆடவில்லை. வழக்கத்தைவிட அடக்கவுணர்ச்சியே கொண்டாள். பாரதி விழாத் தலைவரும், பரிசளிப்பு நடத்திய பிரமுகரும் பிறரும் புகழ்ந்து பாராட்டியபோது, அவள் நாணத்தால் அடங்கி ஒடுங்கியிருந்தாள். அதனுல்தான், அவள் விழா முடிந்ததும், தன்னைப் பாராட்டுபவர்களின் புகழ் மொழி களிலிருந்து விடுபட்டு, வெளிவந்து வீடுநோக்கித் தோழி களுடன் புறப்பட்டும், மௌனமாகவே நடக்கலானுள். சித்திரக் குளத்து வீதியிலுள்ள தன் உயர்நிலைப் பள்ளியி லிருந்து, கபாலீசுவரர் சந்நிதி கிழக்கு மாடவீதி வழியாக ரசிக ரஞ்சினி சபா பக்கம் திரும்பி, சாலை வீதி வழியையும் நடுத்தெருவையும் அப்பு முதலி தெருவையும் முறையே கடந்து, கச்சேரி ரோட்டை அடைந்து, ரோஸரி சர்ச் ரோட்டை அணுகும் வரை, யாரும் வாயைத் திறக்க வில்லை. அன்னம்போல மெல்ல அடியெடுத்து வைத்து நடக்கும் தரங்கிணியை, முன்னும் பின்னுமாகச் சூழ்ந்து

வந்தனர், காதரீன் முதலிய பள்ளித் தோழிகள். முதலில் அவர்கள் தரங்கிணிக்குக் கிடைத்த தங்கப் பதக்கத்தையும் பாராட்டுப் பத்திரத்தையும் வாங்கிப் பார்த்தவாறு தங்களுக்குள் பேசிக்கொண்டு வந்தனர். பின்னர்த்தான் செயின்ட் தாமஸ் கான்வென்டை நெருங்கும் சமயத்தில், தரங்கிணியின் மௌனத்தைக் கலைப்பதற்காகப் பாராட்டு மொழிகளை பரிமாறலாயினர்.

அம் மாணவிகள் செந்தோம் நெடுஞ்சாலையில் வட திசைநோக்கித் திரும்புகையில், கீழ்வானை ஊடுருவி நிற்பது போலக் காணப்படும் செந்தோம் சர்ச்சின் கண்டாமணி கணகணவென அடித்து, மாலை ஆறுமணியாகி விட்டது என்பதை அறிவித்தது. மாதாகோவில் மணியோசை, கடற்கரை யோரத்தில் வளர்ந்திருந்த தென்னை மரங்களிலும் பங்களாக்களில் வைத்து வளர்க்கப்பட்டுவரும் செடிகொடி மரங்களிலும் அமர்ந்திருந்த பறவைகளை நாலா பக்கமும் பறக்கச் செய்தது. செம்படவர்கள் கடலிலிருந்து செலுத்திவந்த கட்டுமரங்கள் வாயிலாகக் கொண்டுவந்து கொட்டிக் குவிக்கும் மீன்களை, ஏமாந்தால் கொத்திக் கொண்டு போவதற்காகக் கடற்கரையில் வட்டமிட்டுக் கொண்டிருந்த காக்கைகளும் பருந்துகளும், மாதாகோவில் மணி அடிப்பதைக் கேட்டுப் பயந்து, மேல் நோக்கிப் பறக்கலாயின.

செயிண்ட் பேடஸ் கான்வென்டின் பெரிய பெரிய மஞ்சள் கட்டிடங்கள் கண்ணில் பட்டதுந்தான், இம்மாணவிகளுக்கும் மனத்தில் தெம்புண்டாயிற்று போலும்! அப் பெண்மணிகளின் பகடிப்பேச்சும் அங்கிருந்துதான் ஆரம்பமாயிற்று. இப் பெண்களின் இனிய சிரிப்பு ஆரவாரத்தோடு, இடையிலுள்ள பெரிய கிறிஸ்தவப் பள்ளிக் கட்டிடங்கள், மைசூர் மகாராஜா மாளிகை, வானொலி நிலையத்தின் வெளியீட்டு அலுவலகங்கள் முதலியவைகளைத்

தாண்டிவந்து, கடலலையின் ஆரவாரமும் போட்டியிடுவது போல் கேட்கலாயிற்று.

அரசாங்கம் அநாதைப் பெண்களுக்குப் புகலிடமாக நடத்தும் ஸ்ரீஸதனம் கட்டிடத்தண்டை வரும்போது, சாரதா சொன்னாள்: "தரங்கிணி, இன்று நீ பரிசு வாங்கியதும் பாராட்டுப்பெற்றதும் எங்களுக்கு எவ்வளவு பெருமையாக இருக்கிறது, தெரியுமா? நம் பள்ளியின் தலைமையாசிரியை நன்றியுரை கூறுகையில் குறிப்பிட்டது நினைவிருக்கிறதல்லதா! 'பாரதி பாடல் போட்டியில், எங்கள் பள்ளியில் நான்காவது படிவம் படிக்கும் மாணவியான தரங்கிணி முதல் பரிசு வாங்கியது. ஆசிரியைகளான எங்களுக்கு மட்டுமல்ல, எங்கள் பள்ளிக்கே பெருமை தருவதாகும்' என்று அவர் பூரிப்போடு சொன்னார். அதுபோலப் பத்து மடங்கு பெருமையும் பூரிப்பும் எங்களுக்கு ஏற்பட்டிருக்கிறது."

"அதில் என்ன சந்தேகம்? விழாத் தலைவர் பாராட்டியது போல, நம் தரங்கிணி எதிர்காலத்தில் அகில இந்தியப் புகழ் பெறக்கூடிய பெரிய இசைவாணியாகப் போகிறாள். அப்பேர்பட்டவளுக்குத் தோழிகள் என்று சொல்லிக் கொள்ளுவதில், நமக்குள்ள உரிமையும் பெருமையும் வேறு யாருக்குக் கிடைக்கும்?"

உள்ளங்கொள்ளா மகிழ்ச்சியோடு காதரீன் சொல்லிக் கொண்டே, தரங்கிணியின் தோள்களை அன்போடு இறுகப் பற்றினாள். தரங்கிணி எனக்கு இப்போது ஏற்பட்டிருக்கும் பரவசத்தில், உன்னை அப்படியே கட்டிப்பிடித்து உச்சி மோந்து முத்தமிட வேண்டும் என்று உள்ளந் துடிதுடிக்கிறதடி! நடு வீதியாய் இருக்கிறதே என்று பார்க்கிறேன்."

காதரீன், மற்றத் தோழிகளைவிடத் தன்னிடம் மிகுந்த பேரன்பு கொண்டிருப்பவள் என்பதை, தரங்கிணி நன்கு அறிவாள். ஆதலால், அவள், தன் மன உணர்ச்சியை

வெளிப்படுத்தியபடி, எங்கே அவள் நாலுபேர் நடமாடும் இந்த வீதியில், தன்னைச் சேர்த்தணைத்து முத்தமிட்டு விடுவாளோ என்று அஞ்சி ஒதுங்கிப் போகலானுள். நல்லகாலம் இச்சமயம் எதிர்ப்புறத்திலிருந்து வேகமாக வந்த ஒரு சைக்கிள், ஓரடி தள்ளிப் போயிருந்தால், அவள்மீது மோதியிருக்கும்.

மாலை மயங்கி இருள் பரவும் அந் நேரத்திலும், சைக்கிள் சவாரி செய்துவந்த இளைஞனொருவன், சாமர்த்தியமாகப் பிரேக் போட்டுத் தன் வாகனத்தை நிறுத்த முயன்றான். ஆனாலும், சைக்கிள் தரங்கிணியை மோதிவிட்டுத்தான் நிற்கும் போலிருந்தது. ஆகவே, அவன் ‘அடடே! யாரது, நடுரோட்டில் ஆட்டம் போடுவது? நாலு பேர் நடமாடும் வீதியை உங்கள் வீடென்று நினைத்துக் கொண்டீர்களா?” என்று கூறிக் குரல் கொடுத்து கொண்டேவந்து, சைக்கிள் பெடலை வலக்காலால் அழுத்தி நிறுத்த முயன்றான். அவனுடைய ஒருகரம் தரங்கிணியைப் பிடித்து, ஒரு பக்கம் மெல்லத் தள்ளலாயிற்று.

இந்த எதிர்பாராத நிகழ்ச்சியைக் கண்டு, தரங்கிணி அதிர்ந்து போனாள். அவளுடைய தோழிகள் பயந்து கூச்சலிடலாயினர்.

இதற்குள் சைக்கிளில் வந்த வாலிபன் தன்னைச் சமாளித்துக் கொண்டான்; மறுபடியும் சைக்கிளில் ஏறிக் காரணீசுவரர் கோவில் தெருப்பக்கமாகத் திருப்பிச்செலுத்திப் போகுமுன், “பாதையில் நடக்கையில் நாலு பக்கமும் பார்த்துப் போகவேண்டும். இப்படிக் கண்ணை மூடிக் கொண்டு நடுவீதியில் கொட்டம் அடிக்கக்கூடாது. தெரிகிறதா! சைக்கிளாய் இருந்ததால் தப்பினீர்கள். காராயிருந்தால் உங்கள் கதி என்ன ஆகியிருக்கும்?...” என்று காட்டமாகப் பேசிவிட்டுச் செல்ல முயன்றான்.

"சைக்கிளில் வரும் நீதான் பார்த்து வருவதற்கென்ன? திருப்பத்தில் மணி அடித்துக்கொண்டு மெதுவாக வரக் கூடாதா? ஏரோப்ளேனில் பறப்பதாக ஐயாவுக்கு நினைப்புப் போலிருக்கு."

"யாரு, காதரீனு? இரட்டைவால் குருப்பா? அது தான் இப்படி .."

இருவரும் பேசிய தோரணையிலிருந்து, ஒருவர் முகம் மற்றவருக்குத் தெரியாத இருள் படரும் நேரத்திலும், ஒருவரையொருவர் இனங்கண்டு கொண்டார்கள் என்று மற்றவர்கள் தெரிந்துகொண்டனர்.

"சரி சரி. வாயை மூடிக்கொண்டு போ, ஜோஸப்!..."

ஜோஸப் காதரீனுடனிருந்த பெண்களைக் கூர்ந்து கவனித்துவிட்டுப் போகலானான். யார்மீது தன் சைக்கிள் மோதிவிடப் போகிறது என்று அஞ்சிப் பரபரப்போடு தள்ளினானோ அந்தப் பெண்ணைக் குறிப்பாகப் பார்த்ததும் ஒரு கணம் திகைத்து நின்றுவிட்டான். அவன் தொட்டுத் தள்ளியபோது, ஏற்படாத உணர்ச்சியும் புல்லரிப்பும் இப் பார்வையின்போது அவனுக்கு உண்டாயிற்று. தரங்கிணி யின் பேரழகு அவனைக் கிறுகிறுக்க வைத்தது. அதைச் சமாளிக்க முடியாமல், அவன் வேகமாகச் சைக்கிளைச் செலுத்திக்கொண்டு, அவ்விடத்தை விட்டுப் போய் விட்டான்.

முன்பின் அறியாத யாரோ ஒருவன் தன்னைத் தொட்டுத் தள்ளியதால், அதிர்ச்சியும் அருவருப்புங் கொண்ட தரங்கிணி, அவன் தொட்ட இடத்தைத் தன் கையால் தட்டிக்கொண்டே, காதரீனைப் பார்த்து, "யாரடி, அவன்? பலே போக்கிரியாயிருப்பான் போலிருக்கே! பெண்களைத் தொடக்கூடாது என்ற உணர்வுகூட இல்லாமல்......" என்று முகச் சுளிப்போடு சொன்னாள்.

"ஆபத்துக்குப் பாபமில்லையடி."

"அவன் அப்படித் தள்ளாமல் இருந்தாலல்லவா தெரிந்திருக்கும்? அவன் சைக்கிளில் அடிபட்டு, நீ சட்டினியாயிருப்பாய்..."

"நம்ம கண்களேதானடி பட்டு, தரங்கிணிக்கு இந்த ஆபத்து ஏற்பட்டது."

ஆளுக்கொரு பேச்சுப் பேசினர்.

"என் சகோதரனைப் பார்த்தால் உனக்குப் போக்கிரியாக்வா தோன்றுகிறது?"

"யாரு, அவன் உன் சகோதரனு? காதரீன், மன்னிச்சிக்கோடி!"

தரங்கிணி தவறு செய்தவள் போலத் திகைத்து நின்று விட்டாள்.

"பரவாயில்லையடி! தெரிந்தா சொன்னுய்?" என்ருள் காதரீன்.

இச் சமயம், கடற்கரையின் இருமருங்கிலும் இருந்த மெர்க்குரி விளக்குகள் ஏககாலத்தில் பிரகாசிக்கலாயின. அவற்றின் பேரொளியில் அப் பெண்கள் தேவகன்னிகைகள்போல் விளங்கலாயினர். தரங்கிணி இந்திராணிபோல் எழிலுடன் தோற்றமளித்தாள்.

## 2

'பொன்னுருகக் காய்ந்து, மண்ணுருகப் பெய்யும்' என்று முதியவர்கள் சொல்லிவரும் பழமொழியை மெய்ப்பிப்பதுபோல் இருந்தது, புரட்டாசி மாதத்திய காலை வெய்யில். முகத்தைத் தீய்க்கும் அந்த வெய்யிலையும் பொருட்படுத்தாமல், மயிலாப்பூர் பெரிய கடைவீதியின்

நடுவே இருந்த ஒரு வீட்டிலிருந்து, அறுபது வயதுக்கு மேற்பட்ட பாட்டியொருத்தி, தள்ளாடித் தள்ளாடி மெல்ல நடந்தவாறு, அதே வாடையின் கோடியிலிருந்த ஒரு சிறு வீட்டினுள் நுழைந்தாள். அவ்விதம் நுழையும்போதே, "காமாட்சி, காமாட்சி" என்று கூப்பிட்டுக் கொண்டே போனாள். நடையைக் கடந்து தாழ்வாரத்தின் ஒரு மூலையில் இருந்த சிறு அறையின் ஒருக்கணித்திருந்த கதவோரத்திலிருந்து, ஓர் இளம்பெண்ணின் முகம் குரல் கொடுத்து வந்த கிழவியை எட்டிப்பார்த்து விட்டு, உள்ளுக்கு இழுத்துக் கொண்டது. கூடத்தில் கயிற்றுக்கட்டிலில் சுருண்டு படுத்துக்கொண்டிருந்தவரும் குரல் கொடுக்கவில்லை. தன் குரலுக்கு எதிரொலி ஏற்படாது போகவே, 'வீட்டில் யாருமில்லை போலிருக்கிறதே! காமாட்சி எங்கேயாயினும் வெளியே போயிருக்கிறாளா?' என்று, அம்மூதாட்டி தனக்குத் தானே கேட்டுக் கொண்டாள். அடுக்களையிலிருந்த 'சொய்' என்ற தாளிப்புச் சப்தமும் மணமும் கிழவியின் செவியையும் மூக்கையும் தாக்கவே, அவள் தயங்கி நின்றாள்.

"காலை பத்து மணிக்குள்ளாகவே சாப்பாட்டு வேலையெல்லாம் முடிந்திருக்குமே! இன்று என்ன என்றுமில்லாத அதிசயமாகப் பதினொரு மணிக்கு மேலாகியும் சமையல் நடந்து கொண்டிருக்கு, காமாட்சி" என்று பாட்டி உரத்த குரலில் கேட்டுக்கொண்டே, அடுக்களையை நோக்கிப் போனாள்.

அடுத்தகணம் சமையல் உள்ளிருந்து கையில் கரண்டியுடன் வெளியே எட்டிப்பார்த்த காமாட்சியம்மாள்! "ஓ லட்சுமி பாட்டியா? வாங்க, பாட்டி வாங்க!" என்று வரவேற்றாள். அடுத்து "அடி தேனுகா, பாட்டிக்கு மணையை எடுத்துப் போடு" என்று குரல் கொடுத்தவள், உடனே தன் தவறையுணர்ந்து கொண்டு, "என் ஞாபகத்தைப்

பாருங்க பாட்டி! சின்னவள் பள்ளிக்குப் போயிருப்பதை மறந்துவிட்டு" எனச் சொல்லியவாறே, தானே ஒரு மணையை எடுத்துப் போட்டாள். "இரண்டு நிமிடம் இப்படியே உட்காருங்க; பாட்டி! இதோ வந்து விடுகிறேன்." என்று கூறிவிட்டு, அவள் அடுக்களைக்குள் மறுபடியும் போகலானாள்.

லட்சுமி பாட்டி சுவரைப் பிடித்துக்கொண்டே மெல்ல மணையில் உட்கார்ந்தவாறு, :"அவசரமொன்றுமில்லை. உன் வேலையை முடித்துவிட்டுத்தான் வா" என்றவள், "வழக்கமாக இந்த நேரத்தில் ஓய்வாக இருப்பாயே என்று தான் நினைத்து வந்தேன், பேசலாமென்று."

இதற்குள் அடுக்களைக்குள் போய் எஞ்சியிருந்த வேலையைக் கவனித்துக் கொண்டிருந்த காமாட்சியம்மாள், மெல்ல உள்ளிருந்தவாறே, "எல்லோரும் பள்ளிக்கூடம் போயிருந்தால், சமையல் வேலை நீங்க சொன்ன மாதிரிக் காலையிலேயே முடிந்திருக்கும். அகத்துக்காரரும் போகவில்லை; மூத்தவளும் இன்று பள்ளிக்குச் செல்லவில்லை; அதனால்தான் பெரிய பையனுக்கும் சின்னப் பிள்ளைகளுக்கும் மட்டும் ஏதோ செய்துபோட்டு அனுப்பிவிட்டு, அவருக்கு இப்போது பத்திய உணவு தயாரிக்கிறேன். அவருக்கு ஒரு வாரமாக உடம்பு சரியில்லை; சீதபேதி. ஏதேதோ மருந்து உட்கொண்டும் நின்றபாடில்லை. அவர் கூடத்தில் படுத்திருக்கிறாரே, பார்க்கவில்லையா பாட்டி?" என்றாள்.

"உன் அகத்துக்காரரா அது? யாரோ என்று நினைத்தேன்..."

சில விநாடிகளுக்குப்பின் நினைத்துக்கொண்டு, "அது சரி, தங்கம் ஏன் பள்ளிக்குப் போகவில்லை? எங்கே அவள்? அவள் பெயர் மட்டும் என் பொக்கை வாய்க்குச் சரியாகச் சொல்ல வரமாட்டேன் என்கிறது காமு."

"அவள் இன்று விடியற்காலையிலேயே வீட்டுக்கு விலக்காகி விட்டாள். அதனால்தான்—"

"ஓ! காஷுவல் லீவு என்று சொல்லு. நாலு நாட்களுக்கு, நீ ஒருத்தியே எல்லாவற்றையும் கவனிக்க வேண்டும், இல்லையா?"

காமாட்சியம்மாள் பதில் குரல் கொடுக்கவில்லை. லட்சுமி பாட்டி குழிவிழுந்த கண்களால் வீட்டின் நாலா புறத்தையும் ஆராயலானாள். எங்கிருந்தோ பறந்துவந்து கரையத் தொடங்கிய இரண்டொரு காகங்கள், குழாயடியில் போட்டிருந்த பற்றுப் பாத்திரங்களைத் தத்தம் அலகுகளால் குத்திக் கிளறி உருட்டிக் கொண்டிருந்தன. கதிரவன் உச்சிக்கு விரைந்து கொண்டிருப்பதைக் கூடத்து வரை படர்ந்திருந்த வெய்யில் காட்டியது. காமாட்சியம்மாள் வாழையிலையால் மூடப்பட்டிருந்த ஒரு கிண்ணத்தையும் தட்டையும் எடுத்துக் கொண்டு, சமையலறையிலிருந்து வெளிப்பட்டுக் கூடத்துக்குப் போனாள். ஆனால், சில நிமிடங்களிலேயே திரும்பிவிட்டாள்.

"நன்றாய் அயர்ந்து உறங்குகிறார். தூக்கத்தைக் கலைக்க வேண்டாம் என்று வந்துவிட்டேன். அவர் நன்றாகத் தூங்கி ஐந்தாறு நாளாகிவிட்டன. நடு இராத்திரியில்கூட, அடிக்கடி எழுந்து, புறக்கடைக்குப் போய்க் கொண்டிருந்தார்."

கொண்டு போனவைகளைச் சமையல் உள்ளுள் வைத்துக் கதவைச் சாத்திவிட்டு, அவள், பாட்டியின் எதிரில் வந்து உட்கார்ந்தாள்.

"தங்கத்துக்குப் போட்டுவிட்டு, நீயும் சாப்பிட்டு விட்டுவந்து உட்காரேன் காமு.

"உங்களை உட்கார வைத்துவிட்டார?" என்ற காமாட்சியம்மாள், "நாங்கள் இதற்குள் சாப்பிட மாட்டோம். இன்னும் நேரமிருக்கு. அவர் சாப்பிட்டானவிட்டு..."

"என்னைப் பற்றி யோசிக்காதே. நான் சாப்பாட்டு வேலையை முடித்துவிட்டுத்தான் வந்திருக்கிறேன்..."

"அம்மா, கொஞ்சம் தண்ணீர் கொடுக்கிருயா? தாகமாயிருக்குது" பைங்கிள்ளை மழலை மிழற்றுவதுபோல் இனிய ஒலி கேட்டது. காமாட்சியம்மாள், உடனே ஒரு குவளையில் தண்ணீர் முகந்து எடுத்துக்கொண்டு போனுள். "சாப்பிடுகிருயா, தரங்கிணி?"

"இப்போது வேண்டாம்."

மறுபடியும் காமாட்சியம்மாள் லட்சுமி பாட்டியிடம் வந்தமர்ந்தாள். பாட்டி அவளை ஒருகணம் ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "இப்படிக் கஷ்டப்படுகிறதற்கென்றே பிறந்திருக்கிருய் போலிருக்கு. உன்னைப் பார்க்கும் போதெல்லாம், எனக்கு என்னவோ போலாய் விடுகிறது. இப்படி நீ படும் அவஸ்தையில், உன் அகத்துக்காரரின் உடம்புக்கு ஒன்று வந்துவிட்டதென்ருல்? ஆமாம்; அவருக்கு எப்படிச் சீதபேதி கண்டது?"

"நோய் நொடியுண்டாவதற்குக் கூடக் காரணம் கண்டுபிடித்துச் சொல்லமுடியுமா பாட்டி! ஆனுல் ஒன்று; அவருக்கு ஒரு நிமிஷம் ஒய்வு ஒழிச்சல் கிடையாது. வேளை சாப்பாடு வேளைக்கு இல்லை. காலை விடிந்து எழுந்தால் டியூஷன், பள்ளிக்கூடம், ஸ்பெஷல் கிளாஸ் என்று திரிந்தால், உடம்புக்கு வராது என்ன செய்யும்?"

"பிள்ளைகளுக்குப் பாடஞ் சொல்வது என்ன லேசான காரியமா? தொண்டைத் தண்ணீரைக் கொடுத்துக் கத்தித் தொலைக்கணுமே...அதுவே மூலச்சூட்டை யெழுப்பியிருக்கும்...பால், மோர், நெய் முதலியவற்றைக் கொஞ்சம்

அதிகமாகச் சாப்பாட்டில் சேர்த்து வந்திருந்தால்...?'' என்று சொல்லி நிறுத்திவிட்டுக் காமாட்சியம்மாளின் முகத்தைப் பார்த்தாள் பாட்டி.

காமாட்சியம்மாளின் வதனத்தில் துயர மேகம் கவிழ்ந்தது. ''ஒருத்தர் சம்பாதித்து ஒன்பதுபேர் சாப்பிடணும். பிள்ளை குட்டி பெற்றவருக்கு, தாம் மட்டும் பால் மோர், பழங்களைச் சாப்பிட்டுப் போஷாவுக்குத் தேடிக் கொள்ள மனம்தான் வருமா பாட்டி?''

'நீ சொல்வதென்னவோ வாஸ்தவந்தான். ஒவ்வொருத்தர் இருக்கிறார்கள், 'பிள்ளைகளாச்சு, பெற்றவர்களாச்சு, நம்வரை பார்த்துக்கொண்டு போவதை விட்டு' என்று. உன் அகத்துக்காரர் அவ்விதமெல்லாம் எண்ணக் கூடிய கல்நெஞ்சுக்காரரல்லவே. உம்! எல்லாவற்றுக்கும் ஆண்டவன் இருக்கிறான். அவன் கைவிட மாட்டான்.''

கடைசியில், பாட்டி வேதாந்தம் பேசினாள்.

குத்துக்கால் இட்டு உட்கார்ந்திருந்த காமாட்சி, தன் பெருவிரலால் தரையை நிமிண்டியவாறே, ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தாள்.

சில விநாடிகள் இருவரிடையிலும் மௌனம் நிலவியது. இடையிடையே காகம் கரைவது ஒன்றைத் தவிர, வேறொன்றும் அவ்விடத்தில் நிலவியிருந்த அமைதியைக் கலைக்கவில்லை. 'கா, கா, கா என்று காட்டுக் கூச்சலிட்டுப் பறந்தோடும் காக்கைக் கூட்டத்தினிடையிலும், ஓரிரு காகங்கள் துணிகளை உலர்த்தும் கம்பிகள்மீது சாவதானமாக அமர்ந்து, கழுத்தைச் சாய்த்து, 'கா, ஹ் ஹ் ஹ் ஹ்' என்று அளபெடையிட்டுக் கரைந்து, இனிய ஓசையைப் பரப்பிக் கொண்டிருந்தன. இந்த ஓசையின் ஊடே, இனிய இசையொலி மெல்ல இழைந்து கொண்டிருந்தது. லட்சுமி பாட்டியின் பாம்புச்செவிகளில் இது எப்படியோ விழுந்து

*விடவே, அவள் கூர்ந்து கேட்கலானாள். ஏழிசையோடு இனிய பாடல் ஒன்று அவள் காதில் வந்து ரீங்கார மிடலாயிற்று.*

"மென்னடை யன்னம் பரந்து விளையாடும்
 வில்லிப்புத்தூர் உறைவான் தன்
பொன்னடி காண்பதோர் ஆசையினால் என்
 பொருகயற் கண்ணிணை துஞ்சா;
இன்னடி சிலொடு பாலமு (து)ஊட்டி
 எடுத்தஎன் கோலக் கிளியை
உன்னொடு தோழமை கொள்வன் குயிலே!
 உலகளந் தான்வரக் கூவாய்."

*"ஆஹா! ஆ! கர்ணாமிர்தமான கானம்! பாசுரமும் அருமையான பாசுரம். நம்ம தங்கமா பாடுகிறாள்?" இன்னிசை மிதந்துவந்த திசையை நோக்கியவாறே, பாட்டி பரவசத்தோடு கேட்டாள். அதற்குப் பதில் எதுவும் கிடைக்காது போகவே, காமாட்சியம்மாள் பக்கந் திரும் பிப் பார்த்தாள். அவள் கண்களில் நீர் சுரந்திருந்ததைக் கண்டு, பாட்டி பதறிப் போனாள்.*

*"காமாட்சி, ஏன் கலங்குகிறாய்?"*

*காமாட்சியம்மாள் பதட்டத்துடன் கண்ணீரை முந்தானையால் துடைத்துக்கொண்டு, "ஒன்றுமில்லை பாட்டி" என்றாள்.*

*"காமாட்சி, நீ மகா பாக்கியசாலி! மெத்தப் படித்த மனிதனொருவருக்கு வாழ்க்கைப் பட்டிருக்கிறாய்; மிகவும் புத்திசாலிப் பிள்ளைகளைப் பெற்றிருக்கிறாய்; பெண்ணாய்ப் பிறந்த ஒருத்திக்கு இதைவிட வேறென்ன வேண்டும்? என்ன குறை உனக்கு? சொல்லு."*

*காமாட்சியம்மாளின் மனநிலையைப் புரிந்துகொண் டவள் போலப் பாட்டி அவளுக்கு ஆறுதல் சொன்னாள்.*

காமாட்சியம்மாள் ஒன்றும் பேசவில்லை.

பாட்டி, தரங்கிணி இருந்த பக்கம் மீண்டும் கவனிக்க லானுள். அவள் முன் கேட்ட பாடலே, இராகாலாபனை யுடன் பன்னிப்பன்னிப் பாடப்படுவதை உணர்ந்த அவள், காமாட்சியம்மாள் பக்கந் திரும்பி, "காமாட்சி சாயங் காலம் தங்கத்துக்குத் திருஷ்டி கழிய ஏதாயினுஞ் சுற்றிப் போடு. என் பாழுங் கண்ணே பட்டாலும் படும்." என்று சொன்னுள். "நானும் என் ஆயுசில் எத்தனையோ பேர் பாடிக் கேட்டிருக்கிறேன். ஆனுல், தங்கம் பாடிய பாணி யைப் போல், அவளுடைய குரல் இனிமையைப் போல், நான் கேட்டதில்லை யென்றே சொல்லவேண்டும் ஆஹா! அவள் பாடும்போது குயில் கொஞ்சுவது போலல்லவா இருக்கு! அவள் பூர்வஜன்மத்தில் பழநியாண்டவனுக்குத் தேனுபிஷேமாக நிரம்பச் செய்திருக்க வேண்டும். அந்தத் தெவிட்டாத தித்திப்பை, இவள் தொண்டையில் அப்படியே வைத்து விட்டிருக்கிருன் சிவகுமாரன். இவளிட முள்ள சாரீர சம்பத்தை வேறு யாருங் கடன் வாங்க் முடி யாது."

"போங்க, பாட்டி! குழந்தை என்னவோ பாடினுல், அதைப் போய் இவ்வளவு பிரமாதப்படுத்திப் பேசுகிறீர் க்ள்."

காமாட்சியம்மாள் குறுக்கிட்டுப் பேசினுள்.

"காமாட்சி, நீ அடக்கமாகப் பேசுவதைக் குற்றஞ் சொல்லவில்லை. ஆனுல், நான் இப்போது சொன்னது அத்தனையும் உண்மையாக்கும். என்னுடைய அபிப்பிரா யத்தை, அக்கம்பக்கத்துப் பெண்கள் பேசுவதைப்போல் சாதாரணமாக மதித்துவிடாதே. எனக்கும் சங்கீத ஞானம் கொஞ்சம் உண்டு. எங்கள் குடும்பம் சங்கீத வாசனையுள்ள குடும்பம். தாய்வழியில் இரண்டொருவர் சங்கீத வித்வான்களாக்வும் இருந்திருக்கிருர்கள், ஆமாம்...

பாட்டி நீட்டி முழக்கினுள்.

காமாட்சியம்மாள் நாணப் புன்னகை செய்தவாறு, "உங்க அபிப்பிராயத்தை நான் லேசாக மதிக்கவில்லை பாட்டி! தரங்கிணி சாதாரணமாக உட்கார்ந்திருக்கும் போதும் சும்மா இருக்க மாட்டாள். ஏதாயினும் வாய்க்கு வந்ததைப் பாடிக்கொண்டிருப்பாள். அதுபோல்தான் இன்றும்..."

"இதுதான் சாதகம் என்பது. எல்லாராலும் முடியாதே..." என்று சொன்ன லட்சுமி பாட்டி, "ஏதோ பாட்டுப் போட்டியில் தங்கம் தங்கப் பதக்கம் வாங்கியிருக்கிருள் என்று எங்க பக்கத்து வீட்டுப் பார்வதியின் மகள் சொன்னுள். அதைப்பற்றி உன்னைக் கேட்டு விவரம் தெரிந்து கொள்ளத்தான் முக்கியமாக இன்றைக்கு வந்தேன். பேச்சுப் போக்கில் வந்த விஷயமே எனக்கு மறந்து போய்விட்டது. இதுவரை தங்கம் பாடி நான் கேட்டதில்லை. அதனுல்தான், இவள் போட்டியில் கலந்து கொண்டு பாடி முதற்பரிசு பெற்றிருக்கிருள் என்ற சமாசாரத்தைக் கேட்டதும், நான்ஆச்சரியப்பட்டுப் போனேன். என் பாராட்டைத் தெரிவிக்கவும் வந்தேன். ஆனுல், இன்று எதிர்பாராத நிலையில் அவள் பாடியதைக் கேட்ட பின்னர்தான், முதற் பரிசு வாங்கியது இவள் மேதைக்குப் பிரமாதம் ஒன்றுமில்லை; என்னைப்போன்ற கிழடுகளின் ஆசி மொழிகளுக்கும் அவசியமில்லை; எல்லாவற்றையும் விட பரம்பொருளின் கருணை பரிபூரணமாக இவளுக்கு இருக்கு என்று தெரிந்தது..."

சில நிமிடங்கள் வாய் ஓய்ந்திருந்த பாட்டி, மறுபடியும் ஏதோ நினைத்துக் கொண்டு, "சும்மா இருக்காமல் ஏதாயினும் வாய்க்கு வந்ததைப் பாடிக் கொண்டிருப்பாள் என்றல்லவா சிறிது முன் சொன்னுய்? நீ குறிப்பிட்டது போல் அவள் வாய்க்கு வந்ததை யெல்லாமா பாடுகிருள்?

பெரும்பாலான பெண்கள் கண்ட கண்ட சினிமா நாடகப் பாட்டுகளை யெல்லாம் பாடிச் சீரழிகிறார்களே! அது போலவா உன் பெண் இந்தி, தமிழ் சினிமா பாட்டுப் பாடிக் கொண்டிருக்கிறாள்? பகவானைப் பற்றிய பாசுரங் களை யல்லவா பாடுகிறாள்? இப்போது பாடினாளே!, அது என்ன பாட்டு? பிரபந்தப் பாடல்போல் அல்லவா இருக்கு!

வில்லிப்புத்தூர் உறைவான் தன்
பொன்னடி காண்பதோர் ஆசையினால் என்
பொருகயற் கண்ணிணை துஞ்சா!
குயிலே! உலகளந்தான் வரக் கூவாய்''

ஆகா! எவ்வளவு பக்தி ரசந் ததும்பியிருக்கு? இது யார் பாடிய பாட்டோ, தெரியவில்லை?''

''ஆண்டாள் பாடிய பாசுரம், பாட்டி.''

''நாச்சியார் திருமொழியா? அதுதான் அவ்வளவு அருமையாக இருக்கு? ஆனால், இந்தப் பாட்டை யாரும் பாடி நான் இதுவரை கேட்டதில்லை. பாமாலை சூடிக் கொடுத்த சுடர்க்கொடி பாடியுள்ள திருப்பாவைப் பாட் டெல்லாம் எனக்கு அத்துப்படி. 'வாரணமாயிரம்' பத்தில் சில பாடல்கள் மனப்பாடம் உண்டு. இப்போதுகூட ஒரு பாட்டு எனக்கு ஞாபகம் வருகிறது.

இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான்
நம்மை யுடையவன் நாராயணன் நம்பி
செம்மையுடைய திருக்கையால் தாள்பற்றி
அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன் தோழீ நான்''

நடுங்கும் குரலில் லட்சுமி பாட்டி பாடினாள். ஆனாலும், அதில் ராக லயமும் உருக்கமும் இருந்தது.

''இந்தக் கனாக் கண்டேன் தோழிநான்' பாடல்கள், 'கருப்பூரம் நாறுமோ! கமலப்பூ நாறுமோ, திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித்திருக்குமோ, பாடல்களையெல்

லாம்கூட, தரங்கிணி அருமையாகப் பாடுவாள். ஏன்? நீங்ககூட நன்ருகப் பாடுகிறீர்களே பாட்டி, இந்த வயதில்...?''

காமாட்சியம்மாள் சொல்லி நிறுத்தினுள். ''உன்மகள் அருமையாகப் பாடுவதைக் கேட்கவா வேண்டும். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு பருக்கை பதம்' என்பார்கள். அது போல், சற்று முன்னே கேட்ட ஒரு பாட்டுப் போதுமே. அவளுடைய சங்கீத விற்பன்னத்தைத் தெரிந்து கொள்ள! அவள் பொய்க்குரலில் கீழ் ஸ்தாயியில் பாடும்போதே இவ்வளவு தேவாமிர்தமாயிருக்கிறதே! இன்னும் அவள் வாய்விட்டுக் குரல் எடுத்துப் பாடினுல், எவ்வளவு நன்ருய் இருக்கும்...!''

''அவள் தீட்டாயில்லாதிருந்தால், உங்கள் முன்னே வந்து உட்கார்ந்து, நீங்கள் விரும்பும் பாடலைப் பாடச் சொல்லியிருப்பேன், பாட்டி.''

''அதற்கென்ன! அப்புறம் கேட்காமலா போகிறேன்? அது சரி; தங்கத்துக்கு யார் சங்கீத சிட்சை செய்து வைக்கிருர்கள்?''

''இவளுக்கு சங்கீத சிட்சை செய்து வைப்பதற்கு நாங்கள் காசுக்கு எங்கே போவோம்? அதெல்லாம் ஒன்றுமில்லை. இவளுடைய அப்பா, தமக்குத் தெரிந்த ராகம், பாட்டையெல்லாம் சொல்லி வைத்திருக்கிருர். இது வல்லாமல், எங்கெங்கே பிரபல வித்வான்களின் கச்சேரி நடந்தாலும், இவளை அழைத்துக் கொண்டு போவார். போதும் போதாதென்று ரேடியோ இருக்கவே இருக்கு. இது அல்லாமல், இவளுக்குக் குரல் இனிமையாயிருக்கிறதென்று பள்ளிக்கூடத்தில் பாட்டுச் சொல்லித் தருகிருர்கள். பாட்டு, நாடகங்களில் சேர்த்துவிடுகிருர்கள். இப்படியாக, பெரும்பாலும் கேள்வி ஞானம்தான்.''

"அப்படியா? சந்தர்ப்பமும் சௌகரியமும் வாய்த்து, இவளுக்கு முறையாகச் சங்கீதஞ் சொல்லிக் கொடுத்தால், பெரிய பாடகியாக விளங்குவாள்" என்று, தன் அபிப் பிராயத்தை வெளியிட்ட பாட்டி, "கடவுளுக்கு இது என்ன விளையாட்டோ தெரியவில்லை? புத்திசாலிகளுக்குப் பணவசதி தருவதில்லை; பணமுடையவர்களிடம் அறிவைச் சூனியமாக்கி விடுகிறான்."

"ஆண்டவனைச் சொல்லிப் புண்ணியமில்லை. பாட்டி! அவரவர் செய்த கர்மானுசாரப்படிதான் எல்லாம் அமைவதாகவும் நடப்பதாகவும் உங்களைப்போல் உலகானுபவமுள்ள பெரியவர்கள் சொல்லிவருகிறார்களே! உங்களுக்குத் தெரியாதா?"

மீண்டும் இவர்களிடையே அமைதி நிலவலாயிற்று. நடுத்தர வயதான காமாட்சியம்மாளின் அகன்றநெற்றியில் ஏற்பட்ட சுருக்கங்கள், அவள் மறுபடியும் சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறாள் என்பதை அறிவித்தன. அப் பேரமைதி யில், சில்வண்டுகள் மூங்கிலைத் தொளைசெய்கையில் 'கிர்' என்று இனிமையாக ரீங்காரம் செய்தவாறு சுற்றிச்சுற்றிப் பறப்பதுபோல, இன்னிசை மெல்ல இழைந்து கொண் டிருந்தது கேட்டது. ஆவல் உணர்ச்சியால் உந்தப்பட்ட வளாக, லட்சுமி பாட்டி, பொக்கை வாயில் போட்டுக் குதப்பிக் கொண்டிருந்த தாம்பூலத்தை உமிழும் சாக்கில் எழுந்து போய், தரங்கிணி இருக்கும் நிலையை கண்ணோட்ட மிடலானாள். பாட்டி பார்த்த சமயத்தில், தரங்கிணி தன் வயமிழந்த நிலையில் இருந்தாள்; தியான நிலையில் இருப்பது போல் அவள் கண்ணிமைகள் மூடியிருந்தன. செம்பவள வாய் மட்டும் மெல்ல அசைந்து கொண்டிருந் தது. மட்டிப்பால் ஊதுவத்தியிலிருந்து நறுமணப் புகை கிளம்பி, இழை இழையாக வளையமிட்டுப் பரவுவதுபோல, அவள் தனக்குள்ளாகவே பாடித் தானாகவே அனுபவித்துக்

கொண்டிருந்த இனிய கீதம், ராக விந்நியாசத்துடன் மெல்ல வெளியாய்க் கொண்டிருந்தது. அவளது மலர்க் கரமொன்று, தொடையில் தாளம் போட்டுக் கொண்டிருந் தது.

லட்சுமி பாட்டிக்கு ஆவல் அதிகமாய் விட்டது. தரங்கிணி இப்போது என்ன பாடலை எந்த இராக தாளத் துடன் பாடுகிருள் என அறியும் ஆசையுடன், குழாயடியி லிருந்த அண்டாவிலிருந்து செம்பில் தண்ணீரை மொண்டு வாயைக் கொப்பளித்துச் சாக்கடையில் உமிழ்வதுபோல் பாவனை செய்து, அங்கு தாமதித்து நின்று, செவியைச் சாய்த்துக் கேட்கலாஞள்.

> பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
> விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
> திருவடியும் கையும் திருவாயும் செய்ய
> கரியவனைக் காணுத கண் என்ன கண்ணே!
> கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்என்ன கண்ணே!

இளங்கோ அடிகள் சிலப்பதிகாரக் காவியத்தில் பாடி யுள்ள அற்புதமான பாடலொன்று, ஸ்ரீ ரஞ்சனி ராகத்தை வாகனமாகக் கொண்டு, அவ்விடத்தில் சஞ்சாரம் செய்து கொண்டிருந்தது

தரங்கிணி ஆத்மானுபவத்துடன் அனுபவித்துப் பாடிய இவ்வினிய பாடலைக் கேட்டு, லட்சுமி பாட்டி பக்திப் பரவசத்தால் மெய்ம்மறந்து நின்று விட்டாள். அவள் தன்னுணர்வு பெற்றபோது,

> படர்ந்து ஆரணம் முழங்கப் பஞ்சவர்க்குத் தூது
> நடந்தானை ஏத்தாத நா என்ன நாவே!
> நாராயணு என்னு நா என்ன நாவே!

என்ற பாடல் அடிகள், பியாகடை ராகத்தில் ஒலித்துக் கொண்டிருப்பதைக் கேட்டாள்.

இப் பாடல் பாடி முடிந்ததும், தரங்கிணி நா, "நாராயணு, நாராயணு, நாராயணு" என்ற திருமாலின்

திவ்விய திருநாமத்தை நாதப்பிரம்மத்தில் நிலைநிறுத்த முயல்வதுபோல், தொடர்ந்து துதி பாடிக் கொண்டே யிருந்தது. பாட்டியும், தன்னையறியாமல் நாராயணு என்று உச்சரிக்கத் தொடங்கி விட்டாள். வயது முதிர்ச்சியால் தளர்ந்த அவள் உடம்பு, பக்திப் பரவசத்தால் தடுமாற லாயிற்று. உடனே அவள், அருகிலிருந்த சுவர்ப்பிடியைப் பிடித்துத் தன்னைச் சமாளித்துக்கொள்ள முயன்ருள்.

காமாட்சியம்மாள் எழுந்து ஓடிவந்து பாட்டியைப் பிடித்துக் கொண்டாள். "என்ன பாட்டி, மயக்கமாயிருக் கிறதா?" என்று கேட்டவாறு, கையைப் பிடித்து அழைத்துப் போனுள். "எச்சிலைத் துப்பப் போனவங்க ரொம்ப நாழியா நிற்கிறீங்களே என்று நினைச்சேன். நான் சந்தேகப்பட்டது சரியாப் போச்சு. மற்றவங்களைப் போல் நீங்க புகையிலைகூடப் போடுவதில்லையே, மயக்க மாவதற்கு? ஒருவேளை பாக்கில் ஏதாயினும் பூச்சி கீச்சி இருந்ததோ?"

பழையபடி உட்கார்ந்த லட்சுமி பாட்டி தனக்குள் சிரித்துக் கொண்டாள். "நான் போட்டிருந்த வெற்றிலை பாக்கு மயக்கமுண்டாக்க வில்லையடி! உன் மகளின் பாட்டுத்தான் என் தலையைச் சுற்றச் செய்தது" என்று சொல்ல நினைத்தாள். ஆனுல், தன் அனுபவ நிலையை விவரிக்க மனமில்லாமல், பேசாமல் இருந்துவிட்டாள்.

"பாட்டி, எப்போ வந்தாங்க? அவங்களுக்கு மயக்கமா வந்தது?"

இக் குரலைக் கேட்டு இருவரும் திரும்பிப் பார்த்தனர். தரங்கிணி, அவள் இருந்த அறைக் கதவுக்கு வெளியே வந்து நின்று கொண்டிருந்தாள். காமாட்சியின் படபடத்த பேச்சு இவளுடைய கான நிலையைக் கலைத்து விட்டது போலும்!

"நான் வந்து ரொம்ப நாழியாச்சு, தங்கம். நீ ஏதோ சிந்தனையோடு பாடிக் கொண்டிருந்தாய் அதைக் கலைக்க வேண்டாமென்று வந்துவிட்டேன்."

"நீ சாப்பிடுகிருயா, தரங்கம்?"

காமாட்சியம்மாள் மகளைக் கேட்டாள்.

"அப்பாவுக்கு ஏதாவது கொடுத்தாயா அம்மா?"

அவள், தந்தை படுத்திருக்கும் இடத்தை எட்டிப் பார்த்தவாறே, வினவிஞள்.

"இல்லை. அவர் அலுத்துத் தூங்கிக் கொண்டிருக் கிருர்; அதைக் கலைக்கவேண்டாமென்று இருக்கிறேன்."

இவ்விதம் பதில் சொல்லியவாறே, காமாட்சியம்மாள் கூடத்துப் பக்கம் போஞள். அப்போதும் பரமசிவம் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தார்.

"அவரை எழுப்பாதே, அம்மா! இராத்திரியெல்லாம் தூக்கமில்லாமல் அடிக்கடி எழுந்து போய்க் கொண்டிருந் தார்..."

தரங்கிணியின் குரலில் இரக்கமும் பரிவும் தொனித் தன.

லட்சுமி பாட்டி, அவளுடைய அழகிய முகத்தையும் வாயசைவையுமே பார்த்துக் கொண்டிருந்தாள். இது கண்டு நாணங் கொண்டோ என்னவோ, தரங்கிணி, பழையபடி உள்ளே போய் உட்கார்ந்துவிட்டாள்.

கூடத்திலிருந்து சமையற்கட்டுக்குப் போய்ப் பார்த்துவிட்டுத் திரும்பிவந்த காமாட்சியம்மாள், "மோர் கொஞ்சங் கொண்டு வரட்டுமா, பாட்டி?" என்று கேட்டாள்.

"எனக்கு ஒன்றும் வேண்டாம். நீ சும்மா வந்து உட்காரு."

காமாட்சியம்மாள், முன்போல் பாட்டியின் எதிரில் குந்திஞள்.

பாட்டி, காமாட்சியம்மாளைச் சிறிது நேரம் பார்த்து விட்டு, "காமாட்சி, தங்கத்தைக் கட்டிக் கொள்ளப் போகிறவன் அதிர்ஷ்டசாலியாயிருப்பான். நான் சொல்லு கிறேன், வேண்டுமாஞல் பார். உன் மகள் ஒரு பெரிய குபேரன் வீட்டில்தான் வாழ்க்கைப் படுவாள்." என்று, பல்லுப்போன வாய் முற்றுந் தெரியக் கூறிஞள்.

காமாட்சியம்மாள் இதுகேட்டு மகிழ்ந்து போக வில்லை. அதற்குப் பதிலாக வருத்தந் தோய்ந்த குரலில், "நீங்க ஒண்ணு பாட்டி! எங்க ஏழ்மை நிலைக்கு எந்தக் குபேரன் மகன் தரங்கத்தைக் கலியாணஞ் செய்து கொள்ள வருவான்? 'இருக்கிறது குட்டிச் சுவரு; கஞக் காண்கிறது மச்சு மாளிகை' என்பாங்க. அதுபோல இருக்கு உங்க பேச்சு" என்ருள்.

"போடி பைத்தியக்காரி; உன் பெண்ணின் பெருமை உனக்குத் தெரியவில்லை. அவள் இருக்கிற அழகுக்கும் அறிவுக்கும், எத்தனை பேர் 'நான் நீ' என்று போட்டி போட்டுக் கொண்டு வரப்போகிருர்கள் பார்! அவள் வாய் திறந்து ஒரு பாட்டுப் பாடிஞல் போதுமே! மன்ஞதி மன்னனும் அவள் காலடியில் வந்து மண்டியிட்டு விழுவானே!..." என்ற பாட்டி, சிறிது நிறுத்தி, மறுபடி யும், "தங்கம் கலியாணஞ் செய்து கொள்கிறபோது, நான் உயிரோடு இருக்கிறேஞே இல்லையோ. ஆஞலும், அவளுக்கு சகல லட்சணமும் பொருந்திய ஒரு நல்ல வரன் வாய்த்து, ராஜாத்திபோல் சகல சௌபாக்கியங்களு டனும் அவள் நல்வாழ்வு வாழுஞ் சமயத்தில், நீ நினைத்துக் கொள்ளப் போகிருய், லட்சுமி பாட்டி சொன்னது நூற்றுக்கு நூறு உண்மைதான் என்று."

காமாட்சி மெல்ல நகைத்துக் கொண்டாள் "என்னமோ, நீங்க நான் சந்தோஷப்படட்டும் என்று ஏதோ சொல்லுகிறீர்கள்? அதற்காக நன்றி செலுத்துகிறேன். ஆனால், எங்கள் நிலையை நாங்கள் அறிந்துதானே எதையும் நினைக்கவேண்டும்; நடக்க வேண்டும். நீங்கள் இதைச் சொல்லுங்கள், விரலுக்குத் தகுந்தபடி தானே வீக்கம் ஏற்படும்?"

"காமாட்சி, என்ன அப்படிச் சொல்லிவிட்டாய்? உன்னை மகிழ வைப்பதற்காகவா இப்படிச் சொல்லுகிறேன் என்று நினைத்து விட்டாய்? நான் உன்னிடம் அப்படி முகமன் கூறவேண்டிய அவசியமென்ன இருக்கு?"

லட்சுமி பாட்டி பேசிக்கொண்டே போனவள், சிறிது நிறுத்தி, பின் வியப்போடு கேட்டாள்; "சொர்ண விக்கிரகம் போன்ற பெண்களைப் பெற்றிருந்தும், நீ ஏன் இப்படிப் பயப்படுகிறாய் என்று எனக்கு விளங்கவில்லை?"

"நான் பெண்ணாய்ப் பிறந்து புத்தி தெரிந்ததிலிருந்து, பெண்களைப் பெற்றுவிட்டவர்கள் பட்டுவரும் கஷ்டங்களையெல்லாம் பார்த்து வருவதால்தான், இவ்வளவு தூரம் பயப்பட வேண்டியிருக்கு. பெருஞ் செல்வமும் செல்வாக்கும் உடையவர்களே, தங்கள் பெண்களுக்கு நல்ல வரன்களைத் தேடிப்பிடித்துக் கலியாணஞ் செய்து முடிக்க முடியாமல் திண்டாடுவதைக் காணும்போது, ஏழை வாத்தியாருக்கு வாழ்க்கைப்பட்ட என் வயிற்றில் பிறந்த பெண்களுக்கு, தக்க வரனைக் கண்டுபிடித்துக் கலியாணம் முடிக்க எவ்வளவு கஷ்டப்படவேண்டியிருக்குமோ என்று நினைத்துப் பயப்படாமல் இருக்க முடியுமா?"

இப்படிச் சொல்லும்போது, காமாட்சியின் உடம்பு ஒரு குலுங்கி குலுங்கி அடங்கியது.

லட்சுமி பாட்டியின் பொக்கைவாய், சிரிப்பால் அகன்றது.

"உன் காலத்தையும் என் காலத்தையும் நினைத்துக் கொண்டு பேசுகிறாய் காமாட்சி. இப்போது காலம் போகிற வேகமான போக்கை உணர்ந்து பார்த்திருந்தாயானால், நீ இவ்விதம் பயப்படவும் மாட்டாய்; அங்கலாய்க்கவும் மாட்டாய்."

"என்ன காலம் மாறிப்போச்சு என்கிறீர்கள், பாட்டி? எனக்குத் தெரியமில்லை."

"ஏன் மாறவில்லை? நம்ம காலத்தில் பெண்கள் வயது வருவதற்கு முன்பே விவாகம் செய்து கொடுத்துவிட வேண்டும். 16 வயதுக்கு மேல்தான் பெண்களுக்குக் கலியாணஞ் செய்ய வேண்டுமென்று சட்டஞ் செய்யப் பட்டதுமே, வரதட்சிணை நிர்ப்பந்தம் எவ்வளவோ குறைந்து விட்டது."

'நீங்கள் எங்கேயோ இருக்கிறீர்கள், பாட்டி! நடைமுறையை நன்கு கவனிக்கவில்லை என்றே உங்கள் பேச்சிலிருந்து தெரிகிறது. பாலிய விவாகத் தடைச்சட்டம், வரதட்சணைத் தடைச்சட்டம் முதலியன வந்திருப்பதால், பணக்காரர்களுக்கு வேண்டுமானால் அனுகூலமான நிலை உண்டாயிருப்பதாகச் சொல்லாம். எங்களைப் போன்ற ஏழைக் குடும்பங்களுக்கு எவ்விதமான சௌகரியங்களும் இவற்றால் ஏற்படவில்லை. இந்த உண்மை உங்களுக்கு எப்படித் தெரியாமல் போய்விட்டது?"

காமாட்சியம்மாள் திடீரென ஏதோ நினைத்துக் கொண்டவளாக, "உங்களுக்கு இதைப்பற்றிச் சிந்தித்துப் பார்ப்பதற்கோ, சாதகபாதகங்களைத் தெரிந்து கொள்ளு

வதற்கோ அவசியமில்லை. உங்களுடைய பூர்வஜன்ம சுகிர்தம் உங்களுக்குப் பெண் பிரஜைகள் இல்லை. உங்களு டைய ஒரே குமாரருக்கும் பெண் பிள்ளைகளே இதுவரை பிறக்கவில்லை. அதனால்...''

பாட்டி குறுக்கிட்டாள்: ''அதனால் எனக்கு நிலைமை புரியாது என்கிறாய்? அதுதானே! நீ சொல்லுகிறபடியே பெண்களுக்கு வரன்தேடுகிற பிரச்னை பொதுவில் கஷ்ட மாக இருந்தாலும், உன் பெண்கள் விஷயத்தில் அவ்விதக் கஷ்டம் இருக்காது என்றுதான் நான் நினைக்கிறேன். ஏனென்றால், உனக்குப் பிறந்திருக்கிறதுபோல, ராஜ குடும் பத்தில் கூட இவ்வளவு லட்சணமான பிள்ளைகளைப் பார்க்க முடியாது. அப்படிப்பட்ட அழகுவாய்ந்த பெண்களைப் பெற்றுவிட்டு, நீ என்னமோ கவலைப்பட்டுக் கொண்டிருக் கிறாய்?''

''நீங்கள் சொல்லுவதுபோல, அழகும் அறிவும் வாய்ந்த பெண்களைப் பெற்றிருப்பதால்தான், இவர்களுக் குத் தகுந்தபடியான வரன்களைத் தேடிப் பிடிக்க வேண்டுமே என்ற கவலை அதிகமாக ஏற்பட்டிருக்கிறது. இந்தக் கவலையைத் தரங்கிணி இவ்வளவு சீக்கிரமாக ஏற் படுத்துவாள் என்று நாங்கள் நினைக்கவில்லை. இவளுக்கு இன்னும் பதின்மூன்று வயதுகூடப் பூர்த்தியாகவில்லை. அதற்குள் இவள் பருவம் அடைந்து விட்டாள்.''

''சீக்கிரம் வயது வந்ததற்காகச் சஞ்சலப்பட வேண்டியதில்லை. பத்மினி சாதிப் பெண்களாக இருப் பவர்கள், பன்னிரண்டாம் வயதிலேயே பருவம் எய்தி விடுவார்களாம். தங்கம், சகல விஷயத்திலும் உத்தம மான—பெண். அவள் சகல சௌபாக்கியங்களுடனும் க்ஷேமமாக வாழ்வாள்.''

''தரங்கிணி நாலாவது பாரத்துக்குப் பிரமோஷன் ஆனாள். அடுத்த மாதமே பெரியமனுஷி யாய்விட்டாள்

ஆனால், இந்தச் சமாசாரத்தை எங்கள் சொந்தக்காரர் களுக்குக்கூடத் தெரியப்படுத்தவில்லை. எங்கள் வீட்டுக்கு அடிக்கடி வந்துபோகும் உங்களைப்போல இரண்டொருத் தருக்குத்தான் தெரியும்..."

"நான் இதை யாருக்குஞ் சொல்லமாட்டேன்; பயப் படாதே!" என்று சிரித்துக் கொண்டே சொன்ன பாட்டி, "தங்கத்துக்குப் பதிமூனு வயதுதானு ஆகிறது? குறைந் தது பதினறு வயதாயினும் இருக்கும் என்று எண்ணியிருந் தேன். வயதுக்குமீறிய வளர்ச்சிதான், அவள் அறிவைப் போல..."

"நாங்கள் என்ன, இருக்கிறவர்கள் வீட்டுப் பிள்ளை களுக்குத் தருவதுபோலப் பாலும் நெய்யும், மோருமாகவா இதுகளுக்கு ஊட்டி வளர்க்கிறோம்? பருப்பில்லாத சோறும் கீரைக்கறியும் வேளாவேளைக்குச் சரியாகக் கிடைப்பதே துர்லபம். இந்த லட்சணத்தில் இதுகள் ஆறுமாதத்துப் பயிர்போலக் கருகருவென வளர்ந்து வருகின்றன. அடுத்த பெண் கல்யாணிக்கு, வருகிற ஐப்பசியில் பதினேராவது வயது தொடங்குகிறது. அவள் இப்போதே உயரத்திலும் பருமனிலும் தரங்கத்தை மீறிவிடுவாள் போலிருக்கிறது. பையன் என்னடா என்ருல் நோஞ்சாஞயிருக்கின்ருன். அவன் தரங்கத்தைவிடப் பெரியவன் என்ருல், யாரும் நம்பமாட்டேன் என்கிருர்கள்..."

"மணி தகப்பனைப் போலிருக்கிருன்; அதற்கென்ன செய்வது?"

"எங்க அகத்துக்காரருக்கு, இந்தப் பெண்கள் தலை யெடுக்க எடுக்க, கவலை அதிமாய்விட்டது. அவருக்கு வேறு நோயில்லை. இந்தக் கவலைதான் அவரை இரவு பகலாக வாட்டியெடுக்கிறது. பெண்களின் கலியாணத்துக்காகவே இவர் டியூஷன் நிறைய எடுத்திருக்கிருர். காலையில் ஐந்து

மணிக்கே கிளம்பிவிடுகிறார். இரவு ஒன்பது பத்து ஆய்விடுகிறது..."

"பள்ளிக்கூடத்தில் பகலெல்லாம் பிள்ளைகளிடம் சத்தம் போட்டுவிட்டு வந்து, காலையும் மாலையும் டியூஷனும் சொல்லிவிட்டு வருவதால்தான், உன் அகமுடையான் உடம்பு இப்படிக் கெட்டுவிட்டிருக்கு; பாவம்..."

காமாட்சி ஏதோ சொல்ல வாய் திறந்தாள். இத்தருணத்தில், பரமசிவம், "காமு, காமு" என்று கூப்பிடுங் குரல் கேட்கவே, "இருங்கள், பாட்டி; இதோ வந்துவிடுகிறேன்" என்று கூறியவாறே, எழுந்து போகலானாள்.

"அவரைப் போய்க் கவனி. நான் நாளை வருகிறேன்" என்று கூறிவிட்டு, லட்சுமி பாட்டி தன் வீட்டுக்குப் புறப்பட்டாள்.

## 3

அன்று சனிக்கிழமை; பிற்பகல் நாலரைமணியிருக்கும். நாட்டுச் சுப்பராய முதலி தெருவில், 'கனகராயர் இல்லம்' என்று, பொன்னிற எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட சலவைக்கல் பதித்த முகப்புடைய ஓர் அழகிய வீட்டினுள், இரு இளம் பெண்கள் கலகலவெனச் சிரித்துப் பேசிக்கொண்டே நுழையலானார்கள்.

அவர்களில் ஒருத்தி, "அம்மா, யார் வந்திருக்கிறது பார்த்தீர்களா?" என்று குரல் கொடுத்துக் கொண்டே போனாள். உடன்போன பெண், உள் வாசலில் நுழைகையில், சிறிது தயங்கி நிற்கலானாள்.

"ஏண்டி, பின் தங்குகிருய்? வாடி உள்ளே!" முன்னே போனவள் திரும்பி, இவளேக் கையை பிடித்து அழைத்துச் சென்ருள்.

அப்போதுதான் உள் அறையிலிருந்து கூடத்துக்கு வந்த 45 வயது மதிக்கத்தக்க மாதொருத்தி, "யாரது?" என்று கேட்டுக்கொண்டே, கீழிறங்கியிருந்த மூக்குக் கண்ணுடியைப் பார்வைக்குச் சரியாகத் தள்ளிவிட்டுக் கொண்டு, தன் மகளுடன் வந்த பெண்ணே நோக்கினுள்.

"ஓ! அடிக்கடி சொல்வாயே தரங்கிணி, தரங்கிணி என்று! அந்தப் பெண்ணு?......வா அம்மா குழந்தை; வா," என்று முகமலர்ச்சியுடன் வரவேற்ருள். தரங்கிணி நாணத்தால் தலேகுனிந்து கொண்டாள். ஆனுல், அவளு டைய மலர்க்கரங்கள், முன்னே லேசாக நரைத்திருக்கும் தலேமயிர்கள் பறந்து முகத்தில் விழ, அவற்றைத் தள்ளிக் கொண்டிருந்த அந்தஅம்மாளுக்கு, வணக்கஞ்செலுத்தின.

இதற்குள், உள்ளே சென்று ஒரு ஜமக்காளத்தை எடுத்துவந்து விரித்துப்போட்ட காதரீன், "எடுத்ததற் கெல்லாம் வெட்கப்படுவாய்; வந்து உட்காரடி இப்படி" என்று சொல்லித் தரங்கிணியைப் பிடித்து இழுத்து, உட்கார வைத்தாள்.

"என்ன குழந்தை, உனக்கு வெட்கம்? இதை உன் வீடு மாதிரியே நினேத்துக்கொள்; ஆமாம்" என்று கூறியவாறே, செல்லம்மாள், தரங்கிணி பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள். "காதரீன் உன்னேப்பற்றி எங்களிடம் ரொம்பச் சொல்லி யிருக்கிருள். அவள் பேச்சில் உன் பெயர் அடிபடாத நாள் கிடையாது. அவர்கூட உன்னேப் பார்க்கவேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தார். சற்று முன்பாகத்தான் வெளியே போனுர்; சீக்கிரம் திரும்பிவிடக்கூடும்..."

செல்லம்மாள் ஓசையோடு இழுத்து இழுத்துப் பேசும் போது, காதுகளில் அணிந்திருந்த பாம்படம் அழகாக ஆடலாயிற்று. கொட்டடிச் சேலையை அந்தம்மாள் உடுத்திருந்த விதம், அவர்கள், தென்பாண்டி நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதைத் தெரிவித்தது.

"ஆமாம், தரங்கிணி! நீ அப்பா வந்த பிறகுதான் போக வேண்டும். அவர் உன்னைப் பார்த்தால் சந்தோஷப் படுவார்."

காதரீன் சொன்னாள், பின், அவள் தாயை ஜாடை காட்டி, உள்ளே அழைத்துச் சென்றாள்.

தரங்கிணி இப்போதுதான் நிமிர்ந்து உட்கார்ந்தாள். அவளுடைய கருவிழிகள் நாலாபக்கமும் பார்க்கலாயின.

வீடு முழுதும் தும்பு தூசியின்றித் துப்புரவாகக் காணப்பட்டது. தப்பித்தவறி ஒரு கிழிந்த காகிதத்துண்டு கூடத் தரையில் இல்லாததைக் கண்டு அவள் வியப்படைந்தாள். மேஜை நாற்காலிகளும் மற்றச் சாமான்களும் அவையவை இருக்கவேண்டிய இடத்தில் ஒழுங்காக இருந்தன. சுவர்களில்கூட நறுக்குத் தெறித்தாற்போல நாலைந்து படங்களும், காலண்டர்களும் மாட்டப்பட்டிருந்தன. ஜன்னல்களுக்கும் கதவுகளுக்கும் அழகிய திரைச்சீலைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. கூடத்தின் இரு பக்கமும் உள்ள அறைகளில்கூட, அவசியமாக உபயோகப்படக் கூடிய சாமான்களைத் தவிர, வேறெதுவும் இல்லை. வீட்டை நன்றாக வைத்துக்கொள்ளுவதில், அவர்கள் எவ்வளவு சிரத்தையாயிருக்கிறார்கள் என்பதை அறிந்து, தரங்கிணி, குடும்பத் தலைவியான செல்லம்மாளை மனத்துக்குள் பாராட்டினாள்.

சுவரில் மாட்டப்பட்டிருந்த படங்கள், பெரும்பாலும் இயற்கைக் காட்சிகளைக்கொண்டவை. மேல்விட்டத்துக்கு அருகில் மட்டும் கிறிஸ்து பெருமானின் திருவுருவப் படங்கள் மூன்று மாட்டப்பட்டிருந்தன. நடுவே உள்ள பெரிய படத்தில், ஏசு கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்ட, உள்ளமுருக்குந் தெய்வீகச் சித்திரம் விளங்கிக் கொண்டிருந்தது. இடது பக்கத்திலிருந்த படத்தில், வலக்கரத்தில் வளைவான பெரிய தடியொன்றைப் பிடித்துக்கொண்டு, ஏசு தம் கழுத்தில் ஆட்டிக்குட்டியொன்றைத் தூக்கித் தோளில்போட்டுக் கொண்டிருக்கும் காட்சி திகழ்ந்து கொண்டிருந்தது. வலது பக்கத்திலிருந்த படத்தில், ஏசு ஒரு பாறையின்முன் மண்டியிட்டு அமர்த்து பாறைக்கல்மீது ஊன்றியவாறு கைகளைக் கூப்பி, எல்லாம் வல்ல இறைவனை நோக்கிப் பிரார்த்தனை செய்யும் அற்புதக் காட்டி, ஒளிர்ந்து கொண்டிருந்தது.

தரங்கிணி இப்படங்கள் ஒவ்வொன்றையும் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால், அவளால் நடுவிலுள்ள பெரிய படத்தை அதிகநேரம் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. ஏசுவின் இதயத்தில் ஒரு பெரிய ஆணி அறையப்பட்டு இரத்தமயமாகக் காணப்பட்டதையும், இரு உள்ளங்கைகளிலும் ஆணி அடிக்கப்பட்டிருந்த இடங்களிலிருந்து இரத்தங் கசிந்து கொண்டிருந்ததையும் கண்டு, அவள் உள்ளம் உருகினாள். மனிதகுலம் நல்வாழ்வு வாழவேண்டுமென்று நல்லுபதேசஞ் செய்த, ஏசுகிறிஸ்து போன்ற மகான்களைக்கூடக் கொடுமைப்படுத்திக் கொல்லக் கூடிய கொடிய மனம் படைத்தவர்கள், இக்குவலயத்தில் இருக்கிறார்களே என்று எண்ணி அவள் வருந்தினாள். கல்வியும் விஞ்ஞானமும் வளர்ந்து ஓங்கி, கலை நாகரிகங்களில் மக்கள் சிறந்து விளங்குவதாகச் சொல்லப்பட்டு வரும் இந்த இருபதாம் நூற்றாண்டிலேயே, சத்தியத்தையும் அஹிம்சையையும் அடிப்படையாகக் கொண்டு,

இந்திய மக்களுக்குச் சுதந்திரம் வாங்கித் தந்து நல்வழி காட்டிய காந்தியடிகளை, பட்டப் பகலில், அதுவும் பிரார்த் தனைச் சமயத்தில் சுட்டுக்கொல்ல ஒரு பாதகன் இருந்தான் என்றால், ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன், மக்கள் பெரும்பாலோர் காட்டுமிராண்டி வாழ்க்கை நடத் திக் கொண்டிருந்த காலத்தில், ஏசுபெருமானைக் கொல்வ தற்குச் சிலர் சதி செய்ததில் வியப்பெதுவும் இல்லை என்று அவள் தனக்குள் சமாதானம் செய்துகொண்டாள். ஏசு பெருமானின் கருணை பொழியும் கண்களும், சாந்தந் தவழும் திருமுகமும் தரங்கிணியின் உள்ளத்தை மிகவும் கவர்ந்தன. நல்லாயனுன ஏசு சின்னஞ்சிறு ஆட்டுக் குட்டி யைத் தம் தோளில் தாங்கிக் கொண்டு, தடியைப் பிடித்துக் கொண்டு நடக்குங் காட்சியையும், நீல வானத்தை எட்டிப் பார்க்கும் மலை முகட்டில் ஏகாந்தமாக இருந்து மண்டியிட்டுப் பிரார்த்தனை செய்யுங் காட்சியையும், அவள் மாறிமாறிப் பார்த்துக் கொண் டிருந்தாள்.

இச் சமயத்தில், யாரோ வெளியிலிருந்து வருவது போல் அரவங் கேட்டது. ஜோஸப்தான், சைக்கிளை நடை சுவரோரத்தில் சாத்திவிட்டு உள்ளே வந்தான். கூடத்தில் ஒரு பெண் தனியாக அமர்ந்திருப்பதைக் கண்டு ஆச்சரியங் கொண்டான். உள் வாசலில் நுழையும் முன்பு கதவோரத் தண்டை சிறிது நேரம் நின்று, அவள் யார் எனக் கவனித் தான். எங்கேயோ இவளைப் பார்த்த மாதிரியிருக்கிறதே என எண்ணி ஞாபகப்படுத்திப் பார்த்தான். சில விநாடிகளில், அவனுக்கு அவள் யார் என நினைவு வந்துவிட்டது. ஆகவே, அவன், அவள் தன் வருகையைக் கண்டு மருண்டு விடக் கூடாதென்ற எண்ணத்தோடு, ஓசைப்படாமல் மெல்ல நடந்து, தரங்கிணி அமர்ந்திருந்த இடத்துக்கு எதிரி லுள்ள (தெருப்பக்கமுள்ள) அறையில் நுழையலானன்.

ஏசுபெருமானின் திருவுருவப் படங்களில் தன் மனத்தைப் பதித்திருந்த தரங்கிணிக்கு, ஜோஸப் வந்ததோ தன்னைப் பார்த்ததோ, அறையில் நுழைந்தோ சிறிதும் தெரியவில்லை. அடுத்த சில நிமிடங்களில், காதரீன் ஒரு தட்டத்தில் ஜாங்கிரி, காராபூந்தி, கேக், வாழைப்பழம் ஆகியவைகளை வைத்து எடுத்துவந்து, தரங்கிணி முன் வைத்தாள். செல்லம்மாள், வெள்ளி டம்ளரில் தண்ணீர் கொண்டு வந்தாள்.

இவற்றைக் கண்டு தரங்கிணி மருளமருள விழித்தாள். காதரீன் அவளுடன் அமர்ந்து, "சாப்பிடு, தரங்கிணி! சும்மா பார்த்துக் கொண்டிருக்கிறயே!" என்று அன்போடு கூறினுள்.

அப்போதும் அவள் வாய் திறந்து ஒன்றும் பேசவில்லை மீண்டும் பல நிலைகளிலுள்ள ஏசு பெருமானின் திருவுருவங்களைப் பார்க்கலானுள்.

"ஒருவேளை கிறிஸ்தவர்கள் வீட்டில் சாப்பிடலாமா என்று யோசிக்கிறுப் போலிருக்கு...!" என்று, யோசனையோடு செல்லம்மாள் சொன்னுள்.

"நீங்க ஒரு கர்நாடகம், அம்மா! தரங்கிணியைப்பற்றி உங்களுக்கு ஒன்றும் தெரியாது. அவள் அப்படியெல்லாம் வித்தியாசம் பாராட்டுகிறவளாக இருந்தால், என்னைப் போன்றவர்களுடன் சிநேகமாகப் பழகவே மாட்டாள்" என்று தரங்கிணிக்காகப் பரிந்து பேசிய காதரீன், "இவள் தயங்குவதற்கு வேறு ஏதோ காரணமிருக்கு. (சிறிது யோசித்து) உம், நான் முட்டாள்தனஞ் செய்துவிட்டேன். இவள் கேக்கைத் தொடக்கூட மாட்டாள்; அதில் முட்டை கலந்திருக்கிறதல்லவா! இவர்கள் உணவு விஷயத்தில் வீர சைவம். இது ஞாபகமில்லாமல், மற்றப் பலகாரங்களுடன்

கேக்குகளையுஞ் சேர்த்துக்கொண்டு வந்தது என் தப்புத் தானே!"

தரங்கிணி முன்வைத்த பலகாரத் தட்டை எடுத்துக் கொண்டு எழுந்து, "இரு, வேறே கொண்டு வருகிறேன்" என்றாள்.

தரங்கிணி, அவள் பக்கந் திரும்பி, "காதரீன், வேண் டாம். இன்று நான் விரதம்; ஒருவேளைதான் சாப்பிடு வேன்" என்று கூறித் தடுத்தாள்.

"எப்போ பார்த்தாலும் உனக்கு விரதம், உபவாசந் தான் நீ பத்தாம்பசலி மனுஷியடி! தப்பிப்போய் இருப தாம் நூற்றாண்டில் பிறந்துவிட்டாய்."

காதரீன் அலுத்துக் கொண்டாள்.

செல்லம்மாள், "விரதம் என்றால் வற்புறுத்தாதே, ாதரீன்!" என்று சொல்லியவாறே, தரங்கிணியை நோக்கி ரன். அப் பார்வையை எதிரிட மாட்டாமல், அவள் தலை விழ்ந்து கொண்டாள்.

செல்லம்மாள், தரங்கிணியின் எதிரே அமர்ந்து,அவள் தாளைப்பற்றி, "குழந்தை, நீ நாங்கள் தந்த பலகாரத்தை ாப்பிட மறுத்ததற்குக் காரணம் என்ன என்பதை நான் |றிந்துகொள்ள விரும்பவில்லை. விரதம் காரணமாகவும் |ருக்கலாம்; வேறே காரணமும் இருக்கலாம். ஒருவர் 'காடுப்பதை ஏற்பதும் ஏற்காததும் அவரவர் விருப்பத் தைப் பொறுத்த விஷயம். ஆனால், நீ என் மகளோடு ன்பாகப் பழகி வருவதால், உனக்கு ஒரு விஷயத்தைத் தளிவுபடுத்த ஆசைப்படுகிறேன். எங்கள் குடும்பத்தைப் ற்றி, அந்தஸ்தைப் பற்றி, எந்த அளவுக்கு நீ தெரிந்து வத்திருக்கிறாயோ, அல்லது காதரீன் உனக்குச் சொல்லி |ருக்கிறாளோ, எனக்குத் தெரியாது..."

செல்லம்மாள் சிறிது பேசியதுமேமேல் மூச்சு வாங்கியதால், சில விநாடிகள் நிறுத்தி, மீண்டும் பேசலானுள்: "கிறிஸ்தவர்கள் என்றதுமே இந்துக்களாகிய உங்களில் பலருக்கு இளப்பமான எண்ணம் என்பது எனக்குத் தெரியும். ஏனென்முல், நம் தமிழ் நாட்டில் கிறிஸ்தவர்களாயிருப்பவர்கள், பெரும்பாலும் உயர்ஜாதியினரால் பலவிதமாகக் கொடுமைப்படுத்தப்பட்டுவந்த தாழ்த்தப்பட்ட வகுப்பாரும், பிற்போக்கு சமூகத்தாரும்தான். ஆண்டவனைக் கோயிலில் போய்த் தொழுவதற்குக்கூடத் தங்களுக்கு உரிமையில்லாததால், அவர்கள் மனம் நொந்து கிறிஸ்தவர்களாகவும் முகம்மதியர்களாகவும் மாறியிருக்கின்றனர். இதை யாரும் மறைக்க முடியாது. இதுவன்றிச் சிலர் உயர்ந்த உத்தியோகத்துக்காகவும், பணவசதியைப் பெறுவதற்காகவும், காதலை யுத்தேசித்தும் மதம் மாறியிருக்கின்றனர். ஆனுல் நாங்கள் அப்படியல்ல; நாங்கள் கார்காத்த வேளாளர்கள்; திருநெல்வேலிப் பகுதியைச் சேர்ந்தவர்கள். எங்கள் மூதாதையர் கிறிஸ்தவ மதத்திலுள்ள சிறந்த கொள்கையால் கவரப்பட்டே சேர்ந்திருக்கின்றனர். நம்முடைய பாவங்களைப் போக்குவதற்காகவே ஏசுகிறிஸ்து இப்பூவுலகில் அவதரித்திருக்கிமுர்; நமக்குப் பாவமன்னிப்பு அளிப்பதற்காகவே தேவகுமாரன் நம்மிடையே தோன்றினுர் என்பதை நம்பி, நாங்கள் கிறிஸ்துவர்களாக இருந்து வருகிறோம்..."

இதனிடையே பலகாரத் தட்டை உள்ளே கொண்டு போய் வைத்துவிட்டு வந்த காதரீன், "அம்மா, என்ன பெரிய சங்கீர்த்தனம் செய்கிறுப் போலிருக்கிறதே!......" என்று சிரித்துக் கொண்டே சொன்னுள்.

செல்லம்மாளின் பேச்சை இடைமறித்து ஏதோசொல்ல வந்த தரங்கிணி, காதரீன் குறுக்கீட்டால் சிறிது நின்று பின்

பேசத் தொடங்கினுள்: "அம்மா, நீங்கள் கொண்டுவந்து கொடுத்த பலகாரத்தை நான் சாப்பிடாததால், ஏதோ மனத்தில் நினைத்துக்கொண்டு பேசுகிறீர்கள். நீங்கள் நினைக்கிறுப்போல், நாங்கள் ஜாதி மதவெறி பிடித்தவர்களல்ல; குறுகிய மனப்பான்மையும் உடையவர்களல்ல. பொதுவாகவே, எங்கள் இந்து மதம் எம்மதமும் சம்மதம் என்று ஏற்றுக் கொள்ளும் இயல்புடையது; உலகிலுள்ள எல்லா மதங்களிலும் ஏதாயினும் ஓர் உண்மை இருக்கும், சிறந்த தத்துவம் இருக்கும் என்று எண்ணி மதித்து வருவது. எங்கள் மகான்கள், ஞானிகள், எல்லோருமே சமரச ஞானத்தைப் போதித்து வந்திருக்கிறுர்கள். உலகமக்கள் அனைவரையும் சகோதரர்களாகப் பாவிக்க வேண்டும்; சமத்துவமாக நடத்த வேண்டும்; சகல ஜீவராசிகளிடத்திலும் அன்பும் இரக்கமும் காட்டவேண்டும் என்று உபதேசித்துச் சென்றிருக்கிறுர்கள். வேற்றுமையில் ஒற்றுமையும், பன்மையில் ஒருமையும் காணவேண்டும் என்று அவர்கள் பயிற்சி யளித்திருப்பதால், சமயப்பொறை, அதாவது சகல மதங்களுக்கும மதிப்பளித்துப் போற்றுவது என்ற பெருங்குணம், எங்களிடம் உள்ளதுபோல உலகில் வேறு எப்பகுதி மக்களிடமும் காணமுடியாது. ஆமாம்—"

"தரங்கிணி நன்ருகப் பேசுகிறுளே!" செல்லம்மாள் வியப்புடன் சொன்னுள்.

"எங்கள் பள்ளி இலக்கிய மன்றக் கூட்டங்களில் பேசுவதில்கூட இவள்தான் முன்னணியில் நிற்பாள்; இவள் பேசினுல்கூடப் பாடுவதுபோல்தான் இனிமையாக இருக்கும். இவள் பேசும்போது கூர்ந்து கவனியுங்கள்; வீணை மீட்டுவதுபோல் ஒலிப்பதைக் கேட்கலாம்."

தரங்கிணியின் முகம் நாணத்தால் சிவந்தது. "எப்போதும் என்னைக் கேலிசெய்வதுதான் காதரீனுக்கு

வேலே, அம்மா!" என்ற பீடிகையுடன், அவள் மீண்டும் பேசலானுள்: "நீங்கள் கேளுங்கள், நான் சொல்ல வந்ததைச் சொல்லி முடித்துவிடுகிறேன். நீங்கள் சொல்லியது போல், எங்களில் சிலர் அறியாமை காரணமாக, எங்கள் மதத்தின் உண்மைத் தத்துவத்தை உணர்ந்து கொள்ளாதது காரணமாக, பிற மதங்களைப் பற்றித் தவருக நினைக்கலாம்; சொல்லலாம். ஆனால், பெரும்பாலோர் அப்படியில்லை என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். நாங்கள் வைதீகமதத்தை மேற்கொண்டிருப்பவர்கள்; ஆனாலும், என்னுடைய தந்தையார் பரந்த மனப்பான்மை கொண்டவர். அவர் மறந்துங்கூடப் பிற ஜாதியாரைப் பற்றியோ, பிற மதத்தாரைப் பற்றியோ இழிவாகப் பேசமாட்டார். அந்தக் குணம் பிள்ளைகளாகிய எங்களுக்கும் உண்டு. அதிலும் 'மனம் ஒத்தால் இனம் ஒத்துவிடும்' என்பார்கள். காதரீனை நான் உடன்பிறந்த சகோதரியாக மதித்துப் பழகிவருகிறனே யொழிய, வேறு விதமாகக் கருதி நடக்கவில்லை. அப்படியிருந்தால், பள்ளிக்கூடத்தளவில் எங்கள் தொடர்பு நின்றுவிட்டிருக்கும்."

"பரவாயில்லையே! தரங்கிணி பெரிய மனுஷி போலல்லவா பேசுகிருள்? வயதான எனக்குக் கூடத் தெரியாத விஷயங்களல்லவா அவள் வாயிலிருந்து வருகின்றன?"

செல்லம்மாள் பாராட்டிப் பேசினுள். இச் சமயம் வெளிவாசலண்டை ஏதோ அரவம் உண்டாயிற்று. பேச்சு சுவாரஸ்யத்தில், இதை யாரும் கவனிக்கவில்லை.

"கிறிஸ்து பெருமானைப்பற்றி எங்கள் பெரியோர் பேசி வரும் அபிப்பிராயங்களைக் கேட்டிருக்கிறீர்களா? காந்தியடிகள், சமயம் நேரும்போதெல்லாம் ஏசுவின் பெருமையைப் பலபடப் பேசியும் எழுதியும் வந்தார். அவருடைய பிரார்த்தனைக் கூட்டங்களில் ஏசுபிரானின்

பொன் மொழிகளைச் சொல்லாத நாளில்லை. மகாகவி பாரதியார்கூடக் கிறிஸ்து பெருமானைக் குறித்துப் போற்றிப் பாடியிருக்கிறார்......" தரங்கிணி தொடர்ந்து பேசினாள்.

"அப்படியா?" செல்லம்மாள் வியப்புடன் கேட்டாள்.

"ஆமாம். எங்கப்பா எத்தனையோ தடவை எங்களுக்குப் படித்துச் சொல்லியிருக்கிறார்......"

"பாரதியார், எங்கள் ஏசுகுறித்துப் பாடியிருக்கும் பாட்டை ஞாபகம் இருந்தால் சொல்லேன், தரங்கிணி!"

தரங்கிணி நெற்றியை விரல்களால் வருடியவாறு யோசிக்கலானாள். அடுத்த சில நிமிடங்களில், அவளுடைய குமுத வாயிலிருந்து பின்வரும் அடிகள் வெளி வரலாயின:

"உண்மை யென்ற சிலுவையிற் கட்டி
    உணர்வை ஆணித் தவங்கொண்டு அடித்தால்
வண்மைப் பேருயிர் யேசு கிறிஸ்து
    வான மேனியில் அங்கு விளங்கும்"

காதரீன் கேட்டாள், "ஏண்டி, தரங்கம்! நீ இதுவரை சொன்னதே யில்லையேடி, பாரதியார் இப்படி ஏசு பெருமானைப்பற்றிப் பாடியிருக்கிறார் என்று?"

"சந்தர்ப்பம் ஏற்படவில்லை."

"குழந்தை, அந்தப் பாட்டை இன்னொரு முறை சொல்லு" என்று செல்லம்மாள் கேட்டுக்கொண்டாள்.

தரங்கிணி அந்நான்கு அடிகளையும் மீண்டும் ஒருமுறை நிதானமாகச் சொன்னாள்.

"இதைப் பாடுவதற்கென்னடி, தரங்கம்! எங்களைப் போலச் சாதாரணமாகப் படிப்பதுமாதிரிச் சொல்லுகிறாயே! பாட்டைப் படிக்கக்கூடாது; பாடவேண்டும் என்று நீ எங்களுக்கு அடிக்கடி அறிவுறுத்துவாயே? இப்போது நீ மட்டும்—? ஓ! வெட்கமோ? பரவாயில்லை.

இப் பாட்டைப் பாட்டி, கேட்போம். இங்கே வேறே யார் இருக்கிறார்கள்?"

"ஆமாம், குழந்தை; பாடு; கேட்கலாம்" செல்லம் மாளும் ஆசையோடு கேட்டாள்.

தரங்கிணி தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டு, அப்பாடல் அடிகளை நாதநாமக்கிரியை ராகத்தில் பாடினாள். பின் அவள், "பாரதியார் இதுபோன்று மூன்று பாடல்கள் பாடியிருக்கிறார். நீங்கள் இவ்வளவு ஆர்வமாகக் கேட்ப தால், அவற்றில் முக்கியமான ஒன்றை நானே பாடுகிறேன்; கேளுங்கள்..."

தாயும் மகளும், "பாடு தரங்கம், பாடு" என்று ஒரே சமயத்தில் சொன்னார்கள்.

தரங்கிணி, நீலாம்புரி ராகத்தில் பாடத் தொடங் கினாள்:

"ஈசன் வந்து சிலுவையில் மாண்டான்
எழுந்து உயிர்த்தனன் நாள்ஒரு மூன்றில்:
நேசமா மரியா மக்த லேனா
நேரிலே இந்தச் செய்தியைக் கண்டாள்:
தேசத்தீர்! இதன் உட்பொருள் கேளீர்:
தேவர் வந்து நமக்குட் புகுந்தே
நாசமின்றி நமை நித்தங் காப்பார்
நம்அகந்தையை நாம் கொன்று விட்டால்.

அவளுடைய உள்ளம் அப் பாட்டின் பொருளிலும் இசையிலும் லயித்துப் போய்விட்டது என்பது, அவள் சிலுவையில் அறையப்பட்ட ஏசு கிறிஸ்துவின் திருவுருவப் படத்தின்மீது, தன் கயல் கண்களைப் பதித்தவாறு, பரவச நிலையில் இருந்ததிலிருந்து தெரிந்தது.

"ஆஹா! பாட்டும் அபாரம்; பாடப்பட்ட இசையும் அபாரம்,"

இவ்விதஞ் சொல்லிக்கொண்டே காதரீனின் தகப்பனார் உள்ளே நுழைந்தார். அவர் மேல் உத்தரீயத்தை எடுத்துச் சுவர் மூலையிலிருந்த கொக்கி யொன்றில் மாட்டியவாறு, "ஏன் காதரீன், நீ அடிக்கடி சொல்வாயே! உன் அருமைச் சிநேகிதி தரங்கிணி என்று; அந்தப் பெண் இவள்தானு?" எனக் கேட்டார். "மிகச் சூட்சுமமான புத்தி; நல்ல சங்கீத ஞானம். இவள் பேச்சும் பாட்டும் என்னை அப்படியே உலுக்கிவிட்டன. இவள் உங்களுடன் பேசியதையெல்லாம் நான் நடையிலிருந்தவாறு கேட்டுக்கொண்டுதான் இருந்தேன்."

சந்தோஷநாதம் பிள்ளையின் வருகையைக் கண்டதும், தரங்கிணி திடுக்கிட்டு எழுந்து விட்டாள்.

"பரவாயில்லை, குழந்தை, உட்காரு" என்றமர்த்திய பிள்ளையவர்கள், "நீ இப்படி என்னைப் பார்த்ததும் சங்கோசப்பட்டுப் பேச்சை நிறுத்திவிடுவாய் என்றுதான், நடையிலேயே நின்றுவிட்டேன், சிறிது நேரம்" என்றார்.

இதற்குள், செல்லம்மாள் எழுந்துபோய்க் கணவன் கால் அலம்ப ஒரு செம்பில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள்.

"குழந்தை, நீ குறிப்பிட்ட பாரதி பாடல்கள் மூன்றையும், உனக்கு அவகாசம் ஏற்படும்போது காதரீனிடம் எழுதிக் கொடுத்தனுப்பு; என்ன?" என்று கேட்டுக்கொண்டார், சந்தோஷநாதம் பிள்ளை.

"அதற்கென்ன! நாளைக்கே எழுதிக் கொடுத்தனுப்புறேன், ஐயா!"

காதரீன் தரங்கிணியை உட்காரச்சொல்லி வற்புறுத்தினாள்.

"நேரமாகி விட்டது, காதரீன்! போகவேண்டும் என்று, அவளுக்கு மெல்லப் பதில் கூறிய தரங்கிணி, தற் செயலாக எதிர்அறையைப் பார்த்தாள். தீட்சண்யமான இரு கண்கள் அவளேயே கூர்ந்து கவனித்துக் கொண்டிருப் பதைக் கண்டுவிட்டு, விதிர்ப்புற்றுப் போனுள்.

சுடர்மணிகள் போல் விளங்கிய அக் கண்மணிகள் வேறு யாருடையனவுமல்ல; காதரீனின் சின்ன அண்ண னை ஜோஸப்பின் இளமை ததும்பும் கண்களே யாகும். யார் கண்ணிலும் படாமல் ஓசை செய்யாமல் உள்ளே போன அவன், இதுவரை அவ்வறையின் உள்ளேயே பேச்சு மூச்சில்லாமல் அமைதியாயிருந்து, தரங்கிணியின் சாதுரிய மான பேச்சையும், இனிய பாட்டையும் கேட்டுக் கொண் டிருந்தான்.

# 4

அடையாறு கலாக்ஷேத்திரத்தில் கோடைக் காலச் சங்கீதப் பயிற்சி வகுப்புக்குப் போய்விட்டு, தரங்கிணி தன் சக மாணவிகளுடன் பஸ்ஸில் திரும்பிக்கொண்டிருந்தாள். பிற்பகல் பெரிதும் கழிந்துங்கூடச் சூரியவெப்பங் குறைய வில்லே. சூட்டைத் தணிக்க விசிறிகொண்டு விசிறுவது போல, கடல்காற்று மெல்ல வீசத் தொடங்கிப் பகல் உஷ்ணத்தைப் படிப்படியாக ஆற்றிக்கொண் டிருந்தது. கடல் நடுவே தென்படும் தீவு அரண்மனையைப் போல் காட்சியளிக்கும் செட்டிநாட்டு அரசர் மாளிகையின் அழகையும்,சமுத்திரத்துடன் சங்கமமாகும் அடையாற்றில் மிதந்து ஓடும் படகுகளின் வேகத்தையும், தூண்டில் போட்டும் வலேவிரித்தும் மீன்பிடிக்கும் செம்படவர்கள் அடிக்கடி எழுப்பும் ஒலியையும், கடல்காக்கைகளும் பருந்து களும் மணற்பரப்பில் வற்றல்போல உலரப் போட்டுள்ள

மீன்களைக் கொத்திச் செல்ல வட்டமிட்டவாறு கூச்சலிடும் அரவத்தையும், நடுக்கடலில் பெரிய படகிலும் கட்டு மரங்களிலும் சென்று பெரிய வலைகளை வீசிச் சிறியதும் பெரியதுமான மீன்களைப் பிடித்துக்கொண்டு வந்து கரையில் குவித்துப் போட்டவாறு மீனவர்கள் விநோதமாகச் சத்தஞ் செய்வதையும், அவற்றைச் செம்படவப் பெண்கள் தங்கள் கூடைகளில் அள்ளிப் போட்டுக்கொண்டே கடற்கரையிலேயே வாங்க வந்தவர்களிடம் விலை கூறி ஆர்ப்பாட்டஞ் செய்வதையும், இவற்றுக்கும் மேலாக அமைதியுடன் கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் காணப்பட்ட நீலக் கடலின்மீது காற்று அடிப்பதனுல் எழுதி அலைகளையும், கரை புரண்டுவரும் அலைகளின் நுரைசெய்யும் ஆரவாரத்தையும், பஸ்ஸில் பிரயாணஞ் செய்தவாறே தரங்கிணி முதலிய சங்கீத மாணவிகள் கண்டும் கேட்டும் வந்துகொண்டிருந்தனர்.

தரங்கிணியுடன் பிரயாணஞ் செய்துவந்த மாணவிகள் ஒவ்வொருவராக மந்தவெளிப்பாக்கத்திலும், அப்பு முதலித் தெருமுனையிலும், சாந்தோம் சர்ச் எதிரிலும் இறங்கிப் போயினர். ஆதலால், இவள் மட்டுமே அகில இந்திய ரேடியோ நிலையத்தண்டையுள்ள பஸ் ஸ்டாப்பில் இறங்கினுள். பிளாட்பாரத்தின்மீதே அவள் மெல்ல நடந்து, காரணீசுவரர் கோயில் தெருவழியாகத் திரும்பலானுள். அவ்விதம் நடக்கையில், அவள் அன்று சங்கீதப் பள்ளியில் கற்றுக்கொடுத்த புதிய கீர்த்தனையையும் தனக்குள்ளாகவே சாதகஞ் செய்துகொண்டு போகலானுள். இந்நிலையிலேயே சில கஜதூரம் அவள் நடந்திருப்பாள். 'கிணுகிணு' என்று மணியடித்தவாறு, ஒரு சைக்கிள் அவளைப் பின் தொடரலாயிற்று. பாட்டுக் கவனத்தில் நாம் வீதியின் நடுவே போய்விட்டோமோ என்று தரங்கிணி எண்ணி, சைக்கிள் போக இடந் தரும்

நோக்கத்தோடு ஒதுங்கி நடக்கலானாள். ஆனால், அவள் ஒதுங்கிச் செல்லச்செல்ல, அச்சைக்கிளும் ஒதுங்கி ,அவளைப் பின் தொடரலாயிற்று. 'இதென்னடா, தொந்திரவு? என்று, தரங்கிணி ஒரேயடியாக ஒதுங்கி நின்றுவிட்டாள், அந்தச் சைக்கிள் முன்னே போகட்டும் என்ற எண்ணத் துடன். ஆனால், முன்னே போன அச்சைக்கிள் மறுபடியும் அவள் பின்னால் வரலாயிற்று. அவளுக்கு முன்னும் பின்னு மாகப் போவதும் வருவதுமாக, அச்சைக்கிளைச் செலுத்திக் கொண்டிருந்த வாலிபன் ஆட்டங்காட்டலானான். அவ் விதம் அவளை அலைக்கழித்தவன் வேறு யாருமன்று; காத ரீனின் சின்ன அண்ணனான ஜோஸப்பே யாகும்.

அவனைக் கண்டதும் தரங்கிணி திடுக்கிட்டுப் பயந்து போனாள். ஜோஸப் அவளைப் பார்த்து, அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

"கிண்கிணி; ரொம்ப தூரம் போய் வருகிறாயா?"

தரங்கிணி அதற்குப் பதில், சொல்லவுமில்லை; அவனைத் திரும்பிப் பார்க்கவுமில்லை.

"எங்கே, உங்க் ரெட்டைவால் கூட்டம் எதையும் காணோம்? தனியாகவே கிளம்பிவிட்டாயே?"

தரங்கிணி மூச்சு விடவில்லை; வேகமாக நடக்க லானாள்.

"கிண்கிணி, இப்படி என்னைத் திரும்பிப் பாரேன். நான் உன் அருமைச் சிநேகிதி காதரீனின் சகோதர னில்லையா? உன்னிடம் ஒரு வார்த்தை பேசக்கூடாதா?"

இவன் இவ்விதம் பேசப் பேச, தரங்கிணியின் நடை யில் வேகம் அதிகமாயிற்று, அவள் கீர்த்தனம் பாடுகையில் போடும் சுரம் துரிதகாலத்தில் சஞ்சரிப்பது போல. ஜோஸப் பும், தன் சைக்கிளை அவள் நடைக்கேற்றவாறு வேகமாக் விட்டான்.

"நீ பவளவாய் திறந்து, என்னிடம் ஒரு வார்த்தை பேசினால், முத்தா சிந்திவிடும்? என் தங்கையிடம் நேரம் போவதுகூடத் தெரியாமல் பேசுகிறாயே?"

'தான் காதரீனைப் பார்க்க அவள் வீட்டுக்குப் போகையில் எல்லாம் ஜாடைமாடையாகக் கேலி செய்து வந்தவன், 'கிண்கிணி' 'கிண்கிணி' என்று கிண்டலாகப் பெயரிட்டு அழைத்துப் பரிகாசஞ் செய்பவன், இன்று தன்னை நாலுபேர் போகும் நடுவீதியிலேயே வழிமறித்து வம்பு செய்யத் தொடங்கிவிட்டானே' என்று எண்ணி, தரங்கிணி மிகவும் வருந்தலானாள். அவனிடமிருந்து எப்படித் தப்புவது என்றும் யோசிக்கலானாள்.

ஜோஸபோ தாங்கள் போகுமிடத்தில் யாராயினும் எதிர்ப்பட்டாலோ, அல்லது பின்னால் வந்தாலோ, தரங்கிணிக்கு முன்னால் சைக்கிளை ஓட்டிக்கொண்டு போய் விடுவான். ஜனநடமாட்டமில்லாத இடங்களில், அவன் அவளுக்கு அருகே சைக்கிளை விட்டவாறு, ஏதாயினும் பேசிக்கொண்டே மெல்ல வருவான். அவ்விதம் அவன் அவளை நெருங்கி வருகையில் எல்லாம், தரங்கிணி ஓடவே செய்வாள்.

ஜோஸப் இதைக் கண்டு நகைத்தாறு, "கிண்கிணி, என்னைக் கண்டு ஏன் நீ இப்படிப் பயப்படுகிறாய்? உன்னை நான் அப்படியே விழுங்கியா விடுவேன்? நான் ஒன்றும் ராக்ஷஸன் இல்லை; உன்னைப்போல் மனித ஜன்மந்தான்."

"மனிதனாக இருப்பவனா காட்டுமிராண்டிபோல் இவ்வாறு அநாகரிகமாக நடக்கிறாய்?"

தரங்கிணி வாய்விட்டுக் கேட்கவில்லை. மனத்துக்குள் கறுவினாள்.

அவளை முன்னாலும் போகவிடாமல், பின்னேயும் நடக்கவிடாமல், ஜோஸப் சைக்கிளில் துரத்திக்கொண்டு

வருவதைக் கண்டு, தரங்கிணிக்கு அழுகையே வந்து விட்டது. 'யாராயினும் பார்த்தால் ஏதாயினும் நினைத்துக் கொள்வார்களே' என்ற எண்ணத்தால், அவள் மிகச் சிரமப்பட்டுத் துக்கத்தை அடக்கிக் கொண்டாள்.

"கிண்கிணி, நீ என்னிடம் பேசக்கூட வேண்டாம். உன் குமுத வாயைத் திறந்து ஒரு பாட்டுப் பாடிவிடு. நான் கேட்டுவிட்டுப் போய் விடுகிறேன். பாடமாட்டாயா, கிண்கிணி?"

அவ்விதம் கேட்டுக்கொண்டே ஜோஸப், சைக்கிளைத் தரங்கிணியை உராய்ந்து கொண்டு போவது போல் மிக நெருக்கமாகச் செலுத்தினான். தரங்கிணி கதிகலங்கிப் போய்விட்டாள். அடுத்த கணம், அவன், அவள் மோவாயைப் பிடித்து விட்டிருப்பான்.

இச்சமயம், இரு பக்கங்களிலிருந்தும் மக்கள் வரலாயினர். ரிக்ஷாக்களும், சைக்கிள்களும், கார்களும் வந்து கொண்டிருந்தன. ஆகவே ஜோஸப், தரங்கிணியை விட்டு விட்டுச் சிறிது தள்ளித் தன் சைக்கிளை ஓட்டினான்.

தன்னை இந்த ஆபத்திலிருந்து காப்பாற்றுமாறு, தரங்கிணி இறைவனை மனத்தில் தியானித்த வண்ணம், மறுபக்கத்தில் ஓரமாகப் போகலானாள். 12-ம் எண்ணுள்ள வீட்டிலிருந்து, யாரோ ஒரு மாது, இவளைப் பார்த்து விட்டு, "தரங்கம், தரங்கம்! சற்று இங்கே வந்து விட்டுப் போயேன்" என்று கூப்பிடலானாள். தன்னை யாரோ கூப்பிடுவது கேட்டுத் தரங்கிணி நின்று பார்த்தாள். தனக்குப் பரிச்சயமான ஒரு அம்மாமிதான் அழைக்கிறார்கள் என்று அறிந்ததுமே, தனக்கு இந்த ஆபத்துச் சமயத்தில் புகல் கிடைத்துவிட்டது என்று மகிழ்ச்சி கொண்டாள். எனவே, அவள் உடனே, 'இதோ

வந்து விட்டேன், மாமி" என்று பதிலுக்குக் குரல் கொடுத்துக் கொண்டே, அவ் வீட்டினுள் சரேலென நுழைந்து விட்டாள். ஜோஸப், தான் அவ் வீட்டில் புகுவதைப் பார்த்துவிடக் கூடாது என்று, அவள் எண்ணினுள்.

ஆனுல், ஜோஸப், தரங்கிணி ஒரு வீட்டினுள் நுழைவதைக் கண்டுவிட்டான். அவள் திடீரென அவ்விதம் ஒரு வீட்டிற்குள் போவது, தன்னிடமிருந்து தப்பித்துக் கொள்வதற்காகவே என்று அவன் ஊகித்துக்கொண்டான். 'அவள் எவ்வளவு நேரம் அவ் வீட்டில் இருப்பாள்? வரட்டும், பார்க்கலாம்' என்று, அவன் சிறிது நேரம் காத்திருந்தான். வெகு நேரமாகியும் அவள் வெளி வராமல் போகவே, அவன், தனக்குள் சிரித்துக்கொண்டே, தன் விடுநோக்கிச் சைக்கிளை வேகமாக விடலானுன்.

## 5

தரங்கிணி, சிந்து பைரவி ராகத்தை மிகவும் மெல்லத்தான் ஆலாபனை செய்தவாறு வீதியில் வந்துகொண்டிருந்தாள். ஆனுலும் வேனிற்காலத்து மாலைத் தென்றற் காற்று, அவளுடைய மாதுரியமான குரல் ஒலியைச் சுமந்து சென்று, அவளது வருகையைத் தெருத்திண்ணைத் தூணில் சார்ந்த வண்ணம் சிகரெட் புகைத்துக் கொண்டிருந்த ஜோஸப்புக்கு, முன்கூட்டியே அறிவித்துவிட்டது. அவள் தன் தங்கையைப் பார்க்கத்தான் வருகிருள் என்று அவன் உணர்ந்து கொண்டான். தனக்குள்ளாகவே ராக விந்நியாசஞ் செய்து பாடி அனுபவித்துக் கொண்டு, பரவச நிலையில் மிதந்தவாறு மெல்லச் செல்லும் அவள், அச்சமயம் அவன் கண்களுக்குத் தேவ

கன்னிகை போலவே காட்சியளித்தாள். அவள் நடையழகை ரசித்துக் கொண்டிருந்த அவன், தரங்கிணி தங்கள் வீட்டைக் கடந்து செல்வதைக் கண்டு பதற்றமுறலானன். "ஏ! இசைவாணி கிண்கிணி! இங்கு வராமல் எங்கே போகிருய்? உன் தோழி காதரீனைப் பார்க்க வரவில்லையா? அவள் உன் வருகையை எதிர்பார்த்துக் காத்திருக்கிருளே?" என்று, அவன் குரல் கொடுத்தான். குறும்பு தொனிக்கும் அக் குரலைக் கேட்டதும், தரங்கிணி மந்திரத்தால் கட்டுண்டு நிற்கும் பாம்புபோல், அப்படியே நின்று விட்டாள். ஜோஸப் அவளை உரக்கக்கூடக் கூப்பிடவில்லை. அவன் தகப்பனர் வீட்டினுள் இருந்ததால், தான் அவளை அழைப்பது அவர் செவியில் விழுந்துவிடப் போகிறது என்ற அச்சத்தால், அவன் மெல்லவே குரல் கொடுத்துக் கூப்பிட்டான். ஆனாலும் அவன் 'இசைவாணி கிண்கிணி' என்று விளித்ததில், கிண்கிணி என்று அவன் அவளைக் காணும் போதெல்லாம் இட்டு அழைக்குஞ் செல்லப் பெயர் அவள் காதில் எப்படியோ விழுந்து விட்டது. ஆகவே, அவள் திடுக்கிட்டு நின்று, தன்னையறியாமலே திரும்பிப் பார்த்தாள். அப்போதுதான் அவளுக்குத் தன் மெல்லடிகள் செய்துவிட்ட தவறு தெரிந்தது. அடுத்த கணம் அவள், தன்னைச் சுதாரித்துக்கொண்டு பின்னுக்கு நடந்து வந்து, காதரீன் வீட்டினுள் நுழைந்தாள்.

தான் வருஞ் சமயத்தில், ஜோஸப் அங்கு இருப்பான் என்று தரங்கிணி எதிர்பார்க்கவில்லை. இந்த நேரத்தில் அவன் வேலைசெய்யும் அலுவலகத்தில் இருக்கவேண்டியவன். இன்று வழக்கத்துக்கு மாருக அவன் இருந்தது, அவளுக்கு அதிர்ச்சியைத் தந்தது. அவன் அவளைக் காணும்போதெல்லாம் ஏதாயினும் கிண்டல் செய்வதால், தரங்கிணி அவன் கண்களில் படாமல் இருக்க வெகுவாக

முயன்முள். அவன் இல்லாத சமயம் பார்த்தே, அவள் காதரீனைப் பார்த்துப் பேசிவிட்டுப்போக வருவாள். அவனை எதிர்பாராதவாறு கண்ட அச்சத்தினுல், அவள் தலை குனிந்தவாறு, அவசரம்அவசரமாக வாசற்படியைக் கடந்து உள்ளே போகலானுள்.

தூண் பக்கம் சாய்ந்திருந்த ஜோசப், தரங்கிணி வாசற் படியேறி வருஞ் சமயம் பார்த்து, அவளை வழிமறிப்பது போல் நடைபாதையில் குறுக்கே நின்றவாறே, "இசை வாணி, ஏழை பக்கம் ஏறெடுத்துப் பார்க்கக் கூடாதா? நான் ஒருத்தன் நிற்பது உன் மை விழிக்குத் தெரிய வில்லையா?—" என்று கேலி செய்யலானுன்.

இருந்தாற்போலிருந்து கருமேகங் கூடியிருந்த வானத் தில் மின்னல் கீற்று ஒன்று ஏற்பட்டு மறைந்தது. இதை யடுத்து, "கடபுடா' என இடி இடிக்கலாயிற்று.

தரங்கிணிக்கு எங்கிருந்து இவ்வளவு கோபம் வந்ததோ தெரியவில்லை. "அட! சட்; பேசாமல், போ வழியைவிட்டு விலகி! காலிப்பயல் போல வாயில் வந்தபடி உளறிக் கொட்டிக் கொண்டிருக்கிறுயே?—"

தரங்கிணி இவ்விதஞ் சீறி விழுவாள் என்று ஜோஸப் சிறித்தும் எதிர்பார்க்கவில்லை. அவன் தன்னைச் சமாளித்துக் கொள்ளுவதற்கே, சில விநாடிகள் ஆயின. தான் கிண்டல் செய்யும்போதெல்லாம் தலைகுனிந்து கொண்டு போய்விடும் தரங்கிணியா, இப்படி எரிந்து விழுகிறுள்?

"நல்ல ஒரு குடும்பத்தின் பெயரைக் கெடுக்க இப்படி யொரு காவாலி தலையெடுத்திருக்கு; மற்றப் பிள்ளைக்ள் ிருக்கிறுர்களே, இப்படியா கிறுக்குப் பிடித்து ஆடு றுர்கள்?"

அவளது இச் சொற்கள், கன்னத்தில் அறைவதுபோல் ஜோஸப்பின் செவிகளில் விழுந்தன. அவன் அதிர்ந்தே போனான். ஆனாலும், தான் அவளுக்குப் பயந்து போனதாக அவள் அறிந்துவிடக் கூடாது என்ற எண்ணத்துடன், விரைப்பாகப் பேசலானான்:

"என்ன பாடகியம்மாளுக்கு இன்று நாக்கு ரொம்ப நீளுகிறது?"

இதற்குள் நடைக்குப் போய்விட்ட தரங்கிணி, ஜோஸபின் கரகரத்த குரலைக் கேட்டுச் சடக்கெனத் திரும்பி வந்து, அவன் காது கேட்கும்படியான தூரத்தில் நின்று, "எனக்கு நாக்கு நீளுகிறதா? உனக்கு நீளமானதா? என்று நான் போனபின்னர் நீயே நினைத்துப்பார். அது மட்டுமல்ல, ஒரு வயதுப்பெண்ணிடம் முகத்தில் மீசை அரும்பிவிட்ட ஒரு வாலிபன் இவ்விதமெல்லாம் வம்புப் பேச்சுப் பேசலாமா என்றும் சாவதானமாகச் சிந்தித்துப் பார். உன் மூளைக்கே எட்டும்" என்றாள்.

இப்போது படபட'-வென்ற ஓசையுடன் சில நிமிடங்கள் மழை பெய்துவிட்டு நின்றது.

"உன்னைப்போல் வாலிபர்கள் இருக்கிறார்களே, அவர்கள் எல்லாம் இப்படியா இளம் பெண்களிடம் வம்பு அளக்கிறார்கள்? பரிகாசம் பண்ணுகிறார்கள்?" என்று சீற்றத்துடன் சொல்லத்தொடங்கிய தரங்கிணி, "வெளியே உதாரணம் தேடப்போவானேன்? உங்க வீட்டிலேயே உன்னைப்போல ஆண்பிள்ளை உன் பெரிய அண்ணன் இருக்கிறாரே; அவர் என்னைப்போன்ற பெண்களைக் கண்டால் எப்படி நடந்துகொள்ளுகிறார் என்பதை நீ ஒரு தடவையாயினும் பார்த்ததில்லையா? அவர் பெண்களை எதிரிட நேர்ந்தால், அவர்கள் அவரைப் பார்த்துத் தலைகுனிந்து கொண்டு ஒதுங்கி போவதற்குமுன், தான் தலையைக் கவிழ்த்துக்

கொண்டு, அவர்கள் பார்வையிலிருந்து விரைந்துபோய் விடுகிறார். அப்பேர்ப்பட்ட உத்தமருடன் நீயும் வந்து பிறந்திருக்கிறாயே?''

''சும்மா அளக்காதே, பெண்ணே! எல்லாம் எனக்குத் தெரியும்...''

ஜோஸப் கடித்துக் குதறிவிடுவதுபோல் கூறினான்.

''எல்லாம் தெரிந்து பேசுகிற லட்சணமா இது? நான் உனக்குச் சொல்லி வைக்கிறேன் இன்று. இதுவரை என்னைப் பார்த்துப் பரிகாசம் பேசி வந்ததுபோல், இனி நீ ஏதாயினும் குறும்பாகப் பேசினால், மரியாதை கெட்டுவிடும், ஆமாம், நான் கண்டிப்பாகக் கெட்டவளாய் விடுவேன்...... ஜாக்கிரதை!''

கனசாரீரம் வாய்ந்த பாடகர் சங்கீதக் கச்சேரி செய்யும்போது வந்து விழும் சங்கதிகளைப்போல, அவளுடைய மெல்லிய குரல் கலந்து, வார்த்தைகள் சூடேறி வெளி வந்தன.

ஜோஸப் இப்போது உண்மையில் நடுங்கியே போனான். தரங்கிணி இதுவரை இப்படிக் கடுமையாக யாருடனும் பேசி அவன் கேட்டதில்லை. அவள் தனித்துத் தன் எதிர்ப்படும்போதெல்லாம், அவன் எக்கச்சக்கமாக ஏதோ ஏளனமாகப் பேசி அழக்கூட வைத்திருக்கிறான். அப்போதெல்லாம், ஒரு முறைகூட அவனை ஏறிட்டுப் பார்த்ததில்லை; எதிர்த்து ஒன்றும் பேசியதில்லை; அப்பேர்ப்பட்டவள் இன்று...!

''என் சிநேகிதியுடன் பிறந்தவனாயிற்றே என்று தாட்சணியங் காட்டிவிட்டுப் பேசாமல் போகப்போக நீஆட்டம் போடுகிறாயா? இனி நீ என்னிடம் வாலாட்டத் தொடங்கினால், உன் முகத்தில் காரித்துப்பி நாலுபேர் சிரிக்க வைத்து விடுவேன், தெரிந்துகொள்.''

தரங்கிணி அச்சமயம் பேசிய பேச்சின் தொனி, வீணை நரம்புகள் ஜங்காரநாதம் செய்வது போலிருந்தது.

"இன்னொன்றும் நீ தெரிந்து வைத்துக்கொள்ள வேண்டும். உன்னைப் போன்ற போக்கிரித்தனமுள்ள ஆண்கள், என்ன அட்டகாசம் செய்தாலும் அஞ்சியொடுங்கிப்போவதும், அவர்கள் செய்யும் அக்கிரமங்களை எதிர்த்து நிற்கத் தைரியமில்லாமலும், வெளியே சொல்ல வெட்கப்பட்டும் தங்களுக்குள்ளேயே குமுறிக் கொண்டிருப்பதும் அந்தக் காலத்துப் பெண்கள் இயற்கையாகும். ஆனால், இந்தக் காலத்து மங்கையரோ கொடுமையைக் கண்டால் எதிர்த்துநின்று கூட்டங் கூட்டிவிடுவார்கள்

"பாதகம் செய்பவரைக் கண்டால்—நீ
பயங்கொள்ள லாகாது பாப்பா
மோதி மிதித்துவிடு பாப்பா!—அவர்
முகத்தில் உமிழ்ந்துவிடு பாப்பா!"

என்று பாடிப் புதுமைக் கவி பாரதியார் நவயுகப் பெண்களுக்குத் தைரியம் ஊட்டியிருக்கிறார். எனவே, எங்களிடம் யாராயினும் முறைதவறாக நடக்கத் தொடங்கினால், அவர்கள் முகத்தில் காரி உமிழ்ந்து, மோதி மிதித்துவிடுவோம். ஆமாம்."

தரங்கிணி முகம் முழுவதும் இரத்த சிவப்பாகிக் காளிதேவிபோல் காட்சியளித்தாள்.

ஜோஸபின் உடம்பு முழுவதுமே நடுநடுங்கிக் கொண்டிருந்தது.

வீதியில் நாய்கள் ஒன்றோடொன்று சண்டையிட்டுக் கொண்டிருக்கும் சப்தம், இருவரின் பேச்சுக்களுக்குப் பின்னணிப் பாடல்கள் போல் அமையலாயிற்று. ஒரு பெண் நாயை மற்றொரு ஆண் நாய் வாலைக் குழைத்துக்கொண்டு பின்தொடர்ந்து வந்தது. இதைக் கண்டு பெண் நாய்,

அதைத் திரும்பிப் பார்த்து 'உர்' என உறுமி, மேல் வரிசைப் பற்களைக் காட்டிப் பாய்ந்து விரட்டியது. அதன் பாய்ச் சலுக்குப் பயந்து, ஆண் நாய் பின்வாங்கி நின்றது.

"ஜோஸப் அண்ணேன்! ஜோஸப் அண்ணேன்! அப்பா கூப்பிடுகிறுர்; வந்து கேள்" என்று கூப்பிட்டவாறு, காதரீன் வீட்டினுள் இருந்து தெருவாசலுக்கு வரலாஞள். இதே சமயத்தில், தரங்கிணி, நடைக்குள் நுழைந்தாள்.

"யாரு, தரங்கிணியா? ஏன் இங்கேயே நின்று விட்டாய்?...

தோழியின் தளர்நடையைக் கண்டு வியப்போடு கேட்டாள்.

காதரீனைக் கண்டு தரங்கிணி திகைத்துப் போஞள். ஒருவேளை அவள் அண்ணனைக் கண்டித்துப் பேசியதைக் கேட்டுவிட்டிருப்பாளோ என அச்சங்கொண்டாள். "உம், ஒன்றுமில்லை. நீ வீட்டில் இருக்கிருயா என்று உன் அண்ணனைக் கேட்டேன்" என சமயோசிதமாகப் பதில் சொன்ஞள்.

தரங்கிணியின் பேச்சில் தடுமாற்றம் காணப்படுவதை உணர்ந்த காதரீன், ஜோஸப் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அவன் வீதிப்பக்கம் எதையோ பார்ப்பதுபோல் திரும்பிக் கொண்டிருந்தான்.

"ஏன்? நான் இல்லையென்ருல் அப்படியே திரும்பிப் போய்விடலாம் என்று இருந்தாயோ?"

"இல்லை" என்று தரங்கிணி இழுத்தாள்.

"அம்மாவுக்குத் தெரிந்தால் கோபித்துக் கொள்வார்கள், நீ இவ்வளவு தூரம் வந்தும், தன்னைப் பார்க்காமல் போகிருயே என்று"

"அப்படி அம்மாவைப் பார்க்காமல் போவேனு? வா, உள்ளே போகலாம்."

இதற்குள் தன்னைச் சுதாரித்துக்கொண்டு தரங்கிணி சாதுரியமாகப் பேசினுள்.

"ஜோஸப் அண்ணேன்! வருகிறுயா?" என்று கேட்டு விட்டு, காதரீன் தரங்கிணியுடன் உள்ளே போனுள்.

இப்போதுதான் ஜோஸப் மூச்சுவிடலானுன். 'சிறிதும் எதிர்பாராதவாறு காதரீன் எக்கச்சக்கமான வேளையில் வந்துவிட்டாளே! அவள் தோழியைத் தான் கேலிசெய்து கோபம் வருவித்துவிட்டதை அறிந்தால், தன்மீது எரிந் தல்லவா விழுந்திருப்பாள்? அப்பாவிடமோ அம்மா விடமோ பிராதுகூடப் போய்ச் செய்திருப்பாளே! நல்ல காலம்! தான் பயந்தபடி, தரங்கிணி, தான் அவளிடம் செய்த குறும்பைக் காதரீனிடம் சொல்லாமல் பெருந் தன்மையாகவன்றோ நடந்துகொண்டாள்?' இந்த எண் ணம் எழுந்து ஜோஸப்பை வெட்கப்பட வைத்தது. 'தான் வரம்புமீறி அவளிடம் முறை தவருக நடந்துகொண்டும் அவள் தன்னைக்காட்டிக் கொடுக்காமல் போனுளே' என்று நினைத்துப் பார்த்தபோது, அவன் நெஞ்சம் நெகிழ்ந்து விட்டது. 'தரங்கிணி எவ்வளவு நல்ல பெண்! அவளிடம் போய் நான் அநாகரிகமாக நடந்துகொண்டேனே!' என்று, அவன், தனக்குத்தானே பச்சாத்தாபப் பட்டுக் கொண்டான்.

## 6

பகலவன் வானத்தின் நடுமண்டலத்தை நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்தான். அவ்வுச்சி வேளையி லும், பள்ளியாசிரியர் பரமசிவத்தின் வீட்டுக் கூடத்தில் வெளிச்சம் சரியாக இல்லை. அவ்வளவு தாழ்வான இடத்

திலும், அந்நேரத்தில் ஆள் நடமாட்டம் அதிகமாயிருந்தது.

வயது முதிர்ச்சியால் மட்டுமல்லாமல், வறுமையின் கொடுமையாலும் வளைந்துவிட்ட கூன் முதுகைச் சுமந்து கொண்டு, பரமசிவத்தின் எலும்பு தோல் போர்த்த மெலிந்த உடம்பு, உள்ளுக்கும் வெளிக்குமாக ஓடி நடமாடிக் கொண்டிருந்தது. உள்ளீடில்லாமல் உடம்பு பூசுணைக்காய் போல் பருத்து ஊதியிருந்த காமாட்சியம்மாள், தான் உடுத்தியிருந்த நைந்த பழம் பட்டுப்புடவையின் கிழிசலை மறைக்க முயன்றுகொண்டே, சரிகை இழைத்த பட்டுப் புடவை சரசரக்க அமர்த்தலாக உட்கார்ந்திருந்த மங்கையரை, விழுந்து விழுந்து உபசரித்துக் கொண்டிருந்தாள். அவர்களுடைய மூத்த மகன் மணி, வந்திருப்பவர்களுக்குப் பலகாரம் காபி முதலியன பரிமாறுவதற்கு அன்னைக்கு உதவி புரிந்து கொண்டிருந்தான். தனக்குச் சிறிதும் தராமல் யாருக்கோ பட்சணங்களை அம்மா தந்து கொண்டிருக்கிறாளே எனச் சிறுமி கல்யாணி சிணுங்கிக் கொண்டிருந்தாள். தேனுகா அவளைச் சமாதானப்படுத்திக் கொண்டிருந்தாள். தரங்கிணி, பெண்களிடையே தலை குனிந்தவாறு அடக்கவொடுக்கமாக உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

ஆமாம்; தரங்கிணியைச் சிதம்பரத்திலிருந்து சிலர் பெண் பார்க்க வந்திருந்தனர். 'நான் வயதுக்கு வந்ததிலிருந்தே இப்படி எத்தனையோ பேர் வந்து பார்த்து விட்டுப் போயிருக்கின்றனர். அவர்களைப் போலத்தான் இவர்களும்' என்று அவள் மனத்தில் வருத்தமாக எண்ணிக்கொண்டிருந்தாள். இவ்விதமான வாட்டநிலையிலும் அவளுடைய மதிவதனம் சோபையுடன் விளங்கியது. மற்றவர்களைவிட, மாப்பிள்ளையாக வந்திருக்கும் இளைஞன் தரங்கிணியின்

பேரழகை வைத்தகண் வாங்காமல் பார்த்துக் கொண் டிருந்தான்.

"பெண் இன்னமும் வாசித்துக் கொண்டுதான் இருக் கிருளா?"

மாப்பிள்ளை வீட்டாரில் வயதான கிழவரொருவர் கேட்டார்

"இல்லை; எஸ். எஸ். எல். ஸி., பாஸானதும் நிறுத்தி விட்டோம். ஆனுல், சங்கீதம் கற்றுக் கொண்டிருக்கிருள்."

காவியேறிய பற்கள் தெரியப் பதில் சொன்னுர் பரமசிவம்.

"அப்படியா! ஏன், மேல் படிப்புக்கு அனுப்பியிருக்க லாமே?"

அநாவசியமாகக் கேள்வி கேட்டார் ஒருவர்.

'எங்கேயாயினும் திருடிக்கொண்டு வந்துதான் படிக்க வைக்கணும்.'

ஆத்திரமான வார்த்தைகள் வெளிவரத் துடித்தன. ஆனுல், பரமசிவம், மிகச் சிரமத்துடன் தன் மன உணர்ச்சியை அடக்கிக் கொண்டார்.

"சங்கீதம் சாதகஞ் செய்துவருகிருள் என்று முன்னமே தெரிந்திருந்தால், தியாகையர்வாள் கீர்த்தனை ஒன்றும், தீக்ஷிதரின் சாஹித்யம் ஒன்றும் பாடச்சொல்லிக் கேட் டிருப்பேனே!" நடுத்தர வயதுடைய மனிதரொருவர் அங்கலாய்ப்போடு பேசினுர். "ரேடியோ, சினிமாப் பாட்டுகளைக் கேட்ட பழக்கத்தில் இவள் பாடுகிருள் என் றல்லவா நினைத்தேன்...?"

"குரலில் இருந்த சுகபாவத்தைக் கேட்டதுமே எனக்கு மட்டும்சந் தேகம்தான்."

"இப்பத்தான் என்ன? இரண்டு கீர்த்தனைகளைப் பாடச் சொல்லிக் கேட்டால் போகிறது. 'நகுமோகு...' பாடம்மா!"

முப்பது வயதுள்ள மங்கையொருத்தி, சர்வ சாதாரண மாகச் சொன்னாள்.

தரங்கிணிக்கு வந்த கோபம் சொல்லி முடியாது. ஆனால், பாவம்! அவள் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ள முடியுமா? வந்ததுமே வழக்கத்தைவிட இவர்கள் பல பரீட்சைகளைச் செய்து பார்த்துவிட்டனர். கேள்வி களைக் கேட்டுத் தீர்த்துவிட்டனர். விடைபெற்றுப் போக எழுந்தவர்களுக்குச் சிற்றுண்டி தந்து உபசாரஞ் செய்வது நடந்து கொண்டிருக்கிறது. இவ்வளவுக்கும் பிறகு, மாப் பிள்ளை வீட்டு மனிதர்கள் சிலர், அநாவசியமான கேள்வி கள் கேட்பதும், அதைப் பாடு இதைப் பாடு என்பதும் எரிச்சலை யுண்டாக்காமல் இருக்கமுடியுமா?

தான் முன்னமே எழுந்து போயிருக்க வேண்டும். காமாட்சியம்மாள் மாப்பிள்ளை வீட்டாருக்குப் பலகாரம் பரிமாறத் தொடங்கியதும் எழுந்திருக்க முயன்ற தரங் கிணியை, ஒரு மாது கையைப் பிடித்து இழுத்து உட்கார வைத்துவிட்டாள். அத்துடன், தான் அவசரப்பட்டு எழுந்து விட்டால், அப்பா கோபித்துக் கொண்டால் என்ன செய்வது? அம்மா வருகையில் அவளை மெல்லக் கேட்டுக் கொண்டு எழுந்துவிடலாம் என்று தரங்கிணி எண்ணிக் கொண்டிருந்தாள்.

மறுபடியும், மாப்பிள்ளை வீட்டுப் பெண்கள் வம்பு அளக்க ஆரம்பித்து விட்டனரே! என்ன செய்வது?

"அந்தக் கீர்த்தனம் பாடமில்லை" என்று, தரங்கிணி வெறுப்பை வெளிப்படுத்தாமல் மெல்லச் சொன்னாள்.

அப்போதும் அவர்கள் விடவில்லை.

"அது பாடமில்லையானால், உனக்குத் தெரிந்த வேறெந்தக் கிருதியையாயினும் பாடு. சங்கீத மும்மூர்த்திகளின் சாஹித்யங்களில் ஒன்றாய் இருக்கணும். அவ்வளவு தான்..."

சங்கீதம்பற்றி ரொம்பத் தெரிந்தவர்போல் வாய்ச் சவடால் அடித்தார் ஒருவர், சபாக்களில் கச்சேரிகளை ஓசியில் கேட்ட பழக்கம் போலிருக்கிறது!

தரங்கிணி வேறு வழியின்றித் தன் தலைவிதியை நொந்துகொண்டு பாடத் தொடங்கினாள். அடுத்த கணம், அவளது மணிக்கண்டத்திலிருந்து, 'ராமநீ சமானமெவரு' என்ற கிருதி ஒலிக்கலாயிற்று. ஏதேனும் பாடத் தொடங்கினால்தான் தரங்கிணி தன்னை மறந்து விடுவாளே! மிக அருமையாகப் பாடி முடித்தாள். ஆனால் அவள் அப் பாட்டைப் பாடியபோது தொனித்த இதய பாவம், 'ஸ்ரீ ராமச்சந்திரா! ஏனடா என்னை இப்படிச் சோதனை செய்து கொண்டிருக்கிறாய்? என் வாழ்க்கையில் விடிவு ஒன்றை ஏற்படுத்தி என் பெற்றோருக்கு விடுதலையளிக்கக் கூடாதா?' என்று வேண்டுகோள் விடுப்பதுபோல் உருக்கம் மிகுந்து இருந்தது.

அவள் பாடி முடிப்பதற்கு முன்பே, 'பலே பேஷ்!' என்ற குரல் கேட்டது. குரல் வந்த இடத்தை எல்லாரும் நோக்கலாயினர். தரங்கிணியும் நிமிர்ந்து நோக்கினாள். மாப்பிள்ளை வாலிபன் உதட்டைக் கடித்தவாறு அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டிருந்தான். அவனிடமிருந்து சபாஷ் பட்டம் கிடைத்தது கண்டு, தரங்கிணி புன்சிரிப்புக் கொண்டாள். ஆனால், அதைப் பிறர் அறியாதவாறு செவ்விதழ்களின் குவிப்பில் மறைத்துக் கொண்டாள்.

"என்னடா சௌந்தரராஜா! இப்படிச் செய்து விட்டாயே?"

ஒருவர் செல்லமாகக் கடிந்துகொண்டார்.

சௌந்தரராஜனுக்கு ஒரே வெட்கமாய் விட்டது. 'தாய் தந்தையர் முன்னேகூட உணர்ச்சியைக் கட்டுப்படுத்தாமல் போய்விட்டோமே?' என, அவன் தன்னை நொந்துகொண்டான். தந்தை அவனை விரைப்பாகப் பார்த்துவிட்டு, வேறு பக்கம் திரும்பிக் கொண்டார்.

பெண்பார்க்க வந்த பெண்மணிகள் ஒருவருக்கொருவர் குசுகுசுவெனக் கூடிப் பேசிக் கொள்ளலாயினர். பெண் வீட்டு நிலைமையைத் தெரிந்து கொள்ளவோ என்னவோ, வயதான பாட்டியொருத்தி தட்டுத் தடுமாறி எழுந்து, பராக்குப் பார்ப்பதுபோல் வீடு முழுதையும் நோட்டம் இடலானாள்.

மாப்பிள்ளை சௌந்தரராஜன், தன் கண்களால் தரங்கிணியின் சௌந்தரியத்தை ஒவ்வோர் அணுவாகப் பார்த்து அனுபவித்துக் கொண்டிருந்தான். மறுபடியும் இதைக் கவனித்துவிட்ட அவன் பக்கத்தில் அமர்ந்திருந்த ஒருவர், அவன் தொடையில் தட்டிக் கட்டுப்படுத்தினார்.

மாப்பிள்ளை வாலிபனுக்கு மட்டுமல்ல, பொதுவாக எல்லோருக்குமே தரங்கிணியைப் பிடித்துவிட்டது. "அப்ப சரி; நாங்கள் புறப்படுகிறோம்" என்று சொல்லிப் பிள்ளையின் தகப்பனார் எழுந்த தோரணை, இதை ஒருவிதமாகத் தெரிவித்தது. மற்றவர்களும் அவருடன் சேர்ந்து எழுந்திருந்தனர்.

இதுதான் சமயமென்று, தரங்கிணி விருட்டென எழுந்து எதிர் அறையின் உள்ளே போனாள்.

'என்ன கொடுப்பாரோ?' என லட்சாதிபதிமுன் ஏங்கி நிற்கும் பிச்சைக்காரனைப்போல, பரமசிவம், மாப்பிள்ளை

யின் பெற்றோருடைய முகக் குறிப்பைப் பார்த்தவாறு நின்றார்.

மாப்பிள்ளையின் தந்தை சொன்னார்: "நாங்கள் ஊருக்குப் போனதும் உங்களுக்குக் கடிதம் எழுதுகிறோம். அதிலுள்ளபடி நீங்கள் நடந்துகொள்வதாயிருந்தால், நீங்களே முகூர்த்தத்திற்கு நாள்பார்த்து நிச்சயித்து எங்களுக்குத் தெரிவித்துவிடலாம். நாங்களும் பார்க்கிறோம்."

"அதற்கென்ன! அப்படியே..."

"பையன் என்ன படித்திருக்கிறான், தெரியுமோ, இல்லையோ! பி. காம். பாஸ் செய்திருக்கிறானுக்கும். அடுத்த மாதம் ஸ்டேட் பாங்கில் உத்தியோகம் ஆய்விடும். அப்ளிகேஷன் போட்டுவிட்டுப் பார்க்கவேண்டியவர்களையும் பார்த்துச் சரிப்படுத்தி வைத்திருக்கிறோம். இதையெல்லாம் நீங்கள் கவனித்து, எங்கள் அந்தஸ்துக்குத் தகுந்தபடி..."

மாப்பிள்ளையின் தந்தை, சொல்ல வந்ததை முடிக்காமலே இடையில் நிறுத்திவிட்டு, பரமசிவத்தின் முகத்தைக் கவனித்தார்.

"அவருக்குத் தெரியாதா, என்ன? நன்றாய்ச் செய்தால் அவர்களுக்குத்தானே கௌரவம். வேறு யாருக்குச் செய்யப் போகிறார்? அவர் பெற்ற பெண்ணுக்குத் தானே?'

பிள்ளையின் தாயார் சாதுரியமாகப் பேசினாள்.

"என் நிலைமையையும் நீங்கள் கவனிக்கணும். நான் சாதாரணப் பள்ளிக்கூட உபாத்தியாயர்; பிள்ளைகுட்டிக்காரன். என்னொருவனுடைய சம்பாத்தியத்தைத் தவிர, வேறு வருமானமோ சொத்தோ கிடையாது. மூத்த பையன்கூட இன்னும் படித்துக் கொண்டுதான் இருக்கிறான்..."

பரமசிவம், அழமாட்டாத குறையாகத் தம் நிலையை எடுத்துச் சொல்லலானார்.

"அதற்கு...?"

பிள்ளையின் தகப்பனார், அதட்டிக் கேட்டார்.

"என்னால் முடிந்த அளவு வஞ்சகமில்லாமல் ஏதோ செய்வேன். அதை நீங்கள் பெரிய மனது பண்ணி..."

பிள்ளையின் அன்னை இடைமறித்துப் பேசினாள். கணவரைப் பார்த்தவாறு: "அந்தச் சாஸ்திரி தரகர் பிரமாதமாக அளந்தாரே!"

பிள்ளையின் தகப்பனார் மனைவியைக் கையமர்த்தி, "சரி. சரி. எங்களுக்கு நேரமாகிறது. நாங்கள் ஊருக்குப் போய் எழுதுகிறோம்" என்று கூறியவாறு, வெளியே நடக்கலானார்.

பரமசிவம் அவர் பின்னாலே குழைந்துகொண்டு போனார். காமாட்சியம்மாள் கையைப் பிசைந்து கொண்டு நின்றாள்.

பிள்ளையின் தகப்பனார், பரமசிவத்தைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் காரில் ஏறலானார். அவர் மனைவியும் மற்றவர்களும் மரியாதைக்குக்கூடப் 'போய் வருகிறோம்' என்று ஒரு வார்த்தையும் அவரிடம் சொல்லாமல் போயினர். மாப்பிள்ளை வாலிபன் மட்டும், தரங்கிணி இருக்கும் அறையை ஏக்கமாகப் பார்த்துக் கொண்டே, தயங்கித் தயங்கி நடக்கலானான். இவ்விதம் பின்தங்கி நின்ற அவனை, "வாடா, சௌந்தரராஜா! அப்பா கோபித்துக் கொள்ளப் போகிறார்" என்று எச்சரித்தவாறு, கையைப் பிடித்துப் பரபரவென்று இழுத்துச் சென்றார் ஒருவர்.

பிள்ளை வீட்டார், இப்படி எதுவும் சொல்லாமல், பந்தயக் குதிரைபோல் ஒருவருக்கு முந்தி ஒருவராகப்

போனாலும், "போய் வருகிறீர்களா?" என்று பரமசிவம் தானாகவே சொல்லி, வழியனுப்பி வைத்தார்.

சௌந்தரராஜன் அவரைப் பரிதாபமாகப் பார்த்தான். தரங்கிணி இருந்த அறையின் ஜன்னலையும் திரும்பிப் பார்த்தான். ஜன்னலருகே நின்று, வந்தவர்கள் போவதைக் கவனித்துக் கொண்டிருந்த தரங்கிணி, மாப்பிள்ளை திரும்பி ஜன்னலை நோக்குவதைப் பார்த்துவிட்டுச் சடக்கென தன் தலையை உள்ளுக்கு இழுத்துக் கொண்டாள்.

பிள்ளை வீட்டார் ஏறிச்சென்ற கார்கள் தெருக் கோடிக்குப் போகும்வரை கூடப் பரமசிவம் பார்த்துக் கொண்டே நின்றிருந்தார்.

இதைப் பார்த்துவிட்டு எதிர்விட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்த சிலர், "பாவம்! மனுஷன் பெண்களைப் பெற்றுவிட்டு, இப்படிக் கிடந்து தவிக்கிறார். பெண் பார்க்க வருகிறவர்களைத் திருப்திப்படுத்த அவர் என்ன பாடுபடுகிறார்? பார்க்கப் பரிதாபமாயிருக்கிறது" என்று பேசிக்கொண்டனர்.

இது பரமசிவத்தின் செவியில் விழுந்ததோ இல்லையோ, முன் அறையில் இருந்த தரங்கிணிக்கு நன்றாகக் கேட்டது.

ஏற்கனவே, தன் தந்தை பிள்ளைவீட்டாரிடம் மிகவும் வளைந்து கொடுத்துப் பேசுவதைக் கண்டு, அவள் மனம் மிகவும் வேதனைப்பட்டது. அவள், தாயை அழைத்து அவரைக் கூப்பிடச் சொல்லவும் நினைத்தாள். ஆனால், அவளுக்குத் துணிவு ஏற்படவில்லை. 'என்னால்தானே அப்பா இப்படியெல்லாம் கஷ்டப்படுகிறார். யார் யாருக்கோ கூழைக் கும்பிடு போடுகிறார். நான் எதற்காகப் பெண்ணாய்ப் பிறந்தேன்? ஆண் பிள்ளையாகப்

பிறந்திருக்கக் கூடாதா? அப்பாவுக்கு உதவியாக இருந் திருக்கலாமே?"... என்று எண்ணி வருந்திக் கொண்டிருந் தாள். இந்நிலையில், எதிர்வீட்டார் தந்தைக்கு இரக்கப் பட்டுப் பேசியதைக் கேட்டதும், அவளால் துக்கம் தாங்க முடியவில்லை. அவள் கதறியழுது கொண்டே தன் படுக்கை யில் போய் விழுந்தாள். அவளுடைய நொந்த உள்ளம் என்னென்னவோ நீள நினைக்கலாயிற்று.

# 7

அன்று சனிக்கிழமை. காமாட்சியம்மாள் வீட்டில் நாலைந்து பெண்மணிகள் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந் தனர். சூரியன் வடதிசை நோக்கிப் பிரயாணஞ் செய்யத் தொடங்கிவிட்டதால், பிற்பகல் மூன்றுமணிக்கு மேலாகி யும் வெய்யிலின் வெப்பந் தணியவில்லை. தாழ்வாரத்தில் அமர்ந்திருந்த லக்ஷ்மி பாட்டிக்கு மட்டும், வெய்யில்படுவது அவருடைய சதைப்பற்றற்றுத் திரைத்திருந்த உடம்புக்கு இதமாயிருந்தது. அந்தப் பாட்டி தவிர, மற்றவர்களெல் லாம் அப்பளம் இட்டுக் கொண்டிருந்தனர்; சிலர் பூரி மணைகளில் அப்பளம் உருட்டிக் கொண்டிருந்தனர். சிலர் அப்பளப்பூ செய்து கொண்டிருந்தனர். இவர்கள், பெரும் பாலும் முப்பது வயதிலிருந்து நாற்பது வயதுக்கு உட்பட்டவர்களாகக் காணப்பட்டனர். லக்ஷ்மி பாட்டி ஏதோ பேச்சுக் கொடுத்துக் கொண்டிருக்க, அவர்களில் சிலர் அதற்குப் பதிலளித்துப் பேசிக் கொண்டிருந்தனர். புறக்கடைக்குப் போகும் நடைபாதை யோரத்தில் அமர்ந்து, கல்யாணியும் தேனுகாவும் தாயக்கட்டம் ஆடிக் கொண்டிருந்தனர். மணி, கூடத்தில் மேஜைப் பக்கத்தில் உட்கார்ந்து, திங்கட் கிழமையன்று காலை, கோட்டையில் துப்பாக்கி சுடும் பயிற்சிக்குப் போவதற்காகத் தான்

போட்டுக்கொண்டு செல்லும் என். சி. சி. படையுடுப்பை யும் குல்லாயையும் எடுத்து உதறிச் சுருக்கம் இல்லாமல் இருக்கத் தீற்றிக் கொண்டிருந்தான்.

கூடத்து அறையிலிருந்து, காமாட்சியம்மாள் இடக் கையில் சில துணிகளையும் வலக்கரத்தில் ஊசி நூலையும் எடுத்துக்கொண்டு வந்து, கூடத்துக்கும் தாழ்வாரத்துக்கும் இடையில் மற்றவர்களுக்கு முன்னால் உட்காரலானாள்.

"அடி, தேனு! எங்கே இருக்கிறீங்க? அக்கா வெளியே போய்விட்டாளா? சாப்பிட்டானதும் எங்கோ போக வேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தாளே!'

அவள், தன் கணவனுடைய கோட்டு ஒன்றைப் பிரித்துப் பார்த்து, கிழிந்த இடங்களைத் தைக்கத் தொடங் கியபடி கேட்டாள்.

ஆட்டச் சுவாரஸ்யத்தில், தேனுகா, தாய் கேட்ட கேள்வியைச் செவியில் ஏற்கவில்லை. அவள் கல்யாணியின் காய்களை வெட்டி வீழ்த்துவதிலேயே கண்ணுங் கருத்து மாய் இருந்தாள். கல்யாணிதான் பதில் சொன்னாள்:

"போய்விட்டாப்போல்தான் இருக்குதம்மா!"

இதுகேட்டு மணி நிமிர்ந்து பார்த்தான். அவன் தானாகவே சிரித்துக் கொண்டான்.

கல்யாணி சொன்னபடி, தரங்கிணி வெளியே போக வில்லை. தன் அறையில்தான் இருந்தாள். அவள் கரத்தில் ஒரு புத்தகம் இருந்தது. அதனால் அவள் ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருந்தாள். புகைபடிந்த அழகிய ஓவியத் தைப்போல், சோகம் கப்பியிருந்த அவள் முகம், சோபை யற்றுக் காணப்பட்டது.

அப்பளப்பூ இட்டுக்கொண்டிருந்த அம்புஜம் கேட் டாள்: "ஏன், மாமி! தரங்கம் இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறாள்? சனிக்கிழமைகளில்கூடச் சாப்பிட்ட

தும் சாப்பிடாததுமாக அப்படி என்ன அவசர வேலே?'' அவள் கேள்வியில் குறும்பு தொனித்தது.

அதே சமயத்தில் ராஜம்மா, ''தேனு என்று கூப்பிட்டீர்களே? அது என்ன செல்லப் பெயர்? அர்த்தம் புரியலேயே, மாமி'' என்று வினவினுள்.

காமாட்சியம்மாள் ஏதோ சொல்ல வாய் திறக்கு முன்னர், லக்ஷ்மி பாட்டி குறுக்கிட்டு, ''உனக்கு எங்கேயடி இதெல்லாம் புரியப் போகிறது? சுத்தப் பட்டிக்காடு. சங்கீதம் என்ருல், வீசை என்ன விலே என்று கேட்கக் கூடிய......''

''என்ன பாட்டி, ராஜத்தை ஒரேயடியா மட்டந்தட்டுகிறீர்கள்?''

வைதேகியம்மாள் சிரித்துக்கொண்டே கேட்டாள்.

''பின்னே என்ன? தேனுகா என்பது அருமையான ராகத்தின் பெயர். இதை இவர்கள் தங்கள் செல்வக் குமரிக்கு வைத்திருக்கிருர்கள். ராஜம் எவ்வளவு காலமாகக் காமாட்சியகத்துக்கு வருகிருள், போகிருள். இதுகூடத் தெரியாமல்...''

பாட்டி நீட்டி இழுத்துப் பேசிக்கொண்டே போனுள்.

''தேனுகா மட்டுமா ராகத்தின் பெயர்? தரங்கிணி, கல்யாணி எல்லாங்கூட ராகங்களின் பெயர்தான். ஆனுல், கல்யாணி என்ற ராகப்பெயரைப் பொதுவாகப் பெரும்பாலோர் பெண்களுக்குப் பெயராக வைத்து வழங்குகிருர்கள். தரங்கிணி, தேனுகா போன்ற ராகங்களின் பெயர்களே மட்டும் பெண்களுக்கு வைத்து அழைப்பது, காமு மாமி அகத்தில் தவிர அநேகமாக நாம் வேறெங்கும் கேட்டிருக்கமாட்டோம். என்ன சொல்கிறீர்கள், பாட்டி? நான் சொல்வது சரிதானே?''

ஏறக்குறைய இருபது வயதுள்ள இளமங்கை யொருத்தி, கையில் ஒரு கம்பளி நூல் உருண்டையும் நீளமான ஒரு பிளாஸ்டிக் ஊசியுமாக, உள்ளே வந்து கொண்டிருந்தாள். அவள்தான் இவ்விதம் அபிப்பிராயஞ் சொல்லிக்கொண்டு வந்தாள்.

''வா சௌந்தரம், வா! எங்கே? ரொம்ப நாளாகக் காணுமே?''

காமாட்சியம்மாள் வரவேற்றாள்.

பாட்டி பொக்கை வாயைத் திறந்தாள்: ''சௌந்தரி சொன்னது உண்மையான பேச்சு. தரங்கிணி, தேனுகா போன்ற ராகங்களின் பெயர்களைப் பெண்களுக்கு வைக்கப் பலருக்குத் தோன்றாது. காமாட்சியாத்துக்காரர் சங்கீத ஞானமுடையவராய் இருக்கவிட்டு...''

''வெறும் சங்கீத ஞானம் இருந்தால்மட்டும் இவ் விதம் பெயர் வைக்கத் தோன்றியிருக்காது. கர்நாடக சங்கீதத்தின் மீதுள்ள ஈடுபாடும் பரம ரசிகத் தன்மையும் தான், வாத்தியார் மாமாவுக்கு இதுபோல ராகங்களின் பெயரை வைக்கச் செய்திருக்கிறது.''

தூண் ஓரமாகப் போய் உட்கார்ந்தவாறே பாட்டியைத் தொடர்ந்து பேசிய சௌந்தரம். ''மணிக்கு மட்டும் ஏன் மாமி, மாமா ராகத்தின் பெயரை வைக்கவில்லை'' என்று கேட்டாள். அவளுடைய மலர்க் கரங்கள் ஸ்வெட்டரைப் பின்னிக் கொண்டிருந்தன.

காமாட்சியம்மாள் புன்னகை புரிந்துகொண்டே, ''நல்ல கேள்வி கேட்டாய்?'' என்று சொல்லி நிறுத்தி, பின், ''அவருக்குச் சுப்பிரமணிய சுவாமிமீது அபார பக்தி. சதா முருகன் உபாசனைதான். பெரியவாள் வள்ளி மலை சுவாமிகளின் பஜனை கோஷ்டியுடன் சேர்ந்து கொண்டு, வருஷா வருஷம் திருத்தணிக்குப் போய்ப்

படி உற்சவத்தில் பாடிவிட்டு வருவார். அதனுல்தான் எங்களுக்கு முதன் முதலாக ஆண்பிள்ளை பிறந்ததும், சுப்பிரமணியம் என்று பெயர் வைத்து அழைக்கலானுர்...'' என்ருள்.

''ஓஹோ, அப்படியா?''

தன் பெயரைப் பற்றிச் சர்ச்சை நடப்பதைக் கேட்டோ என்னவோ, கோழி இறகு செருகியுள்ள பச்சைக் குல்லாய் முகப்பிலும், சாம்பல் நிறச்சட்டையின் தோள் பட்டைகளிலும் மாட்டப்பட்டிருந்த பித்தளை எழுத்துக் களைப் பளபளப்பாகத் தேய்த்துக் கொண்டிருந்த மணி, தன்னுடைய என். சி. சி. உடைகளை எடுத்துக்கொண்டு தன் அறைக்குப் போனுன்.

''அது சரி, சௌந்தரம், உனக்கு எப்போ வளைகாப்பு?...''

காமாட்சியம்மாள் இவ்விதம் கேட்டதும், சௌந்தரம் வெட்கத்தால் தலை குனிந்து கொண்டாள்.

''இதில் என்னடி வெட்கம்——?''

''விஷயம் இதுவா? ஒடிந்து விழுந்து விடக்கூடிய பூங்கொடி போலிருந்தவள் புடலங்காய் போலக் காணப்படு கிருளே! என்று யோசித்தேன். இப்போதல்லவா தெரி கிறது?''

''உடம்பில் பச்சை நரம்பு ஓடுவதைப் பார்த்தாலே தெரியவில்லையா, பிள்ளைத்தாய்ச்சி என்று?''

''இதனுல்தான் ரொம்ப நாளா நம்ம கண்ணிலேயே படாமல் இருந்தாளா?''

ஆளுக்கு ஒருவிதமாகப் பேசி, அவளைப் பரிகாசஞ் செய்தார்கள்.

சௌந்தரம் அதைப் பாராட்டாதவளாய், ''நாள் பார்த்துக் கொண்டிருக்கிருர்கள், மாமி! உங்களுக்கெல்

லாம் சொல்லாமலா நடந்துவிடப் போகிறது?...?" என்று மெல்லச் சொன்னாள்.

"அப்படியானால், சீக்கிரத்தில் எங்களுக்கு விருந்து இருக்கு என்று சொல்லு." அம்புஜம் மகிழ்ச்சி தெரிவித்துப் பேசினாள்.

"உடம்பை அலட்டிக்கொள்ளப்படாது, வெளியே எங்கும் போகப்படாது' என்று, எங்கள் மாமியின் கண்டிப்பான உத்திரவு. அதனால்தான், நான் உங்களையெல்லாம் முன்போல் அடிக்கடி வந்து பார்க்க முடியவில்லை."

"தலைப்பிரசவமோ இல்லையோ! உங்க மாமி சொல்வதில் தப்பில்லை. கொஞ்சம் எச்சரிக்கையாக இருக்க வேண்டியதுதான்."

பாட்டி சொன்னாள்.

சௌந்தரம் சுற்றுமுற்றும் பார்த்தவாறு, "மாமி! தரங்கம் எங்கே காணோம்? அவளைத்தான் பார்க்க வந்தேன். ரொம்ப நாளாச்சு......"

"அப்படியானால் நாங்களெல்லாம்..." என்று ஏதோ விஷமமாகப் பேசமுயன்ற வைதேகியைத் தடுத்துப் பேசினாள் பாட்டி. "போடி! சௌந்தரமும் தங்கமும் ஒரு ஈடு இல்லையா? இரண்டுபேரும் சிறுசிலிருந்தே ஒன்றாக வளர்ந்தவர்கள்; ஒன்றாகப் படித்தவர்கள். இவளுக்குக் கலியாணமாகிப் புக்ககம் போகும் வரைகூட, இருவரும் இணைபிரியாமல் இருந்து வந்தவர்களாச்சே! ஆசாபாசம் இருக்காதா?..."

"இவள் அதிர்ஷ்டம்; சௌந்தரம் உள்ளூரிலேயே வாழ்க்கைப்பட வாய்ப்புக் கிடைத்தது. இல்லையானால்—ராஜம்மா சொல்லி நிறுத்தினாள்.

லக்ஷ்மி பாட்டி, யோசனையோடு, "ஏன் காமாட்சி! நம்ம தங்கம் சௌந்தரத்தைவிடப் பெரியவளா? சின்ன வளா?..." என்று கேட்டாள்.

உடனே, காமாட்சியம்மாளின் முகத்தைத் துயர மேகம் சூழ்ந்தது. அவள், இக் கேள்வியைச் செவியில் வாங்காதவள்போல், கிழிசல்களுக்கு ஒட்டுப் போட்டுத் தைத்துக் கொண்டிருந்தாள்.

சௌந்தரம், "நான் தரங்கத்தைவிட ஒரு வயது சிறியவள், பாட்டி...!"

"அப்படியா?"

மற்றவர்கள் காமாட்சியம்மாளை நோக்கலாயினர்.

தன்னறையிலிருந்த தரங்கிணியின் செவிகளில், இவர்கள் பேசுவது பெரும்பாலும் கேட்டுக்கொண்டிருந்தது. சௌந்தரம் தன்னைப்பற்றிக் கேட்கிறாள் என்றதுமே, அவள் ஆவல் உணர்ச்சி கொள்ளலானாள்.

பாட்டி மௌனத்தைக் கலைத்தாள், "ஏன் காமாட்சி? கேட்கணும், கேட்கணும் என்று. ஆவணி மாசம் யாரோ வந்து நம்ம தங்கத்தைப் பார்த்துவிட்டுப் போனார்களே? அது என்ன ஆயிற்று? ஏதாவது தகவல் சொல்லியிருக் கிறார்களா?"

காமாட்சியம்மாள் கண்களிலிருந்து நீர் துளிர்த்தது. மற்றவர்கள் கவனிக்கும் முன்பு, அவசர அவசரமாகக் கண்ணீரைத் தன் முந்தானையால் துடைத்துக்கொண்டு, "மிகவும் சிரமப்பட்டுப் பெண்ணைப் பார்க்க வந்தவர்கள், தங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லாமல் இருப்பார்களா பாட்டி? நீண்ட காலமாக நடந்துவரும் கதைதான். வந்து பார்த்தவர்கள் எல்லோருக்குமே தரங்கத்தை ரொம்பப் பிடித்துவிட்டது. ஆனால், தங்கள் அந்தஸ்துக்கும், பிள்ளை யின் படிப்பு உத்தியோகத்துக்கும் தகுந்தபடி, எங்களால்

எதுவுஞ் செய்ய முடியாது என்று அவர்களாகவே தீர் மானித்துக்கொண்டு, மேலே பேச்சு வார்த்தை ஒன்றும் வைத்துக் கொள்ளாமல், நின்று விட்டார்கள். மாப்பிள்ளைப் பையன் மட்டும், 'அவர்களுக்குப் பண வசதி எதுவும் இல்லாவிட்டாலும் பரவாயில்லை. அவர்கள் வசதிக்குத் தகுந்தபடி செய்வது செய்யட்டும். நான் அந்தப் பெண் ணையேதான் திருமணஞ் செய்து கொள்ளுவேன்' என்று பிடிவாதம் பிடித்துக் கொண்டிருக்கிறானும். இதனால், பிள்ளைக்கும் பெற்றோருக்கும் இடையே பெரிய போராட்டமே நடந்து கொண்டிருக்கிறதாம்...''

வைதேகி, ''நான்கூட இவ்விஷயத்தைக் கேள்விப் பட்டேன். அகத்துக்காரருக்கு அவருடைய பாங்கில் வேலை பார்க்கும் யாரோ ஒருவர் சொன்னாராம். இவர்களுடைய கிளை பாங்கில்தான் அந்தப் பிள்ளையும் ஹெட் அக்கவுண் டண்டாயிருக்கிறானும்'' என்று குறுக்கிட்டுச் சொன்னாள்.

''பிள்ளையாண்டான் புத்திசாலி போலிருக்கு. தங் கத்தைப் பார்த்தவுடனே புரிந்து கொண்டான், இவள் தங்களுடைய குடும்பத்தை விளங்க வைக்கக்கூடிய கிருக லக்ஷ்மியாயிருப்பாள் என்று. பணத்தையே பெரிதாக மதிக்கும் தாய் தகப்பனுருக்கு இது எங்கே தெரியப் போகிறது?'' என்று தொடங்கிய லக்ஷ்மி பாட்டி, ''காமாட்சி! என்னை மன்னிச்சுடடி அம்மா! தங்கத்துக்கு இளசாயிருக்கிறதுக்கெல்லாம் கல்யாணம், கார்த்தி என்று கடுக நடந்து விடுகின்றனவே! இவளுக்குக் கல்யாணம் கூடிவிடக்கூடாதா என்ற ஆதங்கத்தால் தான் உன்னைக் கேட்டேன். தங்கத்தைக் கடைசியாக வந்து பார்த்தவர்கள் என்ன முடிவு சொன்னார்கள் என்று தெரிந்துகொள்ளக் கேட்டேன். உன் மனம் இவ்வளவு வேதனைப்படும் என்று தெரிந்திருந்தால், நான் இதைக் கேட்டே இருக்கமாட்டேன். முன்னொரு சமயம் நீ பெண்

களைப்பற்றிக் கவலை தெரிவித்தபோது, நான் ஏதோ எண்ணிக்கொண்டு, எனக்குத்தான் எல்லாந் தெரியும் என்று ஏதேதோ அளந்தேன். நீ அப்போதே பயந்ததற்குப் போதிய காரணம் இருக்கிறதென்று எனக்கு இப்போது தான் மூளையில் தட்டுப்படுகிறது......ஆண் பிள்ளைகளைப் பெற்றவர்கள், தங்கள் குடும்பத்துக்குப் பொருத்தமான மருமகளைப் பார்த்துக்கொண்டு போக வருகிறார்களா? அல்லது தங்கள் பிள்ளைகளைக் காட்டி, அவர்களுடைய படிப்பு உத்தியோகங்களைக் காட்டி, பணம் பறிக்க வருகிறார்களா? எனக்கு ஒன்றுமே புரியவில்லை. என்ன இருந்தாலும், ஆண்பிள்ளைகளைப் பெற்றவர்களுக்கு, இவ்வளவு பணப் பேராசை உதவாது"......

காமாட்சியம்மாள், "அவர்களைக் குற்றஞ் சொல்வதில் பயனில்லை, பாட்டி! பெண்களை அடுக்கடுக்காகப் பெற்றுவிட்டுப் பரிதவிக்கும், என்னைப்போன்ற பாவ ஜன்மங்களைச் சொல்லவேண்டும். முன் பிறப்பில் செய்துள்ள கர்மங்கள் சும்மா விட்டுவிடுமா?..."

லக்ஷ்மி பாட்டி, "காமாட்சி, மனசை அடியோடு தளர விட்டுவிடாதே! தங்கம் கலியாணத்துக்கு இன்னம் வேளையும் நாழிகையும் வரவில்லை. வியாழ அனுகூலம் ஏற்பட்டதும், நொடியில் எல்லாம் குதிர்ந்து விடும். தங்கத்துக்கென்று ஒருத்தன் எங்கேயோ பிறந்துதான் இருக்கிறான்."

"தரங்கத்தைப் பார்க்க வருபவர்களுக்குக் குறைவில்லை. ஆனால், ஒரு முடிவுதான் ஏற்படாமல் இழுத்துப் பறித்துக்கொண்டு நாள் போகிறது. இப்போதுகூட அகத்துக்காரர் யாரோ சொன்னார்கள் என்று ஒரு பிள்ளையைப் பற்றி விசாரிக்கப் போய் இருக்கிறார்."

"அப்படியா?"

லக்ஷ்மி பாட்டி தரங்கிணியின் கலியாணப் பேச்சை எடுத்ததுமே எழுந்துபோகத் துடித்துக் கொண்டிருந்த சௌந்தரம், இச்சமயம் சற்று இடைவெளி கிடைத்ததும், பின்னுவதை நிறுத்திச் சடக்கென எழுந்து, "நான் போய் வருகிறேன், மாமி! தரங்கம் வந்தால், நான் வந்து கேட்டு விட்டுப் போனதாகச் சொல்லுங்கள். மறுபடியும் சந்தர்ப்பம் வாய்த்தால் மற்றொரு நாள் வருகிறேன். தரங்கம் அந்தப் பக்கம் வந்தால், என்னை வந்து பார்த்து விட்டுப் போகச் சொல்லுங்கள்; என்ன? என்று சொல்லி விட்டு, எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு போனாள்.

சௌந்தரம் தலை மறைந்ததுமே, அம்புஜம் காமாட்சி யம்மாளைப் பார்த்துச் சொன்னாள்: "மாமி! அப்படித்தான் தரங்கத்தை அனுப்பிவைக்கப் போகிறீர்கள், சௌந்தரம் சொல்லி விட்டுப் போனாளே என்று. பொதுவாக, வயதுக்கு வந்துவிட்ட பெண்களைக் கண்ணோடு பிறந்த சகோதரியா யிருந்தாலும் மற்றவர்களுடைய வீட்டுக்குப் போக வைக்கக்கூடாது. சௌந்தரம் வீட்டில் கலியாண மாகாத அவள் சகோதரர்கள் இருக்கிறார்கள். அந்தப் பிள்ளைகளெல்லாம் ஒரு மாதிரி என்று சொல்லுகிறார்கள். அத்துடன், சௌந்தரமும் சாமனியப்பட்டவள் என்று நினைத்து விடாதீர்கள். இவ்வளவு இளவயதிலேயே இவளுக்குள்ள ஆணவஞ் சொல்லிமுடியாது. தான் பருவம் அடைந்த இரண்டு மூன்று வருஷங்களுக்குள் தனக்குக் கலியாணமாய் விட்டது; அதுவும் நல்ல இடம் கிடைத்து விட்டது என்ற நினைப்பையும் மமதையையும், அவளுடைய ஒவ்வொரு சொல்லிலும் நடையிலும் நீங்கள் கவனித்திருக் கலாமே! தரங்கத்துக்கு இன்னும் கலியாணம் ஆகாதது அவளுக்கு உள்ளூர இளக்காரந்தான்! அதைச் சொல்லா மல் சொல்லிக் காட்டத்தான் அவள் வயிற்றைச்

சாய்த்துக் கொண்டு, உங்கள் வீட்டுக்கு அடிக்கடி வருகிறாள். நான் என்னமோ சொல்கிறேனென்று நினைக்காதீர்கள்......"

இவள் பொரிந்து தள்ளிய பேச்சைக்கேட்டுக் காமாட்சி மட்டுமல்ல, மற்ற எல்லோருமே திகைத்துப் போய் விட்டார்கள்.

வைதேகி மட்டும், அம்புஜத்தைப் பின்தொடர்ந்து பேசலானாள். "அம்புஜம் சொல்லிய அவ்வளவையும் நீங்கள் அப்படியே எடுத்துக் கொள்ளாவிட்டாலும், ஒரு விஷயத்தை மட்டும் காமு மாமி கட்டாயம் கேட்கத் தான்வேண்டும். தரங்கத்தை வெளியே எங்கும் அனுப்பா மல் இருப்பதுதான் நல்லது. படிப்பு ஒருவிதமாக முடிந்தது. சங்கீத சிக்ஷையும் முடிந்துவிட்டது. இனியும் அவளுக்கு வெளியே என்ன வேலை என்று கேட்கிறேன். உங்கள் குடும்ப விஷயத்தில் நான் தலையிடுவதாக எண்ணக் கூடாது; வீண் அபவாதத்துக்கு நீங்களே இடங்கொடுத்து விடக் கூடாதென்றுதான் இவ்வளவும் சொல்லு கிறேன்..."

காமாட்சியம்மாள் அயர்ந்து போய்விட்டாள். "கூடப் படித்த பெண்கள் இவளை வந்து பார்க்கிறார்கள். இவளும் மரியாதைக்கு அவர்களைப் போய்ப் பார்க்கிறாள். சிநேகிதை களாக் இருப்பவர்கள் பார்ப்பதும் பேசுவதும் தவறு, வைதேகி?"

"சிநேகிதம் என்று சொல்லிக் கண்டவர்கள் வீட்டுக்குப் போவதா, மாமி? இவ்வளவு தூரம் பேச்சு வந்த பிறகு, என் மனத்தில் உள்ளதை வெளிப்படையாக சொல்லுகிறேன். தரங்கம் அந்தக் கிறிஸ்தவப் பெண் வீட்டுக்கு அடிக்கடி போய்வருவது எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. என்னதான் பள்ளிச் சிநேகம் இருந்தா

லும்..........." வைதேகி மூச்சுப்பிடித்துக் கொண்டு பேசினாள். "இரண்டு மூன்று தடவை பார்த்தேன். அந்தப் பெண்ணின் அண்ணன் போலிருக்கு, அவன், தரங்கம் பின்னாலேயே சைக்கிளை விட்டுக்கொண்டு வந்ததை. எனக்கு இரத்தம் கொதித்தது. நம்ம குலம் என்ன? கோத்திரம் என்ன? பாரம்பரியப் பெருமை என்ன?..."

"வைதேகி சொல்வது நியாயம்தான். நான்கூட ஒரு முறை பார்த்தேன், தரங்கத்தின் பின்னால் அந்தப் பயல் வால் பிடித்துக்கொண்டு போவதை. மனந்தாங்காமல் நான் ஒருநாள் தரங்கத்தைக் கூப்பிட்டுக் கொண்டேன். தரங்கத்தை வேண்டுமானால் கேட்டுப் பாருங்கள், மாமி" விசாலம் சொன்னாள்

அறையிலிருந்த தரங்கிணிக்கு இப் பேச்சுக்களெல்லாம் நாராசங் காய்ச்சிக் காதில் ஊற்றுவதுபோல், கடலாயின. "போதும்; உங்கள் பிதற்றுதலை நிறுத்துங்கள்" என்று கூவிக்கொண்டே, வெளியே ஓடிவரவேண்டும் போலிருந்தது.

காமாட்சியம்மாள், இவர்கள் பேச்சுக்கு என்ன சமாதானஞ் சொல்லுவது என்று தெரியாமல், சங்கடப் பட்டுக் கொண்டிருந்தாள். இச் சமயம் தெரு நடையில் செருப்புச் சப்தங் கேட்கலாயிற்று. அடுத்த கணம், காமாட்சியம்மாளை அவள் உள்ள சங்கடநிலையிலிருந்து காப்பாற்ற வருவதுபோல, பரமசிவம் உள்ளே வரலானார். இவர் வருகையைக் கண்டதும், லக்ஷ்மி பாட்டி உட்பட எல்லாப் பெண்களும், குபீரென எழுந்துவிட்டனர்.

"போய் வருகிறேன், காமாட்சி" என்று கூறிக் கொண்டே, வெளியே நடந்தாள் லக்ஷ்மி பாட்டி. மற்றப் பெண்களும் காமாட்சியம்மாளுக்குத் தாங்களும் போய்

வருவதாகச் சைகை காட்டிவிட்டுப் பாட்டியைப் பின் தொடர்ந்தனர்.

உணர்ச்சி உந்த, தரங்கிணி துள்ளியெழுந்து கதவு வரை வந்துவிட்டாள். தந்தை வந்திருக்கிறார் என அறிந்ததும், அவள் சந்தர்ப்பவேகத்தை மிகச்சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு, தன் இருப்பிடத்துக்குத் திரும்பினாள்.

பரமசிவம் மேல் உத்தரீயத்தை எடுத்துக் கொக்கியில் மாட்டிவிட்டுக் கால்கூடக் கழுவாமல் சாய்வு நாற்காலியில் 'அப்பாடா!' என்றவாறு சாய்ந்துவிட்டார். "போன காரியம் என்ன ஆயிற்று" என்று ஆவலோடு கேட்க வாய் எடுத்த காமாட்சியம்மாள், இவருடைய அலுப்பைக் கண்டு காபி தயாரித்து எடுத்துவர, வேகமாக உள்ளே போனாள்.

# 8

'கனகராயர் இல்லம்' சீனர்கள் வேலைப்பாடுடன் செய்துள்ள பல வண்ணக் காகிதப் பூமாலைகளாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. அவைகளிடையே பெரியபெரிய பன்னிறப் பலூன்கள் கட்டித் தொங்கவிடப் பட்டிருந்தன. சுவரில் மாட்டப்பட்டுள்ள ஏசுபெருமானின் படங்கள் வண்ண மின்விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. காலையிலிருந்து ஆண்களும் பெண்களும் குழந்தைகளுடன் அணியணியாக வந்து குழுமிக் கொண்டிருந்தனர். இவர்கள் அன்றி, மாணவிகள் போல் காணப்பட்ட இளநங்கையர் கூட்டம் அதிகமாயிருந்தது. வருவோரை தங்கராஜும், ஜோஸபும், வெளி வாயிலில் நின்று, இன்முகத்துடன் வரவேற்றுக் கொண்டிருந்தனர். உள்ளே, சந்தோஷநாதம் பிள்ளையும் செல்லம்மாளும் வந்தவர்களை உபசரித்துக் கொண்டிருந்தனர்.

'ரேடியோகிராம்! பெட்டியிலிருந்து, 'ஞான சௌந்தரி' சினிமாப் பாடல்கள், மற்றும் ஏசு கிறிஸ்து குறித்து இசைவாணர்களும், இசைவாணிகளும் பாடிய பாடல்கள் இன்னிசை எழுப்பிக் கொண்டிருந்தன. சிறுர்கள் அப்பெட்டியைச் சுற்றி நின்று, மகிழ்ச்சி யாரவாரஞ் செய்து கொண்டிருந்தனர். டேவிட் ரேடியோகிராம் பெட்டிக்குப் பாதுகாவலாக நின்று கண்காணித்துக் கொண்டிருந்தான்.

உறவினர்களும் நண்பர்களும் திரண்டிருந்த இக் கூட்டத்தினிடையே, காதரீன் கந்தருவ லோகத்துக் காரிகைபோல் பேரழகுடன் திகழ்ந்து கொண்டிருந்தாள். கபிலநிறமுடைய அவள் உடம்புக்கு, நீலப்பட்டார்டையும் சிவப்பு வெல்வெட் சோளியும் கவர்ச்சியை அளித்தன. அவள் வழக்கமாக அணிந்துகொண்டிருக்கும் வளையல் களும், மீன்வடிவத்தில் அமைந்த தோடுகளும் தவிர, கழுத்தில் நவீன மோஸ்தர் பொன் சங்கிலியொன்று மட்டும் புதிதாக இடம் பெற்றிருந்தது. மோதிர விரலில், அழகிய சிறு கல் மோதிரமொன்று விளங்கிக் கொண்டிருந் தது. அவள் கைக்குட்டையால், அடிக்கடி முகத்தில் பூசி யுள்ள குட்டிகூரா என்ற நறுமணச் சுண்ணம் கலையாதபடி, வியர்வையை ஒற்றி எடுத்துக்கொண்டிருந்தாள்.

சிநேகிதிகள் சூழ்ந்துள்ள காதரீனிடம், உறவுப் பெண்கள் தாங்கள் கொண்டுவந்துள்ள பரிசுகளைத் தந்து விட்டு, வாழ்த்துத் தெரிவிக்கலாயினர். அவள் பரிசுகளை வாங்கி ஒருபுறம் வைத்துக் கொண்டே, அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டிருந்தாள்.

ஆம்! காதரீனுக்குப் பிறந்த நாள் விழா, அதை அவள் பெற்றோர் வழக்கம்போலப் பிரமாதமாகக் கொண்டாடி கொண்டிருந்தனர். அவர்களுக்கு அவள் ஒரே பெண்ணு தலால், பொன்னேபோல் போற்றிச் செல்லமாக வளர்த்து

வந்தனர். சகோதரர்களும் அவளிடம் மிகவும் பிரியம் வைத்திருந்தனர். இது அவளுக்கு இருபதாவது பிறந்த நாள் கொண்டாட்டம். அவள் இப்போது கிறிஸ்தவப் பெண்கள் கல்லூரியில் பி. எஸ். ஸி., முதல் வகுப்பில் படித்துக் கொண்டிருந்ததால், விழாவை விமரிசையாகக் கொண்டாடலாயினர்.

எல்லோரும் காதரீனை வாழ்த்தி வந்துக்கொண்டிருந்தாலும், அவள் கண்கள் மட்டும் அடிக்கடி வெளி வாயிலை நோக்கிக் கொண்டிருந்தது. பெற்ருேர் யாரையாயினும் வரவேற்று உபசரிக்கும் ஒலிகேட்டால், அவள் ஆவலுடன் வந்தவர்களைப் பார்ப்பாள். தான் எதிர்பார்த்தவர் இல்லை என்று அறிந்ததும், அவள் முகம் அடுத்த கணம் ஏமாற்றத்தால் கூம்பிப் போகும்.

"பாகீரதி, பார்த்தாயா? தரங்கிணியை இன்னுங் காணும். ஒரு வேளை வராமலே போய்விடுவாளோ?"

அவள் குரலில் ஏக்கம் தொனித்தது.

"அப்படியெல்லாம் இருக்காது. அவள் எப்படியும், எவ்வளவு நேரமானுலும் வந்து விடுவாள்."

ஐரின் குறும்பாகக் குறுக்கிட்டுப் பேசிஞள். "கேட்டாயா; அடி சாரதா! நாம் இவ்வளவு பேர் வந்திருப்பது காதரீனுக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. தரங்கிணி வரவில்லையாம்; அதற்காகக் கவலைப்படுகிருள்; நிமிடத்துக்கு ஒரு தரங் கேட்டு."

"இது தெரிந்துதானே! போனஜன்மத்தில் இவர்கள் இருவரும் காதலர்களாயிருந்திருப்பார்கள். அதுதான் ஒருவர்மீது ஒருவர் இப்படி உயிரைவைத்துக் கொண்டிருக்கிருர்கள். இவர்களில் யாராயினும் ஒருவர் ஆணுகி விட்டால், பேசாமல் இருவருக்கும் திருமணஞ் செய்து

வைத்துவிடலாம்,'' சாரதா நையாண்டி செய்தவாறே, காதரீன் கன்னத்தை, அன்போடு நிமிண்டினாள்.

காதரீன் நாணமுற்று, "பேசாமல் இருங்கள், அடி" என்று அன்பாகக் கடிந்து கொண்டாள்.

கல்லூரியில் புதிதாகச் சிநேகமான மாணவிகள் இந்தத் தமாஷைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தனர்.

அழைக்கப்பட் டிருந்தவர்களெல்லாம் பெரும்பாலும் வந்து விட்டனர். செல்லம்மாள், காதரீன் இருக்குமிடம் வந்தாள். அவளையும், அவளைச் சூழ்ந்திருந்த பெண்களையும் பார்த்துக் கொண்டே வந்தாள்.

"ஏன், காதரீன்! தரங்கிணி வரவில்லை போலிருக்கிறதே?"

இக் கேள்வி காதரீனுக்குக் கண்ணீரையே வருவித்து விட்டது.

"இன்னுங் கொஞ்சநேரம் பார்க்கலாம், அம்மா!"

உறவின் முறைப் பெண்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர்.

வெளியே நின்றிருந்த ஜோஸப் கைக்கடியாரத்தைப் பார்த்தான். மணி பதினொன்றாகி விட்டிருந்தது. அவன் தற்செயலாக வீதியில் எட்டிப் பார்த்தான். தெருக்கோடியில், தரங்கிணி அவசர அவசரமாக வந்து கொண்டிருந்ததை, அவனுடைய துருதுருத்த கண்கள் கண்டு விட்டன. உடனே அவனையறியாமலே அவன் தலை பின்னுக்கு இழுத்துக்கொண்டது. உடனே அவன் உள்ளே போக முயன்றான்.

இதைக் கவனித்த தங்கராஜ், "இன்னும் யாராயினும் வந்தாலும் வருவார்கள். கொஞ்ச நேரம் இரு, ஜோஸப்!" என்று சொன்னான். அண்ணன் சொன்னதை மீற முடியாமல், ஜோஸப் அப்படியே நின்றுவிட்டான்.

சில நிமிடங்களில், தரங்கிணி அங்கு வந்து விட்டாள். வீதியிலிருந்து வீட்டுப் படியேறி உள்ளே வந்துகொண்டிருந் தாள். அவளை ஏறிட்டு நோக்கவோ, எதிர்கொண்டு அழைக்கவோ ஜோஸப்புக்குத் துணிவு ஏற்படவில்லை. ஆகவே, அவன் வாசல் அருகில் நின்றிருந்த தங்கராஜிடம் விரைந்து சென்று, "அண்ணு தரங்கிணி வருகிறாள், பார்!" என்று சொல்லிவிட்டு, அவன் பின்னுல் போய் ஒதுங்கி நின்றான். அவனுடைய நடத்தையைத் தங்கராஜினுல் புரிந்துகொள்ள முடியவில்லை. வியப்புடன் பார்த்த அவன், இதற்குள் தரங்கிணி தங்களைக் கடந்து போய்க் கொண்டிருப்பதைக் கண்டுவிட்டு, "வா. அம்மா! தரங்கிணி!" என்று வரவேற்றான். அதற்குள் அவள் உள்ளே போய்விட்டாள்.

"தரங்கிணி வந்துவிட்டாள்" என்று, ஐரின்தான் முதலில் பார்த்துவிட்டுக் குரல் கொடுத்தாள். உடனே காதரீனைச் சூழ்ந்து ஒரே கலகலப்பு உண்டாய்விட்டது.

"எங்கே வராமல் போய்விடுவாயோ என்று நினைத் தேன், தரங்கிணி!" என்று கூறியவாறு, காதரீன் ஆர்வத் தோடு ஓரடி முன்வந்து, தன் இரு கரங்களையும் நீட்டி அவளை வரவேற்றாள். ஏதோ வேலையாய் உள்ளே போய் விட்டுவந்த செல்லம்மாள், தரங்கிணியைப் பார்த்துவிட்டு, "ஏன் இவ்வளவு நேரம், தரங்கிணி?" என்று அன்பாகக் கேட்டுக்கொண்டே நெருங்கினாள்.

"என்ன, குழந்தை! எங்களையெல்லாம் இப்படிக் காக்க வைத்துவிட்டாய்?"

சந்தோஷநாதம் பிள்ளை சிரித்தவாறே கேட்டார்.

"நீ வருகிற வழியை எதிர்நோக்கி, காதரீனுக்குக் கண்ணும் நொந்திருக்கும்; கழுத்தும் வலியெடுத்திருக்கும்!"

"ஐயையோ!" என்று தரங்கிணி கையைப் பிசைந்தாள். "என்னை மன்னித்திடுங்கள்."

காதரீன் அவளை அன்பாகப் பற்றி, "அப்பா சும்மா சொல்லுகிறாரடி. அதற்குப்போய் நீ...?" என்றாள்.

"யார் இவள்? இவளுக்கு இவ்வளவு வரவேற்பு?"

சுற்றத்தார் பலர் நெஞ்சங்களில் இப்படிக் கேள்வி எழுந்தது. கல்லூரியின் புதுத்தோழிகளும் வியப்போடு பார்த்தனர். பார்த்தவர்கள் கண்களெல்லாம், தரங்கிணியின் அழகிய உருவத்தின்மீதே நிலைத்து நின்றுவிட்டன. எல்லோருடைய கண்களும் தன்மீது பதிந்திருப்பதைத் தற்செயலாகக் கவனித்துவிட்ட தரங்கிணி, நாணத்தோடு காதரீனுக்குப் பின்னே போய் நின்றுகொண்டாள். அவ்விதம் போவதற்குமுன், அவள், காதரீனிடம் தான் கொண்டுவந்த ஒரு படத்தை நீட்டி, "இது என் எளிய அன்புப் பரிசு, உன் பிறந்த நாளுக்கு. இதுபோல நீ பல பிறந்த நாட்களைக் கொண்டாடி, வாழ்க்கையில் எல்லா நலன்களையும் நற்பேறுகளையும் பெறவேண்டும். அதற்கு ஆண்டவன் கருணை உனக்குப் பூரணமாக இருக்கும்" என்று, நெஞ்சந் தழுதழுக்க வாழ்த்தினாள்.

"நீகூட எனக்குப் பரிசு கொடுக்க வேண்டுமா, தரங்கிணி?" என்று சொல்லிக்கொண்டே தோழி தந்த படத்தைப் பார்த்தாள் காதரீன். கிறிஸ்து பெருமான் ஆட்டிக்குட்டி யொன்றைத் தம் தோளில் தாங்கிக் கொண்டு தடி பிடித்தவாறு நிற்பதை, தரங்கிணி மிக அழகாக எம்பிராய்டரி செய்திருப்பதைக் கண்டு, காதரீனுக்கு அளவிலா ஆனந்தமுண்டாயிற்று. அவள் அப்படத்தைக் கண்களில் ஒற்றிக்கொண்டாள்.

இச்சமயம், செல்லம்மாள், "காதரீன், உன் தோழிகளையெல்லாம் அழைத்துக்கொண்டு இங்கே வா!" என்று

பரிவோடு அழைத்தாள். அவ்விதமே அவள், "எல்லோரும் வாருங்கள் போகலாம்" என்று கூப்பிட்டுக் கொண்டு வந்தாள்.

கூடத்தின் நடுவே ஒரு வட்ட மேஜைமீது, ஒருதட்டில் கிறிஸ்துமஸ் கேக் போன்ற ஒரு பெரிய கேக் வைக்கப்பட்டிருந்தது. அதைச் சுற்றிலும் மெழுகு வத்திகள் ஏற்றி வைக்கப்பட்டுருந்தன. தாயின் கட்டளைப்படி, காதரீன் அதன் அருகே சென்று குனிந்து வாயால் ஊதி, மெழுகு வத்திகளை அணைத்தாள். பின், தட்டில் ஒரு பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த கத்தியை எடுத்துக் கேக்கை வெட்டித் துண்டுதுண்டாகப் பெற்றோருக்கும் மற்றவர்களுக்கும் முறையாக வழங்கிவந்தாள். பின் தானும் எடுத்து உட்கொள்ளலானாள். அதற்கு முன்பே ஐரீன், தனக்குக் கொடுக்கப்பட்ட கேக் துண்டை அவள் வாயில் திணித்தாள்.

பின் தோழிகள் அனைவருஞ் சேர்ந்து Happy birth day to you" என்று சொல்லிப் பாட்டுப் பாடலாயினர்.

இவ்வளவு ஆர்ப்பாட்டத்திலும், காதரீன் தரங்கிணி கேக் சாப்பிடமாட்டாள் என்று, ஆப்பிள், சாற்றுக்குடி, மாம்பழம், வாழைப்பழம் முதலியவைகளைக் கொடுத்து வற்புறுத்தித் தின்னச் சொன்னாள்.

பின் காதரீன், தன் தோழிகளை உறவுப்பெண்களுக்குப் பரஸ்பரம் அறிமுகப்படுத்தினாள். தரங்கிணிக்கு ஒரு குடும்பத்தைச் சுட்டிக்காட்டி, இவர்கள் எங்களுக்கு மிக நெருங்கிய உறவினர்கள்! இவர்களுக்கு ஒரு பெண் இருக்கிறதாம். எங்கள் பெரிய அண்ணனுக்குக் கட்டிக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். அப்பாவுக்கும் அம்மாவுக்கும்கூடச் சம்மதந்தான். ஆனால் அண்ணன்

இதற்கு இன்னும் இசைவு தெரிவிக்கவில்லை. "எனக்கு இப்போது கலியாணம் வேண்டாம். முதலில் காதரீனுக்கு ஆகட்டும். அப்புறம் பார்க்கலாம்" என்று சொல்லி வருது. எனக்குமட்டும் இப்போது என்ன அவசரமாம். நான் படித்து முடிக்க வேண்டாமா...?" என்று கொஞ்சலாகச் சொன்னாள். அவ்விதஞ் சொல்லும்போது, அவள் முகத்தில் பெருமிதம் தோன்றியது.

தரங்கிணி சும்மா கேட்டுக் கொண்டிருந்தாளே யொழிய, வாய்திறந்து பதிலுக்கு ஒன்றுஞ் சொல்லவில்லை. காதரீன் அவளைக் கடைக்கணிக்கலானாள். பின் அவள் தரங்கிணியை அக் கூட்டத்திலிருந்து பிரித்துச் சாதுரியமாக ஒரு பக்கம் அழைத்துக் கொண்டுபோய், "உன் கலியாண விஷயம் என்ன ஆச்சு? தரங்கிணி!" என்று ஆதுரத்துடன் கேட்டாள்.

"ஒன்றுந் தெரியவில்லை. அப்படியேதான் இருக்கு."

அவள் சொல்லில் உயிரேயில்லை.

காதரீன் தரங்கிணியின் முகத்தைப் பாசத்தோடு தன் பக்கந் திருப்பி, "ரொம்ப இளைத்துப் போயிருக்கிறாயே, தரங்கிணி? உன்னை அழைக்க வந்தபோது பார்த்ததைவிட இன்னும் மொசமாய் விட்டிருக்கிறாயே? ஒரு வாரத்தில் எவ்வளவு மாறுதல்? முகமெல்லாம் வெளிறி வாடி வதங்கிக் கைகால் எல்லாம் நேர்ந்துபோய்......? உன் நிலையை நினைத்தால் என் உள்ளமெல்லாம் பற்றி எரிகிறது, தரங்கிணி! கடவுள் மிகவும் கொடுமையானவன் அடி" என்று அங்கலாய்ப்போடு பேசினாள்.

தோழியின் உருக்கமான பேச்சு, தரங்கிணிக்குக் கண்ணீரை வருவித்துவிட்டது. ஆனாலும், அவள் தன்னைச் சமாளித்துக்கொண்டு, "எல்லாரும் உன்னை எதிர்பார்த்

திருக்கிறார்கள் போலிருக்கு. வா போவோம்" என்று அழைத்தவாறு, பேச்சை மாற்ற முயன்றாள்.

"எனக்கு இப்போது அங்கு ஒன்றும் வேலையில்லை. சும்மா இரு" என்று சொல்லிய காதரீன், "நீதான் இப்போதெல்லாம் இங்கு வருவதையே அடியோடு நிறுத்திவிட்டாய். எவ்வளவோ காலங் கழித்து வந்திருக்கிறாயே! இப்போதாயினும், உன்னிடம் சிறிது நேரம் பேசலாம் என்றால், தட்டிக் கழித்துவிட்டுப் போகப் பார்க்கிறாயே, தரங்கிணி! நீ ரொம்பக் கல்நெஞ்சுக்காரியடி!..." என்றாள்.

"அப்படித்தான் இருக்கட்டுமே!"

"நீ ஏன் முன்போல வருவதில்லை? உங்கள் வீட்டில் இங்குப் போக வேண்டாம் என்கிறார்களா?..."

தரங்கிணி தலைகுனிந்து மௌனமாயிருந்தாள்.

"நான் அங்கே வந்து உன்னைப் பார்க்கலாம் என்றால், ஆசாரம் மிகவுடைய உன் அம்மா, ஏதாயினும் சொல்லிவிட்டால் என்ன செய்வது என்று பயம். ஒருவேளை உன் தாய் சும்மா இருந்தாலும், உங்க வீட்டுக்கு வருகிற வைதீகப் பிச்சுகள் வம்பளக்க ஆரம்பித்துவிடுவார்களே என்ற எண்ணத்தால்தான், எனக்கு உன்னைப் பார்க்கவரத் தயக்மாயிருக்கு. இல்லையானால்...?"

"காதரீன்! எங்கே இருக்கிறாய்?" செல்லம்மாள் கூப்பிடுவது, இருவரையும் சூழ்நிலையை உணர வைத்தது.

"காதரீன்! அம்மா கூப்பிடுகிறார். வா, போவோம்."

தரங்கிணி அவள் கையைப் பற்றி அழைத்துச் சென்றாள்.

காதரீன் தோழியை இரக்கமாகப் பார்த்து, "தரங்கிணி! என்னை மறக்கமாட்டாயே! சந்தர்ப்பம் நேரும்

போதெல்லாம் சந்திக்கலாம் இல்லையா?.........'' என்று கேட்டாள்.

''உன்னை மறப்பதா? காதரீன்! நீ பைத்தியக்காரிடி. நீ இவ்வளவு காலம் என்னுடன் பழகி என்னை அறிந்து வைத்திருக்கும் லட்சணம் இதுதானு? நான் உன்னைச் சந்திக்காமல் இருக்கலாம்; ஆனல் என் நெஞ்சமும் நினைப்பும் உன்னைச் சதா பார்த்துக்கொண்டே யிருக்கும்.''

''ஆயிரம் பேர் வந்தாலும், உன்னைப்போல் வேறு யாரடி எனக்கு இருக்கிருர்கள்?''

இவ்விதம் சொல்லியவாறே, காதரீன் தரங்கிணியைச் சேர்த்து அணைத்துக் கொண்டாள்.

## 9

ஜோஸப் பரபரப்புடன் காணப்பட்டான். காலை வெய்யில் அவ்வளவு கடுமையாக இல்லாமலிருந்தும், வெப்பந் தாங்காமல் வெதும்பும் குழந்தைநிலையில் அவன் காட்சியளித்தான். வியப்பும் விதிர்ப்பும் மாறி மாறி அவன் முகத்தில் தோன்றிக் கொண்டிருந்தது. அவன் கரத்தில் ஒரு காகிதத் துண்டு காணப்பட்டது. அவன் அதைப் பார்ப்பதும் யோசிப்பதுமாய் இருந்தான்.

தரங்கிணி, வழக்கத்துக்கு மாருக, காலை நேரத்தி லேயே காதரீனைப் பார்க்க வந்திருந்தாள். அவள், காதரீன் குறிப்பிட்டதுபோல், அவர்கள் வீட்டுக்கு அடிக்கடி வருவ தில்லை. எப்போதோ ஒருமுறைதான், அவள் மாலைப் பொழுதில் வந்து, சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்து விட்டுப் போகலானுள். முன்புபோல, அவள் அடிக்கடி வராததற்குக் காரணம் தானேதான் என்று ஜோஸப்

ஊகித்துக் கொண்டான். தான் வரம்புமீறி அவளிடம் நடந்துகொண்டது அவளுடைய மென்மையான உள்ளத்தை நைவித்திருக்கும் என்றும், அவன் மனம் அவனை இடித்துரைத்துக் கொண்டிருந்தது.

தன்னைக் கண்டால் நாகப்பாம்பைக் கண்டு அஞ்சுவது போல் வெறுத்து ஒதுக்கும் தரங்கிணி, இன்று யாருங் கவனியாத சமயம் பார்த்து, தன்னிடம் ஒரு கடிதத் துண்டைத் தந்துவிட்டுச் சென்றதை எண்ணிப் பார்த்தபோது, ஜோஸப்பின் உடம்பு முழுவதும் புல்லரித்தது. அவன் எங்கேயோ வெளியே போய்விட்டு வந்தபோது, கூடத்தில் காதரீனும் தரங்கிணியும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்ததைக் கண்டு வியப்புற்றான். ஏனென்றால், இதுவரை தரங்கிணி தங்கள் வீட்டுக்கு காலை நேரத்தில் வந்து அவன் பார்த்ததில்லை. வெளியேயிருந்து கூடத்துப் பக்கமாக வந்தவன், தரங்கிணியைக் கண்டுவிட்டுத் தன் அறைக்குள் விரைவாக நுழைந்துவிட்டான். ஒருநாள் கடுமையாக கண்டித்துப் பேசிவிட்டுப் போனபின், தரங்கிணி, கூடுமான வரை ஜோஸப் பார்வையில் படுவதில்லை. அவன் வந்தால், அவள் உடனே எழுந்துபோய் விடுவாள். அவ்விதம் இருந்து வந்தவள் இன்று அவன் வந்ததைப் பார்த்த பின்னரும், அவள் காதரீனிடம் பேசிக் கொண்டிருந்தாள். பின் கட்டிலிருந்து செல்லம்மாள் குரல் கொடுக்கவே, என்ன என்று கேட்க, காதரீன் எழுந்து போகலானாள். இவ்விதமான சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்தவள்போல், தரங்கிணி சடக்கென எழுந்து இருபுறமும் பார்த்துவிட்டு, ஜோஸப் அறைப்பக்கம் சென்று, தொண்டையைக் கனைத்து அவன் கவனத்தைத் தன்வசம் ஈர்த்துத் தான் கைப்பையில் வைத்திருந்த ஒரு கடிதத்துண்டை எடுத்து அவனை நோக்கி வீசி எறிந்துவிட்டுத் திரும்பினாள். அவளுடைய இச் செயல் ஜோஸபுக்கு அளவிலா ஆச்சரியத்தை உண்டு பண்ணியது.

இவ் வியப்பு நீங்காத நிலையிலேயே அவன் குனிந்து தரங்கிணி வீசியெறிந்த கடிதத்தை எடுத்தான். அடுத்து, தரங்கிணி பின்கட்டுக்குப் போய் விடை பெறுவது கேட்டது.

"உன் வேலையைப் பார் காதரீன்! நான் போய் அப்புறம் வருகிறேன்."

"என்ன அவசரம்? தரங்கிணி! இரேன்: போகலாம்."

"இல்லை போகணும்!" என்ற தரங்கிணி, "போய் வரேன், அம்மா!" என்று செல்லம்மாளிடமும் சொல்லிக் கொண்டு புறப்பட்டாள்.

தரங்கிணி போவதை ஜன்னல் வழியாகப் பார்த்தான் ஜோஸப். பின், தன் கையிலிருந்த அவள் கடிதத்தையும் பார்த்தான். 'தரங்கிணி எனக்கு எதற்காகக் கடிதம் எழுதினாள்? என்ன எழுதியிருப்பாள்? மறுபடியும் தன்னிடம் நான் வம்புசெய்யப் போகிறேனென்று கருதி ஏதாயினும் எச்சரித்து எழுதியிருப்பாளோ? ஒருவேளை... கையில் கடிதத்தை வைத்துக்கொண்டு பலவிதமாகக் கற்பனை ஏன் செய்துகொண்டிருக்கவேண்டும்? மனத்தைப் போட்டு ஏன் உலுப்பிக் கொண்டிருக்க வேண்டும்? தன் பைத்தியக்காரத்தனத்துக்காக அவன் தானுகச் சிரித்துக் கொண்டான். திடீரெனக் காதரீன் வந்து அதைப் பார்த்து விடப் போகிருள் என்ற எண்ணத்தால் அவன் சட்டைப் பையில் வைத்துக்கொண்டான். பின்னர் அவன் ஓசைப் படாமல் மேன்மாடிக்குப் போனுன். தனியிடத்துக்கு வந்தும் கடிதத்தைப் பார்க்க அவனுக்குத் தைரியம் வரவில்லை. வெகு நேரத்துக்குப் பின்பே அவன் சட்டைப் பையிலிருந்து கடிதத்தை எடுத்துப் பார்க்கலானுன். தரங்கிணியின் பேச்சில் இனிமை இருப்பதுபோலவே, எழுத்திலும் அழகு இருந்தது கண்டு அவன் வியப்புற்றுன். இந்த எண்ணத்துடன், அவள் கடிதத்தை அவன் மனம் படித்தது.

"உனக்கு நான் கடிதம் எழுதியிருப்பதைக் கண்டு நீ ஆச்சரியப்படுவாய் என்று அறிவேன். முக்கியமான ஒரு விஷயத்தைக் குறித்து உன்னிடம் அவசரமாகப் பேச வேண்டும். ஆதலால் தயவுசெய்து நாளை மாலை செந்தோம் கடற்கரையில் என்னைச் சந்திக்க வேண்டு கிறேன். என்னை அதிக நேரம் காக்க வைக்காதபடி ஐந்து மணிக்கே தவறாமல் வரவேண்டும்."

யார் யாருக்கு எழுதியது என்று யாராயினும் தற் செயலாகப் பார்த்தாலும் தெரிந்துகொள்ள முடியாதபடி, தரங்கிணி சாதுரியமாகக் கடிதம் எழுதியிருந்ததைக் கண்டு ஜோஸப் முன்னைவிட வியப்பு கொண்டான். அவள் எதற்காகக் கடிதம் எழுதியிருந்தாலும் சரி, அவள் குறிப் பிட்டிருந்த நேரத்திலும் இடத்திலும் சந்தித்து விடுவது என்ற முடிவுடன், அவன் தன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டான்.

தரங்கிணியின் கடிதத்தைப் படித்தபின், ஜோஸபுக்கு வேறெதிலும் மனம் ஓடவில்லை. ஒவ்வொரு கணமும், நிமிடமும், மணியும், நாளும் கழிவது ஒரு யுகமாயிருந்தது. மறுநாள் மாலை அவன் தரங்கிணி குறிப்பிட்டிருந்த நேரத் துக்கு முன்பாகவே கடற்கரைக்கு வந்துவிட்டான். ஐந்து அடிக்க ஐந்து நிமிடம் இருக்கும்போது, தரங்கிணி செந்தோம் சர்ச் வழியாகக் கடற்கரைக்குள் வந்து சிமெண்டுப் படிகள் வழியாக மணற்பரப்பில் இறங்கிக் கரையை நோக்கி நடந்துவருவதை அவன் கண்டான். நீல வானத்திலிருந்து செந்தோம் சர்ச் கோபுர உச்சியைக் குறியாக வைத்து, தேவதை (Angel) யொன்று பூமிக்கு வருவதுபோல் அவனுக்குப் பிரமை உண்டாயிற்று.

தரங்கிணி மணற்பரப்பில் நடக்கத் தொடங்கியதுமே, நாலா பக்கமும் பார்த்துக்கொண்டே வந்தாள். இதைக் கவனித்துவிட்ட ஜோஸப், அவசரமாக எழுந்து,

"நான் இங்கே இருக்கிறேன், தரங்கிணி" என்று குரல் கொடுத்துக்கொண்டு, எதிர்நோக்கி ஓடி வரலானான்.

தரங்கிணி, தன் கரத்தை அவன் பக்கம் நீட்டிச் சைகை காட்டிவிட்டு, யாரும் இல்லாத இடமாகப் பார்த்துப்போய் உட்கார்ந்தாள். ஜோஸப்பும் அவளுக்கு எதிரில் எட்டி அமர்ந்தான்.

"இப்படிச் சற்று சமீபமாகவே வந்து உட்கார். நாம் பேசுவது பிறர் காதில் விழக்கூடாது. நம்மைப் பார்த்து விட்டு யாரும் சந்தேகப்படவும் கூடாது." தரங்கிணி அவனை ஏறிட்டுப் பாராமலே எச்சரிக்கை செய்தாள்.

ஜோஸப் நகர்ந்து அவளுக்கு மிகச் சமீபமாக அமர்ந்தான்.

ஆனால். அவன் ஆவலுடன் எதிர்பார்த்தபடி தரங்கிணி உடனே பேசவில்லை. அவள் தலைகுனிந்தவாறு சிந்தனையில் ஆழ்ந்துவிட்டாள். அவன் வாட்டமுற்ற அவள் முகத்தையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந் தான். அவள் தன்னிடம் என்ன சொல்லப் போகிறாளோ, என்ன பேசப்போகிறாளோ என்று அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். விநாடிகள் நிமிடங்களாகி, நேரம் இயற்கை கதியில் போய்க்கொண்டிருந்தது. ஆனால், தரங்கிணி வாயைத் திறக்கவில்லை. ஜோஸப் பொறுமை இழந்துபோனான். அவன் அவளை ஏதோ கேட்க வாயைத் திறந்தான். ஆனால், அதே சமயத்தில் அவள் ஏதோ சொல்ல வாய் திறப்பதுபோல் அவனுக்குத் தென்பட்டது. ஆகவே, அவன் தான் கேட்க எண்ணியதைக் கேட்காமல் நிறுத்திக்கொண்டான்.

தரங்கிணி ஏதோ அவனிடம் சொல்ல வாய் எடுத்தாள். ஆனால், அதை எப்படிச் சொல்வது என்று கருதித் தயக்கங் கொண்டாள்.

அவள் என்ன சொல்லப்போகிருள் என ஆவலுடன் இருந்த ஜோஸப், இது கண்டு பொறுமையிழந்தவனும், "கிண்கிணி! இல்லையில்லை; தரங்கிணி! நீ ஒன்றுக்கும் தயங்க வேண்டாம். என்னிடம் சொல்ல விரும்பியதைத் தாராள மாகச் சொல்லலாம்" என்று கூறினன்.

தரங்கிணியின் சிவந்த உதடுகள் துடிதுடித்தன. ஆனல், வார்த்தைகள் வாயிலிருந்து வெளிவரவில்லை.

ஜோஸப் தன் மன உணர்ச்சியை அடக்கமாட்டாது பேசினன்: "தரங்கிணி, என்னைக் கண்டிக்க உனக்கு உரிமை யுண்டு. நான் உனக்குச் செய்துள்ள தீங்குக்கு நீ என்ன தண்டனை வேண்டுமானலும் தரலாம்."

தரங்கிணியின் கண்களிலிருந்து நீர் ஆருக வழிந் தோடலாயிற்று.

அவள் கண்ணீர் உகுப்பதைக் கண்டு ஜோஸப் பதறிப் போனன். "தரங்கிணி! ஏன் அழுகிருய்? காரணத்தைச் சொல்லமாட்டாயா?"

அப்போதும் தரங்கிணியால் பேச முடியவில்லை. அவள் தன் முந்தானையால் மெல்லக் கண்ணீரைத் துடைத்து நிறுத்த முயன்ருள்.

பரிவுடன் அவளை நோக்கிய ஜோஸப், "தரங்கிணி! உண்மையாகச் சொல்லுகிறேன். நான் முற்றிலும் திருந்தி விட்டேன். இனி, மறந்துங்கூட நீ இருக்கும் திசையையும் திரும்பிப் பார்க்கமாட்டேன். நிச்சயமாக நீ இதை நம்ப லாம். உன்னிடம் இதுவரை வரம்புமீறி நடந்து வம்பு செய்ததற்காக நான் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளு கிறேன்."

தரங்கிணி அவன் முகத்தைச் சிலகணங்கள் ஏறிட்டுப் பார்த்துவிட்டுத் தன் முகத்தை மூடிக்கொண்டு தேம்பித் தேம்பி அழலானள்.

ஜோஸபின் உடம்பு முழுவதும் துடிதுடித்து ஆட லாயிற்று.

"ஐயோ! தரங்கிணி! நான் இவ்வளவு சொல்லியும் நீ இன்னமும் என்னை நம்பவில்லை போலிருக்கிறதே! இதற்குமேல் நான் உனக்கு எப்படிச் சொல்லி நம்ப வைப்பேன்? நீ முன்னொருநாள் என்னைக் கண்டித்துப் பேசியது எனக்கு ஞானஸ்நானஞ் செய்வித்தது போலா யிற்று. என் தங்கை எதிர்பாராதவாறு வந்து என்ன என்று கேட்டபோது, நீ என்னைக் காட்டிக் கொடுக்காமல் பெருந்தன்மையாக நடந்துகொண்டது எனக்குப் பாவ மன்னிப்பு அளித்ததுபோல் இருந்தது. நீ என்மீது பொழிந்த வசவையும் காரி உமிழ்ந்ததையும் புனிதநீர் தெளித்து உபதேசஞ் செய்ததுபோல் கொண்டு நான் முற்றும் திருந்திவிட்டேன். புது மனிதனாகி விட்டேன். ஆமாம்; வயதில் மிகச் சிறியவளானாலும், புத்தியில் பெரியவளான நீ, உன் பெருங்குணத்தால் என்னிடங் குடிகொண்டிருந்த சாத்தானை விரட்டியடித்துவிட்டு, என்னை அடியோடு புது மனிதனாக்கிவிட்டாய். இதற்காக நான் என் ஆயுள் உள்ள மட்டும், உனக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். நீ என்னைத் தீயில் குதிக்கச் சொன்னாலும் தயங்காமல் உடனே குதிப்பேன். உனக்காக எது செய்யவும், ஏன்? என் உயிரைக் கொடுக்க வும் சித்தமாயிருக்கிறேன். ஆனால், உன் மைவிழிகள் கலங்கிக் கண்ணீர் சிந்துவதை மட்டும் என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியாது—"

ஜோஸபின் இந்த உருக்கமான பேச்சு, துயரத்தில் தோய்ந்திருந்த தரங்கிணியையும், தன் நிலையில் சுதாரித்து நிற்கச் செய்யலாயிற்று. எனவே, அவள் இரண்டாவது முறையாகக் கண்களைத் துடைத்துக் கொண்டு, அழுகையை நிறுத்த முயன்றாள்.

ஜோஸப் தரங்கிணியை மறுபடியும் நோக்கி "தரங்கிணி! நீ என் அன்புச் சகோதரியின் ஆருயிர்த்தோழி என்பதையும் சிந்தித்துப் பார்க்காமல், நான் உன்னை ஆதி முதலே பரிகாசஞ் செய்துவந்தது உண்மை, நான் அதை மறுக்கவில்லை. நான் உன்னைக் கேலி பண்ணியதற்குக் காரணம் உன்மீது எனக்கு ஏற்பட்ட அன்பேயாகும். நீ முதன்முதல் என் சைக்கிளில் மோதியபோதே என் இதயத்திலும் மோதிவிட்டாய். என் தங்கையுடன் எங்கள் வீட்டுக்கு வந்த புதிதில் நீ பேசிய பேச்சின் இங்கிதமும், எங்கள் ஏசுமீது நீ பாடிய பாடல்களின் இனிமையும் என்னை வெகுவாகக் கவர்ந்து விட்டன. அமைதி தவழும் உன் அழகிய முகமும் இனிய குரலும் என்னை மயக்கி நமக்கிடையேயுள்ள ஏற்றத்தாழ்வுகளையும் மறக்கச் செய்துவிட்டன. உன்னை நோக்கித் தாவும் என் இளம் உள்ளத்தை என்னால் கட்டுப்படுத்த முடியவில்லை. ஆகவே, நான் உன்னிடம் ஏதாவது பேசிச் சிநேகஞ் செய்து கொள்ளுவதற்குப் பலவிதமாக முயன்றேன். ஆனால் நீ அதற்கு எவ்வகையிலும் இடந்தரவில்லை. அதனால், எனக்கு உன்மீது கோபம் உண்டாயிற்று. அதிலிருந்து உன்னைப் பரிகாசஞ் செய்யத் தொடங்கினேன். உன்னைப் பார்க்கும் போதெல்லாம் குறும்பாக ஏதேனும் பேசி உன்மீது எனக்குள்ள ஆசையை வெளியிட்டு வந்தேன். நீ என்னை அலட்சியப்படுத்தப் படுத்த என் பரிகாசமும் வம்பும் அதிகமாயின. மிகவும் சாந்தகுணங் கொண்ட உன்னையும் ஒரு நாள் கோபங்கொண்டு கொதித்து எழச் செய்ததென்றால், என்னுடைய விஷமச்செயல்கள் எவ்வளவு எல்லை மீறிப் போயிருக்கும் என்று நான் சிந்தித்துப் பார்த்த போது, எனக்கே வெட்கமுண்டாய் விட்டது. நீ மட்டும் அன்று என் அகம்பாவத்துக்கு அடிகொடுத்து ஆத்திரமாகக் கண்டித்துப் பேசியிராவிடில், என் விஷமப் புத்தி

வளர்ந்துகொண்டேதான் போயிருக்கும். அந்த மட்டும் கர்த்தர் என்னைக் காப்பாற்றினார். கூடிய சீக்கிரம், பர மண்டலத்திலுள்ள எங்கள் பிதாவிடம் பாவமன்னிப்புக் கோரப்போகிறேன். அதற்குமுன் என்னை மன்னித்துவிடு, தரங்கிணி! என்னை மன்னித்துவிடு. மன்னிக்க மாட்டாயா...?"

பொங்கிவரும் மனத்துயரை அடக்கமாட்டாமல் தரங்கிணி கதறலானாள். "நீ பேசினது போதும், ஜோஸப்! நிறுத்து; என்னைப் போட்டுக் கொல்லாதே!"

ஜோஸப் வாயைப் பொத்தியவாறு, "நான் இனிப் பேசவில்லை, தரங்கிணி! பேசவில்லை. நீ ஏதோ சொல்ல வேண்டும் என்றாயே, அதைமட்டும் சொல்லிவிடு! உடனே போய்விடுகிறேன்" என்றான்.

தரங்கிணி, ஜோஸபின் முகத்தைச் சிறிதுநேரம் பார்த்துக்கொண்டு மௌனமாயிருந்தாள். ஜோஸபோ தரங்கிணியின் முகத்தை நிமிர்ந்து பார்க்கத் துணிவில்லாமல், தலையைக் கவிழ்ந்து கொண்டிருந்தான்.

பொழுது போய்க் கொண்டிருந்தது. அடுத்த சில நிமிடங்களில், அவ்விடத்தில் இருள் சூழ்ந்துவிடும். கடற் காற்று வாங்க வந்திருந்த ஆடவரும் பெண்டிரும், தத்தம் வீடுநோக்கி விரைந்து நடக்கும் அரவங்கேட்டது. காக்கை, பருந்து முதலிய பறவைகள் சத்தமிட்டுக் கொண்டே கூடுகளை நோக்கிப் பறந்துசென்றன. பொழுது சாய்ந்து விட்டதை யுணர்ந்து திடுக்கிட்ட தரங்கிணி மெல்லப் பேசலானாள். "ஜோஸப்! நான் உன்னை இங்கு வந்து சந்திக்கச் சொன்னதற்குக் காரணம் வேறு. அதை யறியாமல், நீயாகவே ஏதேதோ கற்பனை செய்துகொண்டு இதுவரை என்னென்னவோ பேசினாய்...... உன்னைக் கண்டிப்பதற்காக நான் இங்கே வரச் சொல்லவில்லை..."

"அதற்காக இல்லையென்றால்......?"

"வேறு ஒரு முக்கிய விஷயம்பற்றி உன்னிடம் பேசி, ஒரு முடிவுக்கு வருவதற்காக..."

"ஒரு முக்கிய விஷயம்பற்றி என்னிடம் பேசவா?......"

"ஆமாம்."

ஜோஸப் திகைப்புற்றவனாய்த் தரங்கிணியின் முகத்தைக் கூர்ந்து நோக்கலானான்.

தரங்கிணியும் அவனை எதிரிட்டு நோக்கி, அவன் முகத்தை ஆராய்ந்தவாறு, "நான் உன்னிடம் ஒன்று கேட்கப் போகிறேன்; ஒளிவு மறைவில்லாமல் உண்மையாகப் பதில் சொல்லவேண்டும்."

"என்ன கேட்கப் போகிறாய்? கேள்; மனத்தில் கள்ளங் கரவின்றிப் பதில் சொல்லுவேன்..."

தரங்கிணி கேட்கப்போகும் கேள்வியின் நினைப்பே அவளுடைய முகத்தைச் சிவப்பாக்கிவிட்டது. உடம்பைக் குன்ற வைத்துவிட்டது. அவள் தலை குனிந்துகொண்டு கேட்டாள்:

"நீ என்னை முதன்முதலாகக் கண்டதிலிருந்தே அன்பு கொண்டுவிட்டதாகச் சொல்லுகிறாயே? இது உண்மை தானா? உண்மையாகவே நீ என்னை நேசிக்கிறாயா?..."

இக் கேள்வி ஜோஸபைத் தப்பர்த்தங் கொள்ளச் செய்துவிட்டது.

"இதென்ன, கேள்வி?"

தரங்கிணி சிறிது நிமிர்ந்து, அவன் முகத்தை நோக்கியவாறு, "இல்லை, கேட்கிறேன், உன் உள்ளக் கருத்தை உண்மையாக அறிந்து கொள்ளத்தான்..."

"என் நெஞ்சைப் பிளந்து காட்டட்டுமா?"

"நீ என்மீது கொண்டுள்ள அன்பு பின்னால் மாறாதே?"

"என் உடலிலிருந்து உயிர்பிரிந்தாலும் உன்மீது நான் கொண்டுள்ள அன்பு மாறுது."

"இதை நான் உறுதியாக நம்பலாமா?"

"நான் வேறு எப்படி உன்னை நம்பச் செய்வது? தரங்கிணி! என்னைப் பெற்றெடுத்த அன்னைமீது ஆணையாக—என் அன்பைக் கவர்ந்த உன்மீது சத்தியமாகச் சொல்லுகிறேன். நிச்சயமாக நம்பு!"

ஜோஸப், தரங்கிணி சிரத்தின்மீது கையை வைத்து விட்டுப் பின் அவள் கரத்தை மலர்த்தித் தன் கையால் அடித்துச் சத்தியப் பிரமாணஞ் செய்து கொடுத்தான்.

தரங்கிணியின் மதிவதனத்தில் திருப்தி காணப்பட்டது.

"இது போதும்." என்ற வார்த்தையால், தன் திருப்தியை வெளிப்படுத்திய தரங்கிணி, "அது சரி; ஜோஸப்! என்மீது கொண்டுள்ள உன் அன்பை நீ எப்படி வெளிப்படுத்துவாய்?" என்று கேட்டாள்.

ஒரு க்ஷணந் தயங்கிய ஜோஸப், "எப்படி வெளிப் படுத்தவேண்டும் என்று நீ விரும்புகிருய்? சொல். அப்படியே செய்கிறேன்" என்முன்.

தரங்கிணி தன்னுள் எழுந்த பரிபவ உணர்ச்சியை உதறிவிட்டு, "நீ என்னைக் கலியாணஞ் செய்துகொள் வாயா...?" என்று மெல்லிய குரலில் கேட்டாள்.

ஜோஸப் திடுக்கிட்டுப் போனுன். அவன் இதுபோன்ற கேள்வியைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை என்பது, அவனிடம் காணப்பட்ட விதிர்விதிர்ப்பிலிருந்து தெரிந்தது.

"கலியாணமா? உன்னையா? அது எப்படிச் சாத்தியமாகும்?..."

தரங்கிணி சாவதானமாகக் கேட்டாள்;

"இதுதான் நீ என்மீது கொண்டிருக்கும் அன்புக்கு அடையாளமா? கலியாணம் என்றதுமே, ஏன் அப்படிப் பின் வாங்குகிறுய்? கலியாணத்தால் அல்லாமல், பின் எதனுல் நமக்குள் அன்புத்தொடர்பு இருக்க முடியும்?"

இக்கேள்விகளுக்கு ஜோஸபினுல் உடனடியாகப் பதில் சொல்ல முடியவில்லை.

தரங்கிணி ஜோஸபின் முகத்தைக் கூர்ந்து கவனித்த படியே, "கலியாணஞ் செய்துகொள்ளாமலே, விருப்பம் இருக்கும்வரை, இப்படியே உல்லாசமாக இருந்து காலங் கழித்துவிடலாம் என்ற எண்ணமா...?"

இப்போதும் ஜோஸப் பேசாமல்தான் இருந்தான்.

தரங்கிணி துயரந்தோய்ந்த குரலில் நிதானமாகப் பேசினுள்: "உன் தயக்கத்தைக் கண்டு நான் ஆச்சரியப் படவில்லை. இவ்விதநிலையையும் நான் எதிர்பார்த்துத்தான் இருந்தேன். பொதுவாக, ஆண்களின் சமாசாரம் உலகப் பிரசித்தமானதுதானே!"

"ஆடவர்களின் பொதுவியல்பு அப்படியிருக்கலாம். ஆனுல் என்னை அந்த ரகத்தில் சேர்க்காதே, தரங்கிணி! நீ அவசரப்பட்டு என்னைத் தவருக எடைபோடுகிறுய்." என்று ஆத்திரத்துடன் குறுக்கிட்ட ஜோஸப், "நான் எந்த அடிப்படையில் அந்தக் கேள்வியை கேட்டேன் என்பதை நீ புரிந்துகொள்ளவில்லை. நான் உன்னை எப்படிக் கலியாணஞ் செய்துகொள்ள முடியும் என்றுதான் கேட்டேனேயொழிய, நான் உன்னை விவாகஞ் செய்துகொள்ள முடியாது என்று சொல்லவில்லையே?"

தரங்கிணி, அவனை நிமிர்ந்து நோக்கியவாறு, "இல்லை" என்றுள்.

"அப்படியிருக்க, நீ அவசரப்பட்டு என்மீது குற்றஞ் சாட்டலாமா?"

"அது சரி; நாம் ஏன் கலியாணஞ் செய்து கொள்ள முடியாது என்கிருய்?"

ஜோஸப் தலைதாழ்த்தியபடி, "நான் கிறிஸ்துவன். நீ ஓர் இந்துப் பெண். நீங்கள் உயர்ந்த குலம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறவர்கள்...."

"வார்த்தையை வளர்த்தாதே ஜோஸப்! இரண்டில் ஒன்று பதில் சொல்லு. என்னைப் பொறுத்தவரையில் சாதியும் மதமும் நான் கொண்டுள்ள முடிவுக்குக் குறுக்கே நிற்பதாக நான் எண்ணவில்லை. நீ அவ்விதம் கருதுகிருய் போலும்? வேறு மதத்தினனான நான், உன்னைக் கலியாணஞ் செய்துகொள்ளுவதற்கு உங்கள் மதம் தடையாக இருக்குமா? நான் உன்னைக் கலியாணஞ் செய்து கொள்வதென்ருல், உங்கள் மதத்தில் சேர்ந்துவிட வேண்டுமா? அவ்விதம் சேர்ந்துவிடவேண்டியது அவசியம் என்ருல், நான் மதம் மாறவும் தயாராயிருக்கிறேன்..."

அவள் பேச்சில் உறுதி தொனித்தது.

ஜோஸப் அவளைப் பிரமிப்போடு பார்த்தவாறு, "அதற்கெல்லாம் இப்போது அவசியமில்லை, தரங்கிணி! அன்பினுல் எப்படியோ பிணைக்கப்பட்ட இருவர், அவரவர் மதத்தில் இருந்தபடியே கலியாணஞ் செய்துகொள்ளலாம். இப்படி எத்தனையோ கலியாணங்கள் நாடோறும் நடந்து வருகின்றன..."

"அப்படியா! மிக்க மகிழ்ச்சி" என்ற தரங்கிணி, "ஜோஸப், நீ உடனே உன் பெற்ருேரிடஞ் சொல்லி, நம் கலியாணத்துக்கு ஏற்பாடு செய். என்ன?" என்று மொழிந்தாள்.

ஜோஸப் குறுக்கிட்டு, "நான் என் தாய் தகப்பனுரிடம் சொல்லி ஏற்பாடுசெய்வது இருக்கட்டும். முதலில் இதைச் சொல், உன் பெற்ருேர் தீவிர வைதிகப் பேர்வழிகள்

என்று தங்கை காதரீன் சொல்லக் கேட்டிருக்கிறேன். அப் பேர்ப்பட்டவர்கள் நீச சாதி என அவர்கள் கருதும் கிறிஸ்துவனுன என்னை, நீ கலியாணஞ் செய்துகொள்ளச் சம்மதம் அளிப்பார்களா?..."

தரங்கிணி இது கேட்டுத் தயங்கவில்லை.

"நாம் கலியாணஞ் செய்துகொள்ளுவதற்கு, என் பெற்ருேர் சம்மதத்தை நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அதற்கு அவசியமிருப்பதாகவும் நான் கருதவில்லை. ஆகவே, நீ அது பற்றியெல்லாம் கவலைகொள்ள வேண்டாம். உன் பெற்ருேர் ஆட்சேபிக்க மாட்டார்களே! அதைச் சொல். அவர்கள் அங்கீகாரத்துடனும், ஆசியுடனும், நீ என்னைக் கலியாணஞ் செய்துகொள்ள முடியும் என்று நீ உறுதி யளித்தால் போதும். இப்போதே, இப்படியே உன்னுடன் நான் வந்துவிடத் தயார்..."

"நீ என்னுடன் வந்துவிடலாம். ஆனுல், உன் தந்தை மைனர் பெண்ணுன உன்னை ஏமாற்றி நான் கடத்திக் கொண்டு போய்விட்டேன் என்று வழக்குத் தொடுத்தால்? இக் கலியாணம் சட்டப்படி செல்லாது என்று வாதித்த தால்?"

ஜோஸப் சட்டப் பிரச்சினையைக் கிளப்பினுன்.

"என் அப்பா நீ நினைக்கிறபடி வழக்கு எதுவும் எடுக்க மாட்டார். அப்படித் தொடுத்தாலும், அது செல்லுபடி யாகாது. ஏனென்ருல் நான் மைனர் பெண்ணல்ல; வயது இருபதுக்கு மேலாகிறது."

ஜோஸப் நெற்றியைக் கைவிரல்களால் அழுத்தித் தடவிக்கொண்டு, சிறிது நேரம் மௌனமாயிருந்தான்.

தரங்கிணி, அவனைக் கவனித்தபடியே, "என்ன யோசிக் கிருய்? ஜோஸப்! என்னைக் கலியாணஞ் செய்துகொள்ளும் விஷயத்தில், ஏதாயினும் சங்கடம் இருந்தால் சொல்லு!

நான் உன் விருப்பத்துக்கும் சௌகரியத்துக்கும் மாருக உன்னை வற்புறுத்தவில்லை..." என்ருள்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை."

"பின்னே? அண்ணனுக்கு இன்னும் கலியாணமாக வில்லை. வீட்டில் வயது வந்த சகோதரி யொருத்தி கலியாணத்துக்குக் காத்திருக்கிருள். அப்படியிருக்க, நான் எப்படிக் கலியாணஞ் செய்துகொள்ள முடியும் என்று யோசிக்கிருயா?..."

ஜோஸப் 'உம்' கொட்டினுனே யொழிய, அவள் எழுப்பிய கேள்விகளுக்குப் பதில் சொல்லவில்லை.

தரங்கிணி தொடர்ந்து பேசினுள்: "தங்கராஜுக்கும் காதரீனுக்கும் கல்யாணம் ஆகும்வரை நான் காத்திருக்கிறேன். அவ்விருவருக்கும் கலியாணமான பின்னர், நாம் விவாகஞ் செய்துகொள்ளலாம். ஆனுல் ஒன்று; அதுவரை நான் உங்கள் வீட்டில் காதரீனுடன் இருக்க உன் பெற்ருேரிடம் அனுமதி மட்டும் வாங்கித் தரவேண்டும்."

ஜோஸப் இப்போது பேசத் தொடங்கினுன்: "அப்படியெல்லாம் நீ காத்திருக்க வேண்டியதில்லை. நான் என் பெற்ருேரிடம் இவ்விஷயத்தைச் சொன்னுல், நாளையே நமக்குக் கலியாணஞ் செய்து வைத்துவிடுவார்கள். உன்னைப்போன்ற அறிவுள்ளவளும் அழகானவளுமான பெண் தங்களுக்கு மருமகளாக வருவதை இரட்டிப்பு மகிழ்ச்சியோடு வரவேற்பார்கள். என் அம்மாவுக்கு உன் மீது உள்ள அன்பு அளவிட்டுச் சொல்லமுடியாது. அப்பாவும் உன்னிடம் அளவுகடந்த மதிப்பு வைத்திருக்கிருர். காதரீனைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. ஆருயிர்த் தோழியான நீ, அவளுக்கு அண்ணியாகவே வந்துவிட்டாய் என்று தெரிந்தால், ஆனந்தக் கூத்தாடுவாள்..."

தரங்கிணி, இச்சமயம் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டாள்.

ஜோஸப் அவளைப் பார்த்துக்கொண்டே பேசினான்: "அண்ணனுக்குக் கலியாணமான பின்னர்தான் தம்பிக்குத் திருமணஞ் செய்ய வேண்டுமென்று, இந்துக்களாகிய நீங்கள் கொள்கை கொண்டிருப்பது தெரியும். நாங்கள் அப்படியெல்லாம் பார்ப்பதில்லை. எவ்வெப்போது எப்படியெப்படிச் சௌகர்யம் ஏற்படுகிறதோ, அதற்குத் தகுந்தவாறு நாங்கள் எந்தக் காரியத்தையும் வசதியாக நடத்திக் கொண்டு போவோம்."

"அப்படியிருக்கும்போது, வேறென்ன யோசனை?..."

தரங்கிணி அவன் முகத்தை மறுபடியும் கவனித்தபடி கேட்டாள்.

ஜோஸபின் நெற்றியில் சிந்தனை ரேகைகள் படரலாயின. அவன் தரங்கிணியைக் கடைக்கணித்தவாறு, "ஒன்றுமில்லை; தரங்கிணி! நீ இம் முடிவுக்குத் திடீரென எப்படி வந்தாய்? உன் மனம் இவ்விதம் புரட்சிகரமான மாறுதல் கொண்டதற்குக் காரணம் என்ன? என்பதை அறிந்து கொள்ள, நான் அவாவுடையவனாயிருக்கிறேன். ஏனென்றால், நேற்றுவரை என்னைக் கண்டாலே விஷத்தைப்போல் வெறுத்து ஒதுக்கிவந்த நீ, இன்று எல்லா வரம்புகளையும் தடைகளையும் மீறி வந்து கலியாணஞ் செய்துகொள்ள முன் வருகிறாய் என்றால், அதை என்னால் எளிதில் நம்ப முடியவில்லை. இவ்விதம் நீ எதிர்பாராத முடிவுக்கு வருவதற்கு ஏதோ காரணம் இருக்கவேண்டும்? உன் மனம் இவ்வாறு விரக்தி கொள்ளும் படியாக, வீட்டில் ஏதேனும் அசம்பாவிதம் நிகழ்ந்துவிட்டதா? அல்லது தாய் தகப்பனுடன் சண்டையா? ஏதோ கோபதாபத்தில் அவசரப்பட்டு இப்படி...?"

ஜோஸப் வார்த்தையை முடிக்கும் முன்பே, தரங்கிணி குறுக்கிட்டு, ஜோஸப்! இதைக் கேள்; நீ எழுப்பியுள்ள வினுக்களுக்கும் ஐயங்களுக்கும் நான் பதில் சொல்லவும் தயாராக இல்லை: காரணகாரிய விளக்கங்கூறவும் விரும்ப வில்லை. ஆனுல், நான் எதற்காகவோ பெற்ருேருடன் சண்டை போட்டுக்கொண்டு, அந்த ஆத்திர உணர்ச்சியில் இம் முடிவுக்கு வந்திருப்பதாக நீ நினைப்பது மட்டும் சரியல்ல. அவ்வளவுதான் நான் கூறமுடியும்'' என்று கூறினுள். பின் அவன் உள்ளத்தை ஊடுருவிப் பார்ப்பதுபோல், கூர்ந்து நோக்கி, "என்னைக் கல்யாணஞ் செய்து கொள்ளச் சம்மதமா இல்லையா? அதை மட்டும் சொல்; நான் கேட்டு விட்டுப் போகிறேன்'' என்று கண்டிப்பாகக் கேட்டாள்.

ஜோஸப், தரங்கிணியை இரக்கத்தோடு பார்த்து, "கோபித்துக் கொள்ளாதே, தரங்கிணி! இனிமேல் நான் ஒன்றும் கேட்கமாட்டேன். இன்றிரவு அம்மா அப்பா விடம் இவ் விஷயத்தைத் தெரிவிக்கிறேன். அவர்கள் கட்டாயம் கலியாணத்துக்கு ஏற்பாடு செய்வார்கள், சீக்கிரம்'' என்று, பற்று ஒட்டு இல்லாமல் பதில் சொன்ஞன்.

தரங்கிணி, அப்போதிருந்த மனநிலையில், ஜோஸபின் பேச்சில் தொனித்த இதயபாவத்தைக் கவனிக்கவில்லை. "அப்ப, சரி; நான் போகிறேன். ஜோஸப்! அடுத்தபடியாக நான் கலியாணத்தன்றுதான் உன்னைச் சந்திப்பேன். இதற்கிடையில் நீ என்னைக் கண்டுபேச முயலக்கூடாது. உன் தந்தை கலியாணத்துக்கு நாள்குறித்ததும், நீ காதரீனிடம் செய்தியைச் சொல்லி அனுப்பு. கலியாணத்துக்கு முன் நாள், நான், உங்கள் வீட்டுக்கு வந்து விடுகிறேன்'' என்று கூறியவாறே, எழுந்திருக்கலாஞள்.

ஜோஸப், அவளுடைய மலர்க்கரங்களை எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக்கொண்டான்.

"ஊஉம்; இதெல்லாம் இப்போது கூடாது. கலியாணம் ஆனபின்......" என்று மொழிந்தவாறு, தரங்கிணி, ஜோஸபின் பிடியிலிருந்து தன் கரங்களை மெல்ல விடுவித்துக்கொண்டு எழுந்து, செந்தோம் சர்ச்சை நோக்கி விரைந்து நடக்கலானாள்.

"ஐயோ, பெண்ணே!"

ஜோஸபின் வாய் அனுதாபம் தெரிவித்தது. அவன் கண்கள், தரங்கிணி அன்னம்போல் அழகுநடை நடந்து செல்லும் அழகைப் பார்த்துக்கொண்டிருந்தன.

தரங்கிணி, தன் சேலைத்தலைப்பால் கலங்கிய கண்களைத் துடைத்துக்கொண்டே போனாள்.

இச்சமயம், கடற்கரை நடைபாதையில் வரிசையாக இருந்த மெர்க்குரி விளக்குகள் பிரகாசிக்கலாயின.

# 10

"அண்ணா! என்ன சமாச்சாரம்? இரண்டு நாளாக உன் சந்தடியைக் காணோமே!......"

காதரீன் சிரித்துக்கொண்டே கேட்டாள்.

துவைத்த துணிகளுக்குப் பெட்டி போட்டுக்கொண்டிருந்த ஜோஸப், ஏதோ யோசனையில் இருந்தானேயொழிய, சகோதரியின் பேச்சைக் காதில் வாங்கவில்லை.

"சின்ன அண்ணா! உன்னைத்தான்."

காதரீன், அவன் காதின் கிட்டப் போய்க் கிண்டலாகக் கூப்பிட்டாள்.

"உம்" தூக்கத்திலிருந்து திடீரென எழுந்து கேட்பவன் போல், 'கிலாக் சர்ட்'டையும், 'பாண்ட்'டையும் 'இஸ்திரி' செய்து கொண்டிருந்த ஜோஸப், தலையைத் தூக்கிக் கேட்டான்.

பிரமை பிடித்தவன்போல் தன் சகோதரன் காணப் படுவதைக் கண்டு, காதரீன் ஆச்சரியப்பட்டுப் போனாள்.

"அண்ணா, ஏன் இப்படிப் பித்துப் பிடித்தவன்போல் இருக்கிறாய்? ஆபீஸில் ஏதாயினும் தகராறா? அல்லது உடம்புக்கு ஏதேனும்?......"

"ஊஹூம். அதெல்லாம் ஒன்றுமில்லை. நான் எப்போதும் போல்தானே இருக்கிறேன்."

குதிரை சிலிர்த்துக் கொள்ளுவதுபோல், அவன் தன் உடம்பைச் சிலிர்த்துக்கொண்டு, சகோதரிக்குப் பதில் சொல்ல முயன்றான்.

காதரீன் இரக்கஉணர்ச்சியை வெளிப்படுத்தியவாறு, "ஏன் அண்ணா! மறைக்கிறாய்? நான்தான் உன்னை இரண்டு நாளாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேனே! எதிலும் நாட்டமில்லாது சதா சிந்தனையிலேயே இருந்து கொண்டிருப்பதை நான் கவனிக்கவில்லை என்று நினைத்தாயா? எனக்கு எல்லாம் தெரியும். நீ ஏதோ உன் மனத்தில் வைத்துக் கொண்டு புழுங்கிக் கொண்டிருக்கிறாய்? மற்றவர்கள் எதிரில் உன்னை ஒன்றுங் கேட்கக்கூடாது என்றுதான், அம்மா போகவிட்டுக் கேட்கிறேன்........."

ஜோஸப் தலை குனிந்து கொண்டான்.

காதரீன் அவன் முகத்தைப்பார்த்தவாறு, 'என்னிடம் சொல்லக்கூடாது என்று நீ எண்ணினால், சொல்ல வேண்டாம். ஆனால், உன்னை உலுப்பிக் கொண்டிருக்கும் விஷயத்தை யாரிடமாயினும் சொல்லி ஆற்றிக்கொள்வது, அல்லது பரிகாரம் தேடிக்கொள்ளுவது நல்லது என்று

எனக்குத் தோன்றுகிறது. நான் உன்னிடம் தமாஷாகப் பேசத் தொடங்கியதற்குக் கூடக் காரணம், உன் கவனத்தை மாற்றுவதற்காகத்தான்.''

ஜோஸப் நிமிர்ந்தான். காதரீனைச் சில விநாடிகள் கண்கொட்டாமல் பார்த்தான். பின், ''காதரீன்! நீ குறிப்பிட்டதுபோல், என்னை வாட்டிக்கொண்டிருக்கும் விஷயத்தை, உன்னிடந்தான் சொல்லி ஆற்றிக்கொள்ள முடியும்; அதற்குப் பரிகாரமும் தேடமுடியும்; வேறு யாரிடமும் சொல்லமுடியாது; சொல்லவுங் கூடாது. ஆம்; தாய் தகப்பன், சகோதரனிடங் கூடத்தான்!''

காதரீன் முன்னைவிட வியப்புடன் சகோதரன் முகத்தை நோக்கினாள்.

சில விநாடிகள் அங்கு அமைதி நிலவியது. இதனிடையே ஜோஸப், இஸ்திரிப் பெட்டியையும் துணிகளையும் எடுத்துத் தன் அறையில் வைத்துவிட்டு வந்தான்.

உச்சிக்கு வர விரைந்துகொண்டிருந்த ஞாயிற்றை மேகக் கூட்டங்கள் விரட்டிக்கொண்டிருந்தன. வாசற் கொடியில் போட்டு உலரவைத்திருந்த துணிகள்மீது ஒரு காக்கை வந்து உட்கார்ந்ததைத் தற்செயலாகக் கவனித்துவிட்ட ஜோஸப், தாழ்வாரத்தில் பம்பரம் ஆடிக்கொண்டிருந்த டேவிட்டைக் கூப்பிட்டு, அதை ஓட்டச் சொன்னான். பின்னர், அவன் பின்கட்டுப் பக்கம் நோக்கிவிட்டுக் காதரீனிடம் வந்தான்.

''காதரீன்! நீ தரங்கிணியைக் கடைசியாக எப்போது பார்த்தாய்?''

தன் சகோதரன் தரங்கிணியைப் பற்றிப் பேச்சு எடுப்பான் என்று, காதரீன் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. ஆதலால், இது கேட்டுத் திடுக்கிட்டாள்.

"ஏன்? அவளைப்பற்றி என்ன? அவள் மூன்று நாட்களுக்கு முன்னர்தானே நம் வீட்டுக்கு வந்து போனாள்?"

"அவளுக்குக் கலியாண முயற்சி ஏதாயினும் நடக்கிறதா? உனக்குத் தெரியுமா? அதுபற்றி உன்னிடம் அவள் ஏதேனும் சொன்னாளா?"

"தரங்கிணியின் கலியாண விஷயம் பற்றி உனக்கு என்ன சிரத்தை அண்ணா? நீ ஏன் அது குறித்துக் கேட்கிறாய்?"

காதரீனின் குரலில் கடுமை தொனித்தது. தன் தோழியின் கலியாணம்பற்றித் தெரிந்துகொள்ளத் தன் சகோதரன் அக்கறை காட்ட வேண்டிய அவசியமென்ன? அவன் அவ்விஷயம் பற்றிப் பேசுவதே உசிதமல்ல என்று அவள் கருதினாள்.

ஜோஸப், தங்கையை இரக்கமாகப் பார்த்து, "காதரீன் கோபித்துக்கொள்ளாமல் நான் சொல்லுவதைக்கேள். அவசரப்பட்டு நான் பேசுவதில் தப்பபிப்ராயங் கொள்ளாதே. தரங்கிணியின் கலியாணத்தைப்பற்றி நான் கேட்பதற்கு, நியாயமான காரணமிருக்கிறதென்பதை மட்டும் நீ நம்பு."

காதரீன், "என்ன காரணம்? சொல், அண்ணா!' என்று ஆவலோடு கேட்டாள். "ஒரு பெண்ணின் கலியாணத்தைப் பற்றிச் சம்பந்தமில்லாத வாலிபனொருவன் கேட்பது உசிதமல்லவே என்ற எண்ணத்தால்தான், நீ தரங்கிணியின் கலியாணம் குறித்துக் கேட்டதுமே ஆத்திரங் கொண்டேன்."

"நீ கோபப்பட்டது நியாயமானதே! அதுவும் உன் சகோதரன் வரம்புமீறி ஒரு பெண்ணின் கலியாண விஷயத்தில் தலையிடுகிறான் என்றால், அவனைக் கண்டித்துத் திருத்த வேண்டியது உன் கடமைதான். அது அவசியமும்கூட."

"அதிருக்கட்டும். நீ சொல்ல வந்த விஷயத்தைச் சொல்லு; அண்ணு!"

வெளிவாயிலேயும் பின்கட்டையும் ஒருமுறை பார்த்து விட்டு, "டேவிட், இங்கேயேதான் விளையாடிக் கொண்டிரு. யாராயினும் வந்தால் சொல்லு. அம்மா பின்னுல் இருக்கிருர்; பார்த்துக்கொள்" என்று சொன்ன ஜோஸப் எழுந்து, "காதரீன்! என் அறைக்குள் வா! நாம் பேசும் விஷயம் அம்மா அப்பாவுக்குத் தெரியக்கூடாது..." என்று கூறிய வாறு, தங்கையை உள்ளே அழைத்துக் கொண்டு போனுன்.

காதரீன் ஆவலுணர்ச்சியோடு ஜோஸப் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஜோஸப் அவளை அங்கிருந்த நாற்காலியொன்றில் உட்கார சொல்லிவிட்டுத் தான் கட்டிலின்மீது அமர்ந்தான்.

"தரங்கிணி தன் கலியாண விஷயம்பற்றி உன்னிடம் பேசுவதில்லையா? காதரீன்!"

"ஏன் பேசாமல்? யாராரோ வந்து பார்த்துவிட்டுப் போவதாகச் சொல்லுவாள். ஆனுல், இப்போதெல்லாம் அவள் என்னிடமோ வேறு சிநேகிதிகளிடமோ கலியாணத் தைப்பற்றிப் பேச்சே எடுப்பதில்லை. ஆறு மாதத்துக்கு மேல் இருக்கும்."

"அப்படியா? சமீபத்தில் அவளை வந்து யாரும் பார்த்த தாக உனக்குத் தகவல் தெரியுமா?"

"என்ன அண்ணு! துப்பறியும் நிபுணரொருவர் புலன் அறிய விசாரணை நடத்துவதுபோல், நீ என்னை ஏதேதோ கேள்வி கேட்கத் தொடங்கிவிட்டாய்?"

"விளையாட்டுப் பேச்சுப்பேச இது சமயமல்ல; காத ரின். தயவு செய்து நான் கேட்கும் கேள்விகளுக்கு உனக்குத் தெரிந்தவரையில் பதில் சொல்."

"சொல்லுகிறேன், அண்ணு!" என்ற காதரீன், தரங் கிணியைச் சென்ற மாதத்தில்கூட யார் யாரோ வந்து பார்த்துவிட்டுப் போனர்களாம். ஆனல், முடிவுதான் ஒன்றும் இதுவரை ஏற்படவில்லையாம். இதுகூட இவள் சொல்லவில்லை. பாகீரதியும், சாரதாவும் தாங்கள் கேட்டறிந்ததை என்னிடம் வந்து சொல்லிய பிறகுதான், எனக்குத் தெரியும்."

"இத்தனைபேர் வந்து பார்த்தும் ஏன் ஒரு முடிவும் ஏற்படவில்லை? பெண் பார்க்க வந்தவர்களில் ஒருவருக்குக் கூடவா தரங்கிணியைப் பிடிக்காமல் இருந்திருக்கும்? வந்து பார்த்தவர்களெல்லாம் குருடர்களாகவா இருந்தார்கள்?"

காதரீன் புன்முறுவல் புரிந்து, "நன்முகச் சொன்னுய், அண்ணு! தரங்கிணியைக் கண்ணிருந்து பார்த்தவர்கள் எங்களுக்குப் பெண்ணைப் பிடிக்கவில்லை என்று சொல்லி யிருப்பார்களா? சொல்லத்தான் துணிவு இருந்திருக்குமா?"

"பின்னே?"

தரங்கிணியின் குடும்பம் ஏழ்மையாயிருப்பது ஒரு குற்றமாய்விட்டது. வருபவர்களெல்லாம், தாங்கள் எதிர் பார்க்கிற வரதட்சணையைப் பெண்ணின் தந்தையால் கொடுக்க முடியுமா? கலியாணத்தைச் சிறப்பாகச் செய் வார்களா? சீர்வரிசையைச் சரியாகச் செய்வார்களா? என்று சந்தேகிக்கிமுர்களாம். தம்முடைய சக்திக்கு முடிந்த அளவு கடன் உடன்பட்டாயினும் கௌரவமாகச் செய்வோம் என்று, தரங்கிணியின் தந்தை எவ்வளவோ சொன்னுலும் யாரும் நம்பமாட்டேன் என்கிமுர்களாம்..."

"தரங்கிணியின் கலியாணம் தடைப்பட்டு வருவதற்கு முக்கிய காரணம், பொருளாதாரப் பிரச்னைதான் என்று சொல்லு."

"ஆமாம், பண விஷயம்தான் தரங்கிணியின் கலியாண விஷயத்தில் பெரிய பிரச்சினையாக இருந்து வருவதாகத் தெரிகிறது, அண்ணே!"

ஜோஸப் யோசனையில் ஆழ்ந்துவிட்டான்.

காதரீன் தொடர்ந்து பேசினுள்: 'சென்ற ஆவணி மாத முதலில் சிதம்பரத்திலிருந்து பிள்ளை வீட்டுக்காரர் சிலர் வந்து தரங்கிணியைப் பார்த்தார்களாம். பிள்ளையின் பெற்ருேர் உட்பட எல்லாருக்குமே பெண்ணை மிகவும் பிடித்துவிட்டதாம். மாப்பிள்ளை தரங்கிணியைக் கண்டு சொக்கிப் போய்விட்டாராம். அவளுடைய பாட்டைக் கேட்டு அவர் சபாஷ்கூடப் போட்டாராம்..."

ஜோஸப் முகத்தில் முறுவல் தோன்றி மறைந்தது.

"உம்."

"ஆனுல்...?"

"ஆனுல் என்ன?"

காதரீன், "பிள்ளையின் தந்தை பிள்ளையின் படிப்பைப் பற்றியும் உத்தியோகத்தை பற்றியும் பிரமாதமாகச் சொல்லித் தங்கள் குடும்ப அந்தஸ்துக்கும் பிள்ளையின் தகுதிக்கும் ஏற்றுற்போல், கலியாணம் முதலியவைகளைச் செய்யமுடியுமா என்று கேட்டாராம். தரங்கிணியின் தகப்பஞர், தம்மால் முடிந்த அளவு கௌரவமாகச் செய்வதாக வும், ஏறத்தாழ இருந்தாலும் பெரிய மனது பண்ணி ஏற்றுக்கொள்ள வேண்டுமெனவும் விநயமாகக் கேட்டுக் கொண்டாராம். இப்படிச் சொன்னதுமே, அந்தக் கல் நெஞ்சம் படைத்த மனுஷன், சடக்கென எழுந்து, சொல் லாமல் கொள்ளாமல், தன்னுடன் வந்தவர்களோடு கிளம்பி

விட்டாராம்...'' என்று வருத்தந் தொனிக்கும் குரலில் சொன்னாள்.

''ஐயோ, பாவம்!'' என்ற ஜோஸப், ''அவர்கள் எங்கிருந்து வந்தவர்கள் எனச் சொன்னாய்?''

''சிதம்பரத்திலிருந்து. ஆனால், அவர்கள் இப்போது நம்ம நகரத்துக்கே வந்துவிட்டார்களாம். ஏனென்றால், பிள்ளைக்கு இங்கு ஸ்டேட்பாங்கில் வேலையாய் விட்டதாம். தரங்கிணியை வந்து பார்த்தவர்களில், இந்தப்பிள்ளையைத் தான் அவள் அப்பாவுக்கு ரொம்பப் பிடித்துவிட்டதாம். அழகு, படிப்பு, அந்தஸ்து சகலமும் பொருந்தியிருப்பதாக அவர் அபிப்பிராயப்பட்டிருக்கிறாராம். அதனாலேயே, அவர் அவர்கள் பார்த்துவிட்டுப்போய் நாலு மாதத்துக்கு மேலாகியும், அந்தப் பிள்ளையை மறக்காது, எப்படியும் தரங்கிணியை அவருக்குக் கலியாணஞ் செய்து கொடுத்து விட வேண்டுமென்ற முடிவோடு, எங்கெங்கோ பணத் துக்கு அலைந்து கொண்டிருக்கிறாராம். அவர்களுக்குப் பின்னால் வந்து பெண்ணைப் பார்த்துவிட்டுப் போகிறவர் களை, அவர் கவனிப்பதுகூட இல்லையாம். சாரதாதான் இந்தத் தகவல்களையெல்லாம் தெரிந்துவந்து கதை கதையாகச் சொல்லுகிறாள்......''

''முன்னைப்போல இருந்தாலும், அப்பாவிடஞ் சொல்லி உதவி புரிய வைத்திருக்கலாம். மெடிகல் ஸ்டோர்தான் பாழாய்ப்போன வரியுயர்வால் படுத்துப் போய்விட்டதே! வெளிநாடுகளிலிருந்து உயர்ந்த மருந்துகளைத் தருவித்து வியாபாரஞ் செய்ய முடியாமல் போயிற்றே! முடியாததை நினைத்துப் பேசி, இப்போது பயன் என்ன?''

இப்படி அநுதாபத்தோடு சொல்லி நிறுத்தியவன், திடீரென ஏதோ நினைத்துக்கொண்டு, ''பிள்ளை எங்கே

வேலையாயிருக்கிறான் என்று சொன்னாய்?" என்று கேட்டான்.

"நீ வேலை பார்க்கும் ஸ்டேட் பாங்கில்தான். ஹெட் அக்கவுண்டண்டாம்."

"எத்தனையோ பிராஞ்ச் இருக்கிறதே! எதில் வேலையாயிருக்கிறானோ? ஆனால், ஸ்டேட் பாங்கில் அவன் ஹெட் அக்கவுண்டண்டாயிருக்கமுடியாது. ஏனென்றால், எடுத்தவுடனே யாருக்கும் அந்த வேலை தரமாட்டார்கள்."

"எம்காம்மாமே? அதுவும், பெரிய இடத்துச் சிபார்சாம்!"

"எம்காம்மா? நம்ம பாங்கில் மூன்று மாதத்துக்குமுன் ஒருவன் நியமிக்கப்பட்டானே! அவனாயிருக்குமோ?" தனக்குத் தானே கேட்டுக்கொண்ட ஜோஸப், பின் காதரீனைப் பார்த்து, "ஓ! அப்படியா? அவன் எந்தப் பிராஞ்சில் இருக்கிறான் என உனக்குத் தெரியுமா?"

"எனக்கு எப்படித் தெரியும்? பாகீரதியைக் கேட்டுச் சொல்லுகிறேன். அவள் குடும்பத்துக்கு, அவர்கள் உறவாம்........"

"அவள் பிள்ளையின் பெயரைச் சொல்லியிருப்பாளே!"

"சௌந்தரராஜன் என்று சொன்னாள்."

ஜோஸப் துள்ளிக் குதித்தான். "சௌந்தரராஜனா? அப்படி ஒருவன் நான் வேலை செய்யும் எஸ்பிளனேட் பிராஞ்சில்தான் வந்து சேர்ந்திருக்கிறான். ஆள் வாட்டஞ் சாட்டமாய் ராஜபார்ட் ஆசாமி மாதிரியிருப்பான். நல்ல சுபாவம். சரளமாக எல்லோருடனும் பேசுவான். தான் பெரிய பட்டதாரி; பெரிய உத்தியோகத்திலிருக்கிறோம் என்ற கர்வம் அவனிடம் கிஞ்சித்தும் கிடையாது. தரங்கிணியைப் பார்த்து விரும்பங்கொண்டவன் அவனாயிருந்

தால்......" அப்படிச் சொல்லிக்கொண்டே, அவன் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டான்.

"ராஜா கதை மாதிரியல்லவா சங்கதி சேர்ந்து வருகிறது." காதரீன் தனக்குள் சொல்லிச் சிரித்துக் கொண்டாள், "அவரை உனக்குப் பழக்கமுண்டா? அண்ணு!"

"சுமாரான பழக்கந்தான். சாதாரண குமாஸ்தாவுக்கும், ஏஜண்ட்கிரேடில் உள்ளவருக்கும் நெருக்கம் எப்படியிருக்க முடியும்?" என்று கேட்ட ஜோஸப், "நீ எதற்காகக் கேட்கிருய்? என்பதை என்னுல் ஊகிக்க முடிகிறது...... எதற்கும் நீ பாகீரதியை நாளைக்கு நம் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வா; கலந்து பேசுவோம்" என்ருன்.

காதரீன் சகோதரனுடைய முகத்தைக் கவனித்தவாறே, "அண்ணு, கடைசியாக நான் உன்னை ஒன்று கேட்க விரும்புகிறேன். கோபித்துக்கொள்ளக் கூடாது."

ஜோஸப் நகைத்தவாறு, "என்ன, பீடிகை பெரியதாயிருக்கிறதே? பயப்படாமல் விஷயத்தைச் சொல்லு."

"வேறென்றுமில்லை. தரங்கிணியின் கலியாண விஷயம் குறித்து, உனக்கு இவ்வளவு கனிகரம் ஏற்பட முகாந்திரம்......?"

காதரீன் தயக்கத்தோடு கேட்டு நிறுத்தினுள்.

ஜோஸப், "அதுவா? அதை இப்போது சொல்வதற்கில்லை. தரங்கிணிக்கு முதலில் கலியாணம் முடியட்டும். அப்புறம் எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லுகிறேன்......"

காதரீன் கருவிழிகள் சகோதரன் முகத்திலேயே பதிந்து விட்டன.

"காதரீன்! நீ தரங்கிணி துயரத்தில் ஆழ்ந்திருக்கும் இந்தச் சமயத்தில், அடிக்கடி பார்த்துப் பேசி அவளுக்கு ஆறுதல் அளிக்கவேண்டும். அவள் வராவிட்டாலும் நீ போக வேண்டும். என்ன?"

காதரீன் தலையை ஆட்டினாள்.

இத்தருணம், டேவிட் அவர்கள் இருக்குமிடம் வந்து, "உங்கள் இருவரையும் நான் எவ்வளவு நேரமாகக் கூப்பிட்டுக் கொண்டிருக்கிறேன். யாருக்கும் காதே கேட்க் வில்லையே! எந்தக் கோட்டையைப் பிடிக்கத் திட்டம் போட்டுக்கொண்டிருக்கிறீர்கள்?......" என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

"சீ! அதிகப்பிரசங்கி" என்று அதட்டியபடியே எழுந்த காதரீன், "ஏண்டா கூப்பிடுகிறாய்?" என்றாள்.

"ராணியம்மாளை நான் கூப்பிட முடியுமா? அம்மா தான் இரண்டு பேரையும் அழைத்துவரச் சொன்னார் கள்."

"எதற்காம்?"

ஜோஸப் கேட்டான்.

"எதற்கோ? எனக்கு எப்படித் தெரியும்?"

"சரி; போ. வருகிறோம்" என, அவனும் கட்டிலை விட்டு எழுந்தான்.

டேவிட் முன்னே ஓடினான்; இருவரும் பின்னால் சென்றனர்.

# 11

மாலை மஞ்சள் வெய்யில் நீளமாகப் படர்ந்து, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோட்டைப் பாரீஸ் கார்னர் வரை அழகுபடுத்திக் கொண்டிருந்தது. பூக்கடை போலீஸ் ஸ்டேஷனுக்கு எதிரிலுள்ள நடைபாதையில், மக்கள் கூட்டம் தேர்த்திருவிழாபோல் குறுக்கும்நெடுக்கும் போய் வந்துகொண்டிருந்தது. நடைபாதையோரத்தில் விரிக்கப் பட்டிருந்த 'ஆக்கர்' கடைகளும், சாமான்களைக் கூவி விற்கும் ஆட்களும், பொதுமக்களின் நடமாட்டத்துக்கு இடைஞ்சலாயிருந்தனர். போக்குவரத்தை ஒழுங்குபடுத் துவதற்கென்று இருக்கும் போலீஸ் கான்ஸ்டேபிள்கள் அப் பக்கம் வருகையில் பல்லைக் காட்டியும், மாமூல் தண்ட வரும் ஆளிடம் சில்லரை தந்தும், துணிமணி மற்றுஞ் சாமான்கள் விற்போர் அச்சம் சிறிதுமின்றித் தங்கள் வியாபாரத்தை நடத்திக் கொண்டிருந்தனர்; சப்இன்ஸ் பெக்டர் அல்லது சார்ஜென்ட் யாராயினும் வருகையில் தான், அவர்கள் சாமான்களைச் சுருட்டிக்கொண்டு சந்து களில் பதுங்கலாயினர். கையில் நப்தலீன் பால், ரிப்பன், சேப்டி பின், பேனு, பூட்டு, கைக்குட்டை, பனியன்கள் முதலியவைகளை வைத்துக்கொண்டு விற்கும் பையன்களும் வாலிபர்களும், சாமர்த்தியமாக மறைத்துக் கொண்டு, நடைபாதையின் ஓரத்தில் ஒதுங்கி நின்றனர். இவ்வளவு கெடுபிடியிலும், ஜனநெரிசலிலும், அலுவலகங்களிலிருந்து அவ்வழியாக வரும் அதிகாரிகள், அலுவலர்கள் பலர், அங் குள்ள பிள்ளையாருக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டு, அர்ச்ச கரிடம் திருநீறு வாங்கி நெற்றியில் இட்டுக்கொண்டு செல்லலாயினர். இளைஞர்களும் சிறிது வயதானவர்களுங் கூடச் சபலத்தால், கூட்டத்தில் எதிர்ப்படும் மங்கையரை —முக்கியமாக அலுவலகங்களில் இருந்துவரும் இளம் பெண்களை—இடித்துக்கொண்டு செல்லலாயினர்.

டெலிபோன் எக்ஸ்சேஞ்ச் கட்டிடத்தின் முன் பகுதியில் தன் சைக்கிளை நிறுத்திவிட்டு, அதைப் பிடித்துக் கொண்டு நின்றிருந்த ஜோஸப், இக்காட்சிகளையெல்லாம் கண்டு களித்துக் கொண்டிருந்தான். அவற்றுக்கிடையே அவன் கண்கள் எதிர் நடைபாதையிலிருந்து சாலையைக் கடந்து இப்பக்கம் வரும் ஆட்களை அடிக்கடி கவனிப்பதிலிருந்து, அவன் யாரையோ ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறுன் என்று தெரிந்தது. ஜோஸப் அங்கு நின்ற சில நிமிடநேரத்தில், பாரி முனையிலிருந்தும், தங்க சாலையிலிருந்தும், பழக்கடை பஸ் ஸ்டாண்டிலிருந்தும் வரும் பஸ்களும், பிளஷர் கார்களும், டாக்ஸி கார்களும், ஆட்டோ ரிக்ஷா, சைக்கிள் ரிக்ஷா, சைக்கிள்களும், குதிரை வண்டிகளும், ஆள் இழுத்துத் தள்ளிக்கொண்டு போகும் பார வண்டிகளும், வேகமாகவும் மெதுவாகவும் போய்க்கொண்டிருந்தன. பூக்கடை போலீஸ் ஸ்டேஷனைச் சேர்ந்தாற்போலுள்ள பிளஷர் கார் நிற்கும் வட்டத்தில், பல கார்கள் நிற்பதும். ஆண்களும் பெண்களுமாக இறங்குவதும், அவர்கள் வாங்கவேண்டிய துணிமணிகளையும் பழவகைகளையும் மற்றும் சாமான்களையும் வாங்கிக்கொண்டு திரும்பிவந்து, தத்தம் கார்களில் ஏறிப் போவதுமாயிருந்தனர். அவ்விதம் போவதும் வருவதுமாயிருக்கும் விதவிதமான மனிதர்களும், அவர்கள் தரித்திருந்த விதவிதமான அணிமணிகளும் ஜோஸப் கண்களுக்கு, தற்போதைய நவநாகரிகப் போக்கையும், மனிதர்களின் நடையுடை பாவனைகளையும் தெரிவித்து கொண்டிருந்தன.

"என்ன, இங்கே நின்று கொண்டிருக்கிறுய், ஜோஸப்?"

இக் குரல் கேட்டுத் திடுக்கிட்ட ஜோஸப், திரும்பிப் பார்த்தான். அவன் இதுவரை யார் வருகையை எதிர்

பார்த்து நின்றுகொண்டிருந்தானே, அவரே தன் எதிரே வந்து நின்று, இவ்விதம் தன்னை நோக்கிக் கேட்பதைக் கண்டதும், வியப்பும் மகிழ்ச்சியும் ஒருங்கே கொண்டான். இத் திகைப்பில், அவனால் உடனே பதில் எதுவும் சொல்ல முடியவில்லை.

வந்தவர், நடைபாதையில் அடியெடுத்து வைத்த வாறே, "நான் கேட்ட கேள்வி உன்னைச் சங்கடத்தில் ஆழ்த்திவிட்டதா? நீ யாரோ நண்பரை எதிர்பார்த்து நின்றிருப்பாய். நான் அசட்டுத்தனமாகக் கேள்வி கேட்டு..."

"என்ன சார், அப்படிச் சொல்லுகிறீர்கள்? நான் வேறு யாருக்காகவும்..."

ஜோஸப் சொல்ல வந்ததை முடிப்பதற்குள், "யாருக் காகாவா எதிர்பார்த்துக் காத்திருப்பதில், என்னப்பா தப்பு? வயது ஒன்று இருக்கிறதோ, இல்லையோ? சாயங் காலத்தில் ஜாலியாக..." என்று குறுக்கிட்டுப் பேசியவர், "சரி, சரி; நான் போய் வருகிறேன், ஜோஸப்!"

இவ்விதம் சொல்லிவிட்டு அவர் நடக்கலானார்.

"சார், சார்! நான் உங்களைத்தான் சார் எதிர்பார்த் துக்கொண்டிருந்தேன்" என்று கூறிக்கொண்டே, அவர் பின்னே சைக்கிளைத் தள்ளிக்கொண்டு போன ஜோஸப், "நீங்கள் என்னவோ தவறாக எண்ணிக்கொண்டு ஏதோ சொல்லுகிறீர்கள், சார்! நான் அடிப்பட்டவன் இல்லை, சார்!" வார்த்தைக்கு வார்த்தை சார் போட்டுப் பேசினான்.

அவர் திரும்பி அவனைப் பார்த்து, "நீ யாரோ பெண்ணை அல்லது உன் காதலியை எதிர்பார்த்துக்கொண் டிருக்கிறாய் என்றா சொன்னேன்? இப்படிப் பதறுகிறாயே! அப்படியிருந்தால்கூட, அதெல்லாம் தவறொன்றும் இல்லை, ஜோஸப்! இந்தக் காலத்தில் இதெல்லாம் சர்வ சகஜ

என்றவர், "ஆமாம். என்னை எதிர்பார்த்துத்தான் நின்றிருப்பதாகச் சொன்னுயே! என்ன சமாசாரம்? ஆபீஸ் விஷயமா? யாராயினும் ஏதாயினும்...?"

"ஆபீஸ் விஷயம் ஒன்றுமில்லை, சார்;..." என்ற ஜோஸப், "நீங்க பஸ்ஸுக்குத்தானே போகிறீர்கள்? இப்படிப் போகிறீர்களே!"

"இந்தப் பஸ் ஸ்டாப்பில் இடங் கிடைப்பது கஷ்டம், அப்பா! ரொம்ப நேரம் ஆகும்? பல பஸ்களைப் போக விட்டுக் காத்திருக்கணும்...அதுகூடக் கும்பலில் முண்டியடித்துக்கொண்டு ஏறிஞல்தான் இடங் கிடைக்கும். ஒருவரையொருவர் மோதிக்கொண்டு ஏறுவது எனக்குச் சிறிதும் பிடிப்பதில்லை. அதனுல் நான் பாரீஸ் கார்னருகே போய்விடுவது வழக்கம். டெர்மினசுக்கே போய்விட்டால், ராஜா மாதிரி உட்கார்ந்துகொண்டு போகலாம் இல்லையா?..."

தம் பின்னேவரும் ஜோஸப்பைத் திரும்பி பார்த்துச் சொல்லிக்கொண்டே வந்தவர். கடைசி வார்த்தையைச் சொல்லுகையில் சிரித்தார்.

"ராஜா மாதிரி, என்ன சார்? நீங்கள் ராஜாவேதான்! அதுவும் சாதாரண ராஜாவா? சௌந்தரராஜா! அடடா! உங்கள் பெயரைச் சொல்லி விட்டேனே! மன்னிச்சுக்குங்க, சார்!" என்ற ஜோஸப், "சிரித்த முகத்தோடு உங்களைப் பார்க்கும்போது, எனக்கு எவ்வளவு சந்தோஷமாயிருக்கிறது, தெரியுமா? சார்!" என்முன்.

ஆம்; வந்தவர் சௌந்தரராஜன்; அவன் வேலை பார்க்கும் பாங்கின் ஹெட் அக்கவுண்டண்ட். அவன் நின்று. ஜோஸபை ஒருவிதமாக நோக்கி, நான் சதா சிடுமுஞ்சியாயிருக்கிறேன் என்று தானே சொல்லாமல்

சொல்லுகிறாய், இல்லையா? ஜோஸப்!"...என்று புன்னகை யுடன் வினவினான்.

"ஐயையோ! நான் அப்படிச் சொல்லவில்லை, சார்! உங்களைப்போல் கலகலப்பாக நம்ம பாங்கில் வேறு யார் சார் இருக்கிறார்கள்? நீங்கள் வகித்துவரும் உத்தியோக தோரணையை விட்டுவிட்டுக்கூட, வித்தியாசங்காட்டாமல் எல்லோருடனும் சரளமாகப் பேசி பழகுகிறீர்களே! அதைப் பார்த்து நாங்கள் எல்லாரும் பாராட்டிப் பேசிக் கொள்ளு வோமே! அப்படிப்பட்ட உங்கள் முகத்தில், சில சமயங் களில் சோகங் கப்பிக்கொண்டிருப்பதைப் பார்க்கும் போதுதான், எனக்கு மனசு துடிதுடித்துப் போகும் சார், என்ன கவலையோ? துன்பமோ? என்று. நீங்கள் உற்சாக மில்லாமல் சோர்ந்துபோய் உட்கார்ந்து, சிந்தனையில் ஆழ்ந் திருப்பதை, நான் அடிக்கடி பார்த்திருக்கிறேன், சார்...!"

ஜோஸப் இரக்கத்தோடு பேசிக்கொண்டே போனான்.

சௌந்தரராஜன் திரும்பிப் பார்க்கவில்லை. மௌன மாக நடந்து கொண்டிருந்தான்.

அவன் பேசாமல் போவது, ஜோஸபுக்கு அச்சத்தை யுண்டு பண்ணியது.

"நான் ஏதாயினும் தப்பாகப் பேசி விட்டேனா சார், வரம்பு மீறி உங்கள் விஷயத்தில்..."

"சே! சே! அதெல்லாம் ஒன்றுமில்லை"

இச்சமயத்தில் உயர்நீதிமன்றக் கட்டிடத்தைக் கடக் கும் நெடும் பாதை குறுக்கிட்டது.

டிராபிக் போலீஸ்காரன் கார்கள், மற்றும் வண்டிகள் போகக் கைகாட்டி நின்றதால், இவர்கள் நிற்க வேண்டிய தாயிற்று.

"ஜோஸப், நீ இந்தப் பக்கந்தானே போகணும்? போய் வருகிறாயா?"

சௌந்தரராஜன் ஜோஸப்புக்கு விடை கொடுத்து அனுப்ப முயன்றான்.

"இல்லை, சார்! நான் உங்களைப் பஸ் ஏற்றிவிட்டுப் போகிறேன். நான் பீச் ரோடாகப் போவது வழக்கம். அதுதான் எனக்குச் சௌகரியம்..."

இதற்குள், கான்ஸ்டேபிள் ஆட்கள் போக, 'ரைட்' கொடுத்துவிட்டான். ஆகையால், இருவரும் பாதையைக் கடந்து, உயர்நீதி மன்றத்தையொட்டிய நடைபாதைமீது நடக்கலாயினர்.

"நீ சொல்லுகிறபடி, பீச் ரோட்டில் போகிறதென்றால் கூட, இந்தப் பக்கம் பாலத்தின்மீது போய், தெற்குக் கோட்டை வாசல் பக்கம War Memorial ஸ்தூபி வழியாகச் செல்வதுதான் சௌகரியம். பாரீஸ் கார்னர் திரும்பினால், மின்சார ரயில் போவதற்காக அடிக்கடி சாத்தி வைக்கும் ரயில்கேட் அல்லவா உன்னைத் தடுத்து நிற்கவைக்கும்."

சௌந்தரராஜன் இவ்விதஞ் சொல்வதைக் கேட்டு, ஜோஸப் அசட்டுச் சிரிப்புச் சிரித்தவாறு, தலைகுனிந்து கொண்டான்.

"எனக்காக அவ்வளவு தூரம் வரவேண்டாம் என்று தான் சொல்லுகிறேன். நான் போய்விடுவேன்."

"பரவாயில்லை, சார்!"

சௌந்தரராஜன் அதற்குமேல் ஒன்றுஞ்சொல்லவில்லை.

சில விநாடிகள் இருவரிடையிலும் மௌனம் நிலவலாயிற்று. ஜோஸப் அதை நீடிக்க விரும்பவில்லை.

"எப்போ, சார்? எங்களுக்கெல்லாம் கலியாணச் சாப்பாடு போடப் போகிறீர்கள்?...

இருந்தாற்போலிருந்து ஜோஸப் மெல்லக் கலியாணப் பேச்சை எடுத்தான்.

சௌந்தரராஜன் சடக்கெனத் திரும்பி, அவனை விநோதமாகப் பார்த்தான்.

"என்ன? கலியாணமா? எனக்கா?" என வியப்பொலி எழுப்பியபடி வினவிய சௌந்தரராஜன், "கட்டையோடு கைலாசந்தான்; எனக்கு ஏது அப்பா கலியாணம்?" என விரக்தியோடு சொல்லி முடித்தான்.

"என்ன சார்! அப்படிச் சொல்லுகிறீர்கள்? ஏன் இப்படி விரக்தி மனோபாவத்தோடு பேசுகிறீர்கள்? ஒரு வேளை காதலில் ஏமாற்றமா? அல்லது தோல்வியா? நீங்கள் விரும்பிய பெண்ணைக் கலியாணஞ் செய்துவைக்க உங்கள் பெற்றோர் மறுத்துவிட்டார்களா?"

சௌந்தரராஜன் உடனே ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"சார்! நான் உங்கள் சொந்த விஷயத்தில் தலையிடுவதாக எண்ணக்கூடாது. என்னை உங்கள் உடன்பிறந்த சகோதரன்போல் நினைத்துக் கொள்ளுங்கள். என்னையறியாமல், உங்களிடம் என்னமோ எனக்குப் பற்றும் பாசமும் உண்டாயிருக்கு. நீங்கள் நன்றாக வாழ்வதை—எப்போதும் சந்தோஷமாக இருப்பதைப் பார்க்க வேண்டும் என்று ஆசையாயிருக்கு..."

"என்மீது இவ்வளவு அன்பு காட்டும் உனக்கு என் நன்றி ஜோஸப்!" என்ற சௌந்தரராஜன், "உனக்குக் கலியாணமாய் விட்டதா?"

"இல்லை சார். இதற்குள் எனக்கு என்ன சார் கலியாணம்? நான் உயரமாயிருக்கிறேன் என்று பார்க்கிறீர்களா? வயது இருபத்து மூன்றுதான் ஆகிறது."

"இருபத்து மூன்று வயதில் கலியாணஞ் செய்துகொண்டிருக்கக் கூடாதா, என்ன? 16,17-வதிலேயே சிலருக்குக்

கலியாணமாகி விடுகிறதே? என்னைவிட மூன்று வயதுதான் உனக்குக் குறைவு..................''

''இவ்வளவு வயதாகியும் நீங்கள் ஏன் சார், இன்னும் கலியாணஞ் செய்துகொள்ளாமலிருக்கிறீர்கள்?''

''இப்போதுதானே உத்தியோகங் கிடைத்திருக்கிறது?'

''உத்தியோக வருவாயை எதிர்பார்த்து நடக்குங் குடும்பமில்லையாமே! உங்கள் குடும்பம் வசதியான குடும்பமென்று சொல்லிக் கொள்ளுகிறார்களே!''

''என்னைப்பற்றி நீ ரொம்பத் தெரிந்து வைத்திருக்கிறாயே?''

ஜோஸப் சிரித்துக் கொண்டான்.

''உங்கள் கலியாண விஷயத்தில் ஏதாயினும் சிக்கல் ஏற்பட்டிருக்கிறதா? அதனால்தான் கலியாணம் நடப்பது தடைப்பட்டிருக்கிறதா? நான் தெரிந்துகொள்ளலாமா சார்?''

சௌந்தரராஜன் சிந்தனையோடு, ''என்பால் இவ்வளவு பாசங்காட்டும் நீ, என்முன் நிற்கும் கலியாணப் பிரச்னையைப் பற்றித் தெரிந்துகொள்ளத்தான் வேண்டும். நீ சிறிதுமுன் கேட்டாயல்லவா, எனக்கு காதலில் ஏமாற்ற மேற்பட்டிருக்கிறதா? அல்லது தோல்வியேற்பட்டிருக்கிறதா? என்று. இது ஒருவகையில் ஏமாற்றமென்றுதான் சொல்லவேண்டும்; தோல்வியல்ல. நான் பார்த்து விரும்பிய பெண் எனக்குக் கிடைத்துவிடுவாள் என்று எதிர்பார்த்தேன். ஆனால், தந்தையாரின் பணஆசையால் எதிர்பார்த்தது எட்டாமல் போய்விட்டது. ஆகவே, இது ஏமாற்றந்தானே!...''

''ஓ! அப்படியா? உங்கள் கலியாணத்துக்குத் தடையாகப் பணந்தான் முன் நிற்கிறதா?''

சௌந்தரராஜன், தான் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் படித்துப் பட்டம் பெற்றதும், சிதம்பரத்தி லிருந்து சென்னை நகருக்கு பெற்றோருடன் வந்து, தரகர் காட்டிய தரங்கிணியைப் பார்த்ததும், அவளுடைய அடக்க வொடுக்கமும் அழகும் இனிய குரலும் இசை ஞானமும் தன்னை வெகுவாகக் கவர்ந்துவிட்டதும், தகப்பனார் பெண் வீட்டாரின் ஏழ்மை நிலைமையயறிந்து, அவளை மருமக ளாக்கிக்கொள்ள மறுத்து விட்டதும் ஆகியவற்றை, ஜோஸப்புக்கு விவரமாகச் சொன்னான்.

"ஜோஸப்! நான் பார்த்த பெண் இருக்கிறாளே, அவளைப்போல் லட்சத்தில்—ஏன் கோடியில் ஒருத்தியைத் தான் பார்க்கமுடியும். சாதாரணமாக வருணிக்கமுடியாத பேரழகி. சாமுத்திரிகா லக்ஷணம் முழுதும் பொருந்திய பெண்ணரசி. அவள் தன் செவ்விதழைத் திறந்து பாடினால் குயில் கொஞ்சுவதுபோல் இருக்கும். குணத்திலோ தங்கக் கம்பி என்று சொல்லுகிறார்கள், யாரைக் கேட்டாலும். ஏழை வாத்தியார் ஒருவருக்கு மகளாகப் பிறந்துவிட்டது தான் குற்றமே தவிர, அவளைப்பற்றி வேறு எந்தக் குறை யையும் சொல்ல முடியாது என்கிறார்கள். நானும் எத்த னையோ பெண்களைப் பார்த்திருக்கிறேன். எங்கள் குடும்பத் திலும் சரி, உறவினர்களிலும் சரி, வெளியிடங்களிலும் சரி, அந்தப் பெண்ணைப்போல் நான் இதுவரை பார்த்ததில்லை. இனிமேலும் பார்ப்பேனா என்பது சந்தேகமே! எங்கள் வீட்டில் உள்ள பெண்கள், என்னுடன் பிறந்த சகோதரி கள் எல்லோருமே சொர்ணவிக்கிரகம் போல்தான் இருப் பார்கள். ஆனாலும், அவளைப் பார்த்த பின்னர்..." வாய் நிரம்ப வருணித்துக்கொண்டே போனான்.

தரங்கிணியைப் பற்றிச் சௌந்தரராஜன் வருணித்துப் பேசப்பேச, ஜோஸப்புக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை.

'தான் திட்டமிட்டிருக்கிறபடி சௌந்தரராஜனைத் தன் விருப்பம்போல் நடக்கச் செய்துவிடலாம்; தான் எடுத்துக் கொண்டுள்ள முயற்சி நிச்சயம் வெற்றி பெறும்' என்று அவன் தீர்மானித்தான்.

சௌந்தரராஜன் மேலும் தொடர்ந்து பேசலானான். "ஜோஸப் வெட்கத்தைவிட்டு உன்னிடஞ் சொல்கிறேன். அந்த மயிலாப்பூர் பெண்ணைப் பார்க்கிறவரை, பொதுவாகவே, பெண்களைக் குறித்து எனக்கு எவ்வித அபிப்ராயமுங் கிடையாது. கல்லூரி மாணவர்கள்—அதிலும் அண்ணாமலை யூனிவர்ஸிடி போன்ற கல்லூரிகளில் படித்தவர்கள் பலர் Romance செய்வதில் பேர்பெற்றவர்கள் என்று சொல்ல நீ கேள்விப்பட்டிருப்பாய். அங்குள்ள பல மாணவ மாணவிகள் தங்களை 'ரோமியோ ஜூலியட்டு'களாக நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். என்னுடன் படித்து வந்த மாணவர்கள்—பழகும் நண்பர்கள் காதல் கீதல் என்று பேசினால், எனக்குக் பிடிக்காது. ஆண் பெண் காதல் என்பதையும், நான் மிக மோசமான சங்கதி, மகா கேவலமான விஷயம் என்று கருதிக் கொண்டிருந்தேன். பெண்களைக் கண்டாலே கண்ணை மூடிக்கொண்டு காததூரம் ஓடிவிடுவேன். எங்கள் வீட்டுப் பெண்ணைத் தவிர, வேறெந்த மங்கையரையும் நான் ஏறெடுத்துப் பார்த்தது கிடையாது. இவ்விதமான என் விசித்திர இயல்பைத் தெரிந்த, என் சக மாணவர்களும் நண்பர்களும் என்னைக் கலைகோட்டு மாமுனிவர் என்று பெயரிட்டுக் கேலியாக அழைப்பார்கள். 'சுகப் பிரம்மம்' என்றும் சிலர் குறும்பாகக் கூப்பிடுவார்கள். இப்படி இருந்தவனை, அந்த மயிலாப்பூர் மேனகை எப்படியோ மயக்கிவிட்டாள். அவளிடம் என்ன வசிய சக்தி இருக்கிறதோ தெரியவில்லை! அவளைப் பார்த்ததிலிருந்து நான் பித்துப்பிடித்தவனாய் விட்டேன். சீதள சந்திர

கிரணங்களால் செய்யப்பட்டது போன்ற அவருடைய ஒளி மிகுந்த அழகிய முகம், என் நெஞ்சை—நினைவை விட்டு அகலவில்லை. தேவாமிர்த்தத்தால் ஆக்கப்பட்டது போன்ற அவளுடைய தீங்குரலிலிருந்து எழுந்த இன்னிசையொலி, இன்னமும் என் செவிகளில் இனிமையாக ஒலித்துக் கொண்டேயிருக்கிறது...''

''பலே! பலே! ஒரு பெரிய கவிஞனுல்கூட இப்படி ஒரு பெண்ணைச் சிறப்பித்துப் பேசமுடியாது, சார்! அந்த அழகு சுந்தரியால் நீங்கள் ஒரு முதல்தரமான கவிஞராகவே ஆகிவிட்டீர்கள் என நினைக்கிறேன்.''

ஜோஸப் சபாஷ் போட்டுப் பேசினுன்.

சௌந்தரராஜன், தரங்கிணியின் இனிய்நினைவிலேயே மிதந்தவாறு, தன் மன உணர்ச்சியைக் கொட்டிக் கொண்டிருந்ததால், ஜோஸப்பின் பாராட்டு மொழிகளைச் செவிகளில் வாங்கவில்லை.

''இப்பேர்ப்பட்ட அற்புதமான பெண்மணியைத்தான் வேண்டாம் என்கின்றனர் என் பெற்றேர்கள், எதிர்பார்க்கும் பணம், சீர் சிறப்புகள் அவள் வாயிலாகக் கிடைக்காது என்ற எண்ணத்தால். ரதியினும் மேலான அவளைப் புறக்கணித்துவிட்டு, வேறு எங்கெங்கோ போய்க் குரங்குகளையும் கோட்டான்களையும் பார்த்து வருகின்றனர். ஆனுல், நான் அவர்களுக்குப் படித்துப் படித்துச் சொல்லிவிட்டேன். எனக்குக் கலியாணஞ் செய்வதென்றுல், மயிலாப்பூர் பெண்ணைக் கட்டுங்கள். பணத்தைப் பற்றியோ மற்ற விஷயங்களைப் பற்றியோ கவனிக்காதீர்கள். எனக்கு ஒன்றுமே வேண்டாம். அவளை எனக்குக் கலியாணஞ் செய்துவைக்க உங்களுக்குச் சம்மதமில்லையென்றுல், நான் இப்படியே பிரம்மச்சாரியாகவே இருந்துவிடுகிறேன்

நீங்கள் வேறு எங்கெங்கோ பெண்களைப் பார்த்து வீணாக அலைந்து கொண்டிருக்க வேண்டாம் என்று, நான் கண்டிப்பாகச் சொல்லிவிட்டேன்."

"நீங்கள் அவ்விதஞ் சொல்லிவிட்டது எங்கள் காதுகளிலும் விழுந்திருக்கிறது...சார்!"

"அப்படியா? உங்களுக்கு எப்படித் தெரிந்தது? எங்கள் என்றால் யார் யார்? பன்மையில் சொல்லுகிறாயே! பாங்கிலுள்ள மற்றவர்களுக்கும் இது தெரியுமா?"

"பாங்கிலுள்ளவர்கள் யாருக்கும் இது தெரியாது, சார்! எங்கள் குடும்பத்தார்க்கும் உங்கள் கலியாணவிஷயம் தெரியும் என்றேன்."

"அப்படியா? உங்கள் குடும்பத்துக்கு எப்படித் தெரியமென்று கேட்கிறேன்?"

"உங்கள் உறவுப்பெண் பாகீரதி வாயிலாக........."

"ஓ!"

"இன்னொரு விஷயமும் உங்களுக்குச் சொல்லணும், சார்! நீங்கள் எப்படி 'எனக்குக் கலியாணஞ் செய்வதென்றால், மயிலாப்பூர் பெண்ணைக் கட்டுங்கள், இல்லையானால் கலியாணமே வேண்டாம்' என்றிருக்கிறீர்களோ, அதே போல, அப் பெண்ணின் தகப்பனாரும், 'என் பெண்ணைக் கலியாணஞ் செய்து கொடுப்பதென்றால், அந்தச் சிதம்பரத்துப் பிள்ளைக்குக் கொடுப்பேனேயொழிய, வேறு யாருக்கும் கட்டித் தரமாட்டேன்' என்று பிடிவாதமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார். வலிய வருகிற வரன்களையெல்லாம், 'யாரும் என் பெண்ணைப் பார்க்க வரவேண்டாம்' என்று விரட்டியடித்துக் கொண்டிருக்கிறார். அவ்வளவு தூரம் உங்களை அவருக்கு மிகவும் பிடித்துப் போய் விட்டிருக்கிறது, சார்!..."

"இதெல்லாம் உனக்கு எப்படித் தெரியும், ஜோஸப்? இதையெல்லாம்கூட, அந்தப் பாகீரதிப்பெண் வாயிலாகத் தான் கேள்விப்பட்டாயா?"

செளந்தரராஜன், ஆவலுணர்ச்சி ததும்பக் கேட்டான்.

"இல்லை. சார்! பெண் வீட்டு விஷயம் எங்களுக்கு நேரிடையாகவே தெரியும்."

"எப்படி?"

"அவர்கள் வீடும் எங்கள் இல்லமும் அடுத்தடுத்துத் தான் இருக்கின்றன..."

"ஓ! நீ இருந்துவருவது மயிலாப்பூர் அல்லவா! நான் அதை அடியோடு மறந்துவிட்டேன்."

"அதுமட்டுமல்ல, சார்! தரங்கிணியும் என் தங்கையும் பாகீரதியும் ஒரே பள்ளியில் படித்து வந்த சக மாணவி கள்..."

"அப்படிச் சொல்லு. அதனால்தான், அந்தப் பெண் கலியாண விஷயம் பற்றியெல்லாம், உனக்கு அவ்வளவு நன்றாகத் தெரிந்திருக்கிறது. அத்துடன், என் விஷயத்தை யும் தெரிந்து வைத்திருக்கிறாய். இவ்வளவையும் தெரிந்து கொண்டு, ஒன்றுமே தெரியாதவன்போல், என் கலியாணத் தைப்பற்றி விசாரிக்கத் தொடங்கினாயே! நீ பலே ஆள், அப்பா!"

செளந்தரராஜன், ஜோஸப் முதுகில் அன்பாகத் தட்டிக் கொடுத்தான்.

இவர்கள், இப்படிப் பேசிக்கொண்டே மாம்பலம் பஸ் ஸ்டாண்டண்டை வந்துவிட்டனர். ஆனால்செளந்தரராஜன் அங்குள்ள 'க்யூ' வரிசையில் போய் நிற்காமல், சிறிது தள்ளி ஆள் நடமாட்டம் இல்லாத இடமாகப் பார்த்துப் போய் நின்றான். ஜோஸபும் சைக்கிளுடன் அவன் பின்னால் போனான்.

சூரியன் மேற்றிசையில் மெல்ல மெல்ல மறைந்து கொண்டிருந்தான். மைசூர் பாங்க் கட்டிடக் கடியாரம், ஐந்தே முக்கால் ஆயிற்று என மணி காட்டிக் கொண் டிருந்தது.

சௌந்தரராஜன் ஏதோ சிந்தனை செய்துகொண்டி ருந்ததை, அவன் நெற்றியில் ஏற்பட்ட வரிக்கோடுகள் தெரிவித்தன. இதற்குள், தன் சைக்கிளை மதில் ஓரத்தில் சாத்திவிட்டு வந்த ஜோஸப், அவன் மௌனத்தைக் கலைக்க முயன்றான்.

"தரங்கிணியின் தந்தையிருக்கிறாரே, சார்!அவர் தங்க மான மனிதர். தாயாரும் மகா புண்ணியவதி. அதனால் தான், அவர்கள் வயிற்றில் பிறந்த பிள்ளைகள் மணிமணி யாக இருக்கின்றனர்" என்று பாராட்டிப் பேசத் தொடங்கிய அவன், "பெண்ணின் பெயர் தரங்கிணி என்பதை நீங்கள் அறிந்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். ஆனால்; அது உங்களுக்கு நினைவிருக்கிறதா?" எனக் கேட் டான்.

"தரங்கிணி! எவ்வளவு இனிமையான பெயர்! அது ஒரு அபூர்வ ராகத்தின் பெயர் அப்பா! தரங்கிணி என்னும் போதே இன்னிசையின் அலையோசை கேட்குமே! அப் பேர்ப்பட்ட பெயரை நான் மறக்கமுடியுமா? அதுவும், என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டவள் திருப் பெயரையா? நன்றாகக் கேட்டாய்! போ."

சௌந்தரராஜன் நெஞ்சநெகிழ்ச்சியுடன் சொன்னான்.

"சார்! பரமசிவவாத்தியாரின் பரிதவிப்பையும்பரிதாப நிலையையும் நீங்கள் நேரில் பார்த்தால், உள்ளம் உருகிப் போவீர்கள் சார்! அவரைப் பார்க்கவே பாவமாயிருக்கு!"

"உம்" கொட்டிய அவன் கண்களில் நீர் பனித்தது.

"அவரே அப்படியென்றால், அவருடைய சம்சாரத்தின் நிலையும், பெண்ணின் நிலையும் எப்படியிருக்கும் என்று நீங்கள் ஊகித்துக் கொள்ளுங்கள்; சார்!"

சௌந்தரராஜன் வாய் திறக்கவில்லை. ஆனாலும் அவன் மனநிலை எப்படியிருக்கும் என்பதை ஜோஸப் ஊகித்து உணர்ந்துகொண்டான். ஆகவே, அவன் மேலும் சௌந்தர ராஜனின் மனத்தைக் கரைக்க இதுதான் சமயமென்று கருதித் தொடர்ந்து பேசத்தொடங்கினான்.

"ரொம்ப நல்லவர்களான அவர்களுக்கு, இப்படியொரு கடுமையான சோதனையை ஆண்டவன் தரக்கூடாது, சார்! அதிலும், தரங்கிணியின் நிலையை நினைத்தால் கல்லும் கரையும். எங்கள் குடும்பத்தில் எல்லோரும் இரத்தக் கண்ணீர் சிந்துகிறோம். அவளுடைய நற்குணத்தையும் நற்செயல்களையும் அறிந்தவர்கள், அவளுக்கு ஏற்பட்டுள்ள அவல நிலையைக் கேட்டு வருந்தாமலிருக்க் மாட்டார் கள்..."

சௌந்தரராஜன், ஜோஸப் பக்கம் மெல்லத் திரும்பி, "அதிருக்கட்டும்; ஜோஸப்! பெண்ணின் தந்தைக்கு என்னை மிகவும் பிடித்துப் போய்விட்டது என்று சொன்னாயே? அவருக்குப் பிடித்துவிட்டால் போதுமா? கூட இருந்து வாழ்க்கை நடத்தப்போகிற பெண்ணுக்குப் பிடித்திருக்க வேண்டுமல்லவா! அதல்லவா முக்கியம்? தரங்கிணி என்னைப் பற்றி என்ன எண்ணியிருக்கிறாள் தெரியுமா?..."

ஜோஸப் எச்சரிக்கையாகப் பேசலானான். "அவளுக்கும் உங்களைப் பிடித்து விட்டதாகத்தான் தெரிகிறது, சார்! பெற்ற பெண்ணின் உள்ளக்கருத்தைத் தெரிந்துகொண்ட தனால்தான், எப்படியும் உங்களையே மாப்பிள்ளையாக்கிக் கொள்ளவேண்டும் என்று வாத்தியார் அவ்வளவு பிடிவாத மாயிருக்கிறார்; உங்கள் பெற்றோரின் சம்மதத்தைப் பெறு

வதற்கான முயற்சிகளையெல்லாம் செய்து கொண்டிருக்கிறார் என்று எண்ணுகிறேன். பொதுவாகப் பெண்கள், அதிலும் ஒழுங்குக் கட்டுப்பாடுகளிலேயே வளர்ந்த உங்கள் இந்துப் பெண்கள், மாப்பிள்ளையைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில், தங்கள் உள்ளக் கருத்தை நாணம் பயிர்ப்பின்றி அவ்வளவு வெளிப்படையாக யாரிடமுஞ் சொல்ல மாட்டார்கள் என்பது உங்களுக்குத் தெரியாதா? தன்னுடைய உயிர்த்தோழிகளான என் தங்கையிடமும் பாகீரதியிடமும்கூட உங்களைப்பற்றி அவளுக்குள்ள அபிப்பிராயத்தைச் சொல்ல ரொம்பவும் வெட்கப்பட்டாளாம்........"

சௌந்தரராஜன் ஆவலையடக்காமல், "அப்படியா? அப்படியானால் தரங்கிணிக்கும் என் மீது......"என மேலே சொல்லக் கூச்சப்பட்டுக்கொண்டு, வார்த்தையை முடிக்காமல் நிறுத்தினான்.

"என் தங்கை மூலமாகச் சொல்லிப் பாகீரதியை உங்கள் வீட்டுக்கு அனுப்புகிறேன். நீங்களே நேரில் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்களேன். அவள் உங்களுக்கு நெருங்கிய உறவுப் பெண்தானே!..."

பிணியைப் போக்க மருந்தை ஊசி வழியாக ஏற்றுவது போல், ஜோஸப், சௌந்தரராஜன் தரங்கிணிமீது கொண்டுள்ள காதலை மிகுதிப்படுத்த, நயமொழிகளைச் சந்தர்ப்பம் பார்த்து உபயோகப்படுத்தினான்.

'ஊம்' என்று உம் கொட்டியவாறு, சௌந்தரராஜன் மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தான்.

ஜோஸப் அவன் முகத்தைக் கூர்ந்து கவனித்தவாறு, "நீங்கள் கோபித்துக் கொள்ளவில்லையென்றால், நான் ஒன்று உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். பிள்ளைகளாயிருக்கும் நாம், நம்மைப் பெற்ற தாய் தந்தையருக்கு மதிப்புக்கொடுக்க வேண்டியதுதான். அவர்கள் சொல்லும்

விஷயங்களைக் கேட்க வேண்டியதுதான். அவர்கள் இடுங் கட்டளைகளை நிறைவேற்ற வேண்டியதுதான். ஆனால், எதற்கும் ஓர் எல்லையுண்டு; வரையறையுண்டு. அவர்கள் சொல்வது நல்லதா கெட்டதா என்று சீர்தூக்கிப் பார்க்க வேண்டும் அல்லவா! அவர்கள் சொல்லுகிறார்கள் என்பதற் காகக் கண்ணை மூடிக்கொண்டு எல்லாவற்றையும் செய்து விட முடியுமா? அம்மா, அப்பா சொல்லுகிறார்கள் என்ப தற்காக, அநியாயமான விஷயத்தையெல்லாம் கேட்டு நடக்கமுடியுமா? கேட்டுத்தான் நடக்கலாமா...? அதிலும் திருமணம் என்பது அவரவர்களின் சொந்தப் பிரச்சினை. நல்லதோ கெட்டதோ அது அவர்களுடைய வாழ்க்கையை நேரடியாகப் பாதிக்கக்கூடியது; அப்பேர்ப்பட்ட விஷயத் தில், சம்பந்தப்பட்டவர்களே சாதகபாதகங்களை ஆராய்ந்து பார்த்துத் தங்களுக்குள் ஒரு முடிவுக்கு வருவதுதான் முறை; நியாயமுங்கூட! தாங்களே தீர யோசித்து முடிவுக்கு வரவேண்டிய இவ் விஷயத்தில், மற்றவர்களைத் தலையிட அனுமதிப்பது—பெற்றவர்களாயிருந்தாலும் சரி—ஒருவர் அனுமதிப்பது சரியல்ல என்றுதான் நான் கருதுகிறேன். நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ?...'' என்று கூறி நிறுத் தினான்.

அவன் சொல்வதைக் கவனமாகக் கேட்டுக் கொண் டிருந்த சௌந்தரராஜன், மேலும் சிந்தனை செய்யலானான்.

''நீங்கள் என்ன பச்சிளங் குழந்தையா? நன்மை இது, தீமை இது; நல்லது இது, கெட்டது இது என்று பகுத் தறிந்து கொள்ளமுடியாத பாலப் பருவத்திலா இருக்கிறீர் கள், பெற்றோர்கள் உங்களைக் கட்டுப்படுத்துவதற்கு? இப்படி நட என்று கட்டளையிடுவதற்கு?...'' என்று கேள்வி கள் கேட்டுக்கொண்டே வந்த ஜோஸப், ''உங்கள் விருப்பம் இது என்று தெரிந்தும், நீங்கள் அந்தப் பெண்ணை விரும்புகிறீர்கள் என்று கேட்டறிந்தும், அதற்கு மாறாக

நடப்பதென்முல், அவர்கள் பேச்சுக்கு நீங்கள் கட்டுப் படலாமா? அவர்கள் கட்டளேக்குக் கீழ்ப்படியலாமா? உங்கள் மன உணர்ச்சிக்கு, கருத்துக்கு மதிப்பு அளிக்காத வர்கள், உங்களேப் பெற்று வளர்த்த தாய் தந்தையாரா யிருந்தாலும், அவர்களே ஒரு பக்கம் ஒதுக்கிவைத்துவிட்டு, நீங்கள் உங்கள் விருப்பம் போல் காரியஞ் செய்ய வேண்டி யதுதான். உங்கள் விருப்பப்படி நடந்து, உங்கள் ஆசை யைப் பூர்த்தி செய்துகொள்ள வேணடியதுதான். உங்கள் ஆசாபாசங்களுக்குச் சிறிதும் மதிப்பளிக்காதவர்கள், உங்களுடைய வாழ்க்கை நலத்தில் மட்டும் கருத்துடைய வர்கள் என்று எப்படிச் சொல்ல முடியும்? யோசித்துப் பாருங்கள்...'' என்று சொன்ஞன்.

செளந்தரராஜன் சிந்தனேயிலிருந்து மீளாமலே ''அப்படியாஞல், என்ன செய்யலாம், ஜோஸப்? சொல் லேன்'' என்று கேட்டான்.

தான் போட்ட புள்ளி தப்பவில்லே என்று தெரிந்து கொண்ட ஜோஸப், சிறிதும் தயங்காமல், ''பெற்ருேர் உற்ருேரை எதிர்பாராமல், நீங்கள் விரும்பிய பெண்ணேத் துணிந்து கலியாணஞ் செய்து கொள்ள வேண்டியது தான்'' உன்று யோசனே கூறிஞன்.

''அதற்கு எப்படி வழி, ஜோஸப்?'' ஒன்றுமறியாத குழந்தைபோல் கேட்டான் செளந்தரராஜன்.

ஜோஸப், உடனே அவன் காதிலே மெல்ல என்னவோ ஓதிஞன்.

செளந்தரராஜன், முகமலர்ச்சியுற்றவஞய், ஜோவைத் தன் இரு கரங்களாலும் சேர்த்துப் பிடித்துக்கொண்டு, ''ஜோஸப், உன்னே என்னவோ என்று எண்ணிக்கொண் டிருந்தேன். நீ வயதில் என்னேவிடச் சிறியவஞயிருந்தாலும், உலகானுபவத்தில் மிகப் பெரியவன், அப்பா! நீ சொன்ன

படி நான் நடக்கத் தயார். அதற்கான ஏற்பாடுகளையெல்லாம் நீதான் செய்யவேண்டும். எனக்கு ஒன்றுந் தெரியாது...'' என்று கேட்டுக் கொண்டான்.

''அப்படியே, சார்.''

சௌந்தரராஜன், ஜோஸபின் கரங்களைப் பிடித்துக் குலுக்கியவாறு, ''என் எதிர்கால வாழ்க்கைக்கே வழி காட்டிய உனக்கு, எப்படிக் கைம்மாறு செய்வேன்? ஜோஸப்!'' என்று தன் நன்றியுணர்ச்சியை வெளிப்படுத்தினான்.

''நீங்கள் தரங்கிணியின் கரத்தைப் பற்றித் தைரியமாக வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்கிவிட்டால், அதுவே எனக்கு நன்றி செய்ததுபோல நான் எடுத்துக் கொள்ளுவேன் சார்!''

''நான், இனியும் பெற்றோருக்கோ மற்றவர்களுக்கோ பயந்து, நாம் எடுத்திருக்கும் முடிவிலிருந்து விலகிப் பின் வாங்குவேன் என்று நினைத்தாயா? நான் அவ்வளவு கோழையல்ல; நீ சந்தேகங்கொள்ளாதே!''

''ரொம்ப நன்றி, சார்! நீங்கள் போய்ப் பஸ்ஸில் ஏறுங்கள். உங்களை அதிக நேரம் நிறுத்தி வைத்துவிட்டேன்.''

''நான் அல்லவா அப்பா, இதைச் சொல்ல வேண்டும்?'' என்ற சௌந்தரராஜன், ''நான் போய் வருகிறேன். அதற்குமுன் ஒரு வார்த்தை. நாம் இப்போது பேசியுள்ள விஷயமெல்லாம் நம்மோடேயே இருக்கட்டும். பாங்கிலுள்ளவர்களுக்குத் தெரியவேண்டாம். எல்லாம் நடந்தான பிறகு, தானாகவே தெரிந்துபோகட்டும். என்ன!''

''அதையெல்லாம் எனக்குச் சொல்ல வேண்டாம், சார்! நீங்கள் ஜாக்கிரதையாக இருந்தால் போதும்.'' என்ற ஜோஸப், எதிரே பார்த்து, ''பஸ் வந்திருக்கு.

சார்! கூட்டங்கூட அதிகமில்லே. போய் ஏறிக் கொள்ளுங் கள்'' என்றான்.

''நான் ஏறிக்கொள்ளுகிறேன். ஜோஸப்! நீ போய் வருகிறாயா?'' எனக் கூறிச் சௌந்தரராஜன் அவனுக்கு விடை கொடுத்தான்.

ஜோஜப் பஸ் ஏறும் சௌந்தரராஜனைத் திரும்பிப் பார்த்துக்கொண்டே, சைக்கிளண்டை போனான்.

# 13

''காதரீன், நாம் இப்போது எங்கே போகிறோம்? ஸர்ச்சுக்கா? ரிஜிஸ்டிரார் ஆபீஸுக்கா? அல்லது...''

காரணீசுவரர் கோவில் பக்கம் காதரீனுடன் நடந்து கொண்டிருந்த தரங்கிணி, தோழியைப் பார்த்துக் கேட் டாள். ''இந்தப் பக்கமாக நீ என்னை அழைத்துப் போகிறாயே...........''

காற்றில் மிதந்துவந்த நாதசுர வாத்திய இன்னிசை யையும் தோற்கடிக்கும்படியாக, தரங்கிணியின் குரலொலி மிக இனிமையாக ஒலித்தது.

தன் முகத்தில் முகிழ்ந்த புன்முறுவலை மறைக்க முயன்றவாறு, காதரின், ''நீ என்னோடு பேசாமல் வர வேண்டும். உன்னைக்கொண்டு சேர்க்கவேண்டிய இடத்தில் ஒப்படைப்பது என் பொறுப்பு. தெரிகிறதா! தரங்கிணி'' என்று சொன்னாள்.

செஞ்ஞாயிறு நீல வானில் கரகரவென விரைந்து வந்துகொண்டிருந்தது. சூரியநாராயணனை உதயகீதம்பாடி வரவேற்பதுபோல், எங்கு பார்த்தாலும் மங்கல வாத்தியங் கள் ஒலித்துக்கொண்டிருந்தன! வழிநெடுகிலும் பல வீடு

களில் திருமண விழாக்கள் நடப்பதை அப் பெண்மணிகள் பார்த்துக்கொண்டே போயினர். சில வீடுகளில், வீதியை அடைத்துக் கொண்டு பெரிய பந்தல்கள் போடப்பட்டிருந்தன. மூவண்ணச் சீலைகளும், பலவண்ண மின்விளக்குகளும், மகர தோரணங்களும், மாவிலை, தென்னங்குருத்தோலையாலான கொடிகளும், குலையோடு கூடிய வாழை மரங்களும் கட்டி அழகு செய்யப்பட்டிருந்தன. பாண்டு வாத்தியங்களும், நாதசுர வாத்தியங்களும் பிரமாதமாக முழங்கிக் கொண்டிருந்தன. சிலவீடுகளில் மாவிலைகளும், வாழை மரங்களும் மட்டும் கட்டி அலங்கரிக்கப்பட்டிருந்தன. சாதாரண நாதசுர மேளம் ஒலித்துக் கொண்டிருந்தது. அவரவர் தகுதிக்கும் செல்வ நிலைக்கும் தகுந்தவாறு, இத் திருமணங்கள் நடந்து கொண்டிருந்தன என்பதை, இவ்வேறுபாடுகள் விளக்கப் படுத்திக் கொண்டிருந்தன.

ஏழிசையை வாகனமாகக் கொண்டு இசைக்கும் இனிய பாடலைப்போல, அன்புத் தோழி காதரீனுடன் தரங்கிணி சென்று கொண்டிருந்தாள், அவள் முகம் மகிழ்ச்சியோ துக்கமோ இன்றிப் பளிங்குபோல் காணப்பட்டது. அவள் உள்ளத்தில் உவகையோ அவலமோ சற்றும் இல்லையென்பதையே, அவளுடைய அப்போதைய முகபாவம் காட்டியது. அச்சமயம், அவளுடைய உணர்ச்சி அந்த அளவுக்கு மரத்துப் போயிருந்தது. இந்நிலையிலும், வரும் வழியில் கலியாண வீடுகளில் வாசிக்கப்பட்டுக் கொண்டிருந்த நாதசுர வாத்தியங்களின் அருமையான வாசிப்புக்கு, அவள் தலை அசைந்து கொண்டிருந்தது. இனிய இசையிலேயே எப்போதும் தோய்ந்து கொண்டிருந்த அவள் உள்ளமும், செவிகளும், நாதசுரவித்வான்களின் ராக ஆலாபனைகளிலும், சுர விந்நியாசங்களிலும், சாஹித்ய வாசிப்புகளிலும் ஈடுபடலாயின.

அன்று முக்கிய முகூர்த்த நாள் ஆனதால், எங்கு பார்த்தாலும், திருமணங்கள் நடந்து கொண்டிருந்தன.

சுப்பராய முதலி தெரு திரும்புகிற சமயத்தில், காதரீனின் கயற்கண்கள் தரங்கிணியின் முகத்தைக் கடைக்கணிக்கலாயின.

"தரங்கிணி! இன்று உன்னை நிலைக் கண்ணாடியில் பார்த்தாயா?"

"எங்கள் வீட்டில் நிலைக்கண்ணாடி, ஏதடி?"

"ஓ! தெரியாமல் சொல்லிவிட்டேன்" என்ற காதரீன், "சிறு கண்ணாடியிலாயினும் உன் முகத்தைப் பார்த்திருப்பாய்; பின்னல் போட்டுப் பூச்சூடுவதற்கும் பவுடர் பூசிப் பொட்டு வைப்பதற்குமாயினும் பார்த்திருப்பாய். இல்லையா?"

தரங்கிணி பேசாமல் தலைகுனிந்து கொண்டாள்.

"உன்னைப் பார்த்தால், இப்போது எப்படி இருக்கிறாய், தெரியுமா? தேவலோகத்திலிருந்து இறங்கிவந்த கந்தருவப் பெண்போல்...!"

"போடி! உனக்கு எப்போதும் கேலிப் பேச்சுத்தான், சமய சந்தர்ப்பங்கூடத் தெரியாமல்..."

"இப்போது என்னடி, சமய சந்தர்ப்பங் கெட்டுவிட்டது? நீ கலியாணஞ் செய்துகொள்ளப்போகிற இந்தச் சமயத்தில்தானே என்னைப்போன்ற சிநேகிதைகள் உன்னை இம்மாதிரிப் பரிகாசஞ் செய்வதற்கு வாய்ப்பு கிடைத்திருக்கு. அருமையான இத் தருணத்தைத் தவறவிட்டுவிட மனம் வருமா?"

தரங்கிணி வாய் திறக்கவில்லை.

"நான் ஆண் பிள்ளையாகப் பிறக்காமல் போய்விட்டேனே என்று வருத்தமாய் இருக்குதடி, உன்னைப் பார்க்கும் போதெல்லாம்..."

"ஏன்? உன் சின்ன அண்ணனுக்குப் போட்டியாக வருவதற்கா?..."

காதரீன் 'கொல்' என்று சிரித்துவிட்டாள். அதன் பின்தான், தாங்கள் வீதியில் செல்கிறோம் என்ற நினைவு அவளுக்கு வந்தது. தரங்கிணிக்கு எப்படித்தான் இச்சமயம் இவ்விதம் தமாஷமாகப் பேச முடிந்ததோ!

சில விநாடிகள் அவர்களிடையே மௌனம் நிலவியது.

தரங்கிணியும் காதரீனும் ஜோடி மணிப்புறுக்கள் போல் சென்றனர். ஆயினும், அவர்களிடையே காணப் பட்ட நடைபேதம், மட அன்னமும் குள்ள வாத்தும் சேர்ந்து சென்றால் எப்படியிருக்குமோ, அதை நினைவு படுத் தியது.

இருந்தாற்போலிருந்து தரங்கிணி காதரீனைப் பார்த் துச் சொன்னாள்; "காதரீன், நினைத்தாலே வருத்தமா யிருக்கு. எனக்கு அறிவுதெரிந்து நான் இப்படிக் கபடமாக நடந்து கொண்டதில்லை. என்னைப் பெற்ற தாயிடங்கூடப் பொய் பேச வேண்டியதாய்விட்டது. (சிறிது நிறுத்தி) நேற்று நீ பாகீரதி மூலம் தகவல் சொல்லியனுப்பினாய் அல்லவா, இன்று காலை என்னைத் தயாராக இருக்குமாறு. அதிலிருந்து எனக்கு ஒரே பரபரப்புத்தான்! இரவெல்லாம் துளிக்கூட உறக்கம் இல்லை. நான்வைகறையிலேயேஎழுந்து விட்டேன். வீட்டு வேலைகளை அவசரம் அவசரமாகச் செய்து முடித்தேன். குளிரைக்கூடப் பார்க்காமல், கிணற்று நீரில் குளித்தேன். 'என்னடி இது! பொறுக்கமுடியாத கொடிய பனியில் எழுந்து ஸ்நானஞ் செய்கிறாய்? எங்கே...?" அம்மா கேட்டார்கள். அவர்கள் முகத்தில் புன்சிரிப்பும் இருந்தது. வியப்புங்கூட காணப்பட்டது. நான் வாய்கூசாமல், பொய் சொன்னேன். "சாரதாவுக்கு இன்று பிறந்த நாளாம். அதற்காக அவள் அப்பா கற்பகாம்பாளுக்கு மஞ்சனமாட்

டிப் பூப்பாவாடை சாத்துகிருராம். அவசியம் அதற்கு வரவேண்டுமென்று அவள் கேட்டுக்கொண்டாள். பாகீரதி, காதரீன் எல்லாருமே போகப் போகிருர்களாம். நான் மட்டும் போகாமலிருந்தால் நன்ருயிருக்குமா, அம்மா? காதரீனும் பாகீரதியும் காலையிலேயே வந்து கூப்பிட்டுக் கொண்டு போவதாகச் சொன்ஞர்கள்; அதனுல்தான்...'' என்று நிறுத்தினேன். ''சரி; சரி'' என்று சொன்ஞர்களே தவிர, ''போய் வா! அல்லது போகவேண்டாம்'' என்று வேறென்றுஞ் சொல்லவில்லை. 'தாய்க்கு தெரியாத சூல் இல்லை' என்பார்கள்; என் விதி வசம் பெற்றெடுத்த அன்னைக்குக்கூடத் தெரியாமல் இப்படிப் பொய் பேசி ஏமாற்றி, நான் கலியாணஞ் செய்துகொள்ளப் போகி றேன்...''

''நல்லது நடக்கப்போகும் இச் சமயத்தில், சும்மா இப்படிப் புலம்பி முகாரி ராகம் பாடிக்கொண்டுவராதேடி, தரங்கிணி! உன் தலையெழுத்து நன்ருகத்தான் இருக்கு, ஒன்றுங் கோணலில்லை...'' என்று காதரீன் அன்பாகக் கடிந்து கொண்டு சொன்ஞள். ''வா, வா! வீடு வந்துவிட் டது. நமக்காக எல்லாரும் காத்துக் கொண்டிருப்பார் கள்...''

தரங்கிணி எதிரே நிமிர்ந்து பார்த்தாள். அப்போது தான், அவளுக்குத் தாங்கள் ''கனகராயர் இல்லத்''துக்கு வந்துவிட்டது தெரிந்தது. உடனே அவள் உடம்பு ஒரு குலுங்கி குலுங்கி நின்றது. ''இங்கே இப்போது எதற்கடி, காதரீன்? முதலில் நேரே கோவிலுக்குப் போய்க் கலியாணஞ் செய்துகொண்டு, பின்ஞல்...''

அவள் தயங்கி தயங்கிச் சொன்ஞள்.

''கலியாணஞ் செய்து கொள்ளுவதற்கு ரொம்ப அவ சரமாயிருக்கிறதோ! நீ பலே ஆள்தான்.''

"காதரீன்! என்னைக் கேலி செய்வதை இப்போதும் விடமாட்டேன் என்கிறாயே!" என்று கெஞ்சலாகச் சொன்ன தரங்கிணி, "உங்க அம்மா அப்பாவை எப்படிப் பார்க்கிறதென்று அச்சமாயிருக்கிறதடி! அவர்கள் என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருப்பார்களோ?"

"உன்னைப் போலப் பைத்தியக்காரி உலகத்தில் வேறு யாரும் இருக்கமாட்டார்கள். ஆமாம், உன்னைப் பற்றி அவர்கள் என்ன எண்ணுவது? அவர்களுக்கு உன்னைப்பற்றி ரொம்ப நன்றாகத் தெரியும்..."

முன்னே தன் வீட்டையடைந்த காதரீன், தரங்கிணியின் கையைப் பற்றிக்கொண்டு, வாசற்படி ஏறினாள். தரங்கிணி தயங்கி நின்றாள்.

காதரீன், முன்னைவிட அவள் மென்கரத்தைப் பற்றி "வாடி என்றால் வருவாயா? அதைவிட்டுக் கலியாணப் பெண்ணைப்போல் நாணிக் கோணி நின்று...ஓ! நீ இப்போது கலியாணஞ் செய்துகொள்ளப் போகும் மணப்பெண் தானே! அதை மறந்துவிட்டேன், பார்!" என்று மென் சிரிப்பை உதிர்த்துக்கொண்டே கூறி, "மாப்பிள்ளை எதிர் கொண்டு வந்து அழைத்துக் கொண்டு போனால்தான் வருவாய் போலிருக்கு. அப்படியானால் இரு; உள்ளே போய் அவரை அழைத்து வருகிறேன்" என்றாள்.

தரங்கிணி, தன் கைகளை அசைத்து ஏதோ சொல்ல வாய் எடுத்தாள்,

"காதரீன்! என்ன, வீதியிலேயே நின்று பேசிக்கொண்டிருக்கிறாய், உள்ளே அழைத்துக் கொண்டு வராமல்..."

தற்செயலாக வெளியே வந்த செல்லம்மாள், இவர்களைப் பார்த்துவிட்டுக் கூப்பிட்டாள்.

"வா அம்மா! தரங்கிணி! வா!"

காதரீன் பின்னால் திரும்பிக் குனிந்து, தரங்கிணியின் முகத்தருகே தன் முகத்தைக் கொண்டு போய்

புன்னகை செய்த செல்லம்மாள், அவள் வலக்கரத்தை அன்பாகப் பற்றிக் கொண்டு நிமிர்ந்து நடக்கலானாள். தரங்கிணி, நாணத்தோடு அவள் பின் நடந்தாள்.

கூடத்தின் நடுவில் நாற்காலியும் மேஜையும் போடப் பட்டிருந்தன. மேஜைமீது பல வண்ணச் சித்திர வேலைப் பாடு அமைந்த விரிப்பு ஒன்று விரிக்கப்பட்டிருந்தது. அதன் நடுவே, சிறு :பித்தளைப் பூந்தொட்டியொன்று வைக்கப்பட்டிருந்தது. இருபக்கத்தின் சுவர் ஓரங்களிலும் நாற்காலிகள் பல போடப்பட்டிருந்தது. தரையில் ஜமக்காளம் விரிக்கப்பட்டிருந்தது. சந்தோஷநாதம் பிள்ளையும், அவர் வயதை ஒத்த முதிய மனிதர்கள் இருவரும், முப்பது நாற்பது வயதானவர்கள் இரண்டொருவரும் அங்குக் காணப்பட்டனர். தங்கராஜ் அவர்களுக்குப் பருகப் பானங் கொடுத்துக்கொண்டிருந் தான். டேவிட் குறுக்கும் நெடுக்கும் ஓடிக்கொண்டிருந் தான். செல்லம்மாள் காதரீனுக்கு ஏதோ குறிப்புக் காட்டி விட்டுப் பின்கட்டுக்குப் போனாள்.

தன் மகளையும் தரங்கிணியையும் கண்டதும், சந்தோஷ நாதம் பிள்ளை, "ஏன், காதரீன் இவ்வளவு நேரம்? தரங்கிணியை உள்ளே அழைத்துக் கொண்டு போய், சீக்கிரம் சிங்காரித்துக் கொண்டு வா! அவர் வந்துவிடு வார் குறித்த நேரத்தில்..." என்று சொன்னார்.

இங்குள்ள சூழ்நிலையைப் பார்த்ததும், தரங்கிணிக்கு ஒன்றுமே புரியவில்லை. காதரீன் அவளைத் தன் அறைக்கு அழைத்துப் போனாள். அவளுக்காகக் காத்திருந்தாற் போல், காதரீனுடன் தரங்ணியைக் கண்டதும், பாட்டும் சிரிப்பும் குபீரென ஒலிக்கலாயின. தரங்கிணி திடுக்கிட்டு நிமிர்ந்து நோக்கினாள். தன் பள்ளித்தோழிகள் பலர் அங்கிருப்பதைக் கண்டு, அவள் வெட்கிப் போனாள்.

"எங்களுக்குத் தெரிவிக்காமல் இரகசியமாகக் கலியாணஞ் செய்து கொள்ளலாம் என்று இருந்தாய் இல்லையா, தரங்கிணி?...... நீ சொல்லாவிட்டால் எங்களுக்குத் தெரியாதென்று நினைத்தாயா? உன் அழைப்பில்லாமலே, நாங்கள் கலியாணச் சாப்பாடு சாப்பிட வந்து விட்டோம்."

சாரதாவும் ஐரினும் போட்டி போட்டுக் கொண்டு சொல்லிக் கேலி செய்யலாயினர். தரங்கிணி நாணத்தால் குன்றிப்போய் ஒதுங்கி நின்றாள். "இவர்களுக்கு எப்படி நம் கலியாண விஷயம் தெரிந்தது?" என்று அவள் மனம் நினைத்தது.

"சும்மா, இருங்கடி!" என்று காதரீன் தோழிகளை அதட்டினாள். "எல்லாம், கலியாணம் சம்பிரமமாக முடிந்த பின், உங்கள் கேலிப் பேச்சையும் லாலிப் பாட்டையும் வைத்துக்கொள்ளுங்கள். பாகீரதி! இங்கே வா! தரங்கிணிக்கு அலங்காரஞ் செய்துவிடுவது, உன் வேலை. என்ன!...... தரங்கிணி நாங்கள் சொல்லுகிறபடி நீ வேறு உடைகளை மாற்றிக் கொள்ளணும்... உம்."

இப்படிச் சொல்லிக்கொண்டே, காதரீன் பீரோவைத் திறந்து, புத்தாடைகளையும் நகைகளையும் எடுக்கலானாள். இவற்றைக் கண்டு தரங்கிணி பிரமித்துப் போனாள். இவையெல்லாம் கனவில் நடப்பதுபோல் அவளுக்குத் தோன்றியது. விலையுயர்ந்த காஞ்சிபுரம் பட்டுப்புடவை, சரிகையிழைத்த சோளி, சூரிய கிரணம் பட்டு டால் அடிக்கும் நெக்லெஸ், பளபளக்கும் தோடுகள், வளையல்கள்! இவை ஒவ்வொன்றும் தந்தத்தால் கடைந்தெடுக்கப்பட்டது. போன்ற அவளுடைய அழகிய உடம்பையும் உறுப்புக்களையும் அலங்கரித்துக் கொண்டு, வரும்போது, அவளுடைய மலைப்பு இன்னும் அதிகமாகியது.

இதனிடையே, சாரதா, தரங்கிணி பின்னித் தொங்க விட்டிருந்த பின்னலை அவிழ்த்துவிட்டுப் பின் அவளுடைய நீண்ட கூந்தலை வாரி அஜந்தாக் கொண்டையை அழகாகப் போட்டாள். அதன் மீது, தோகையை விரித்தாடும் மயில் போல, இரங்கூன் வைரக்கற்களால் இழைக்கப்பட்ட ஜடைப்பில்லையைப் பொருத்தினாள். காதரீன் மேஜைமீது வாழையிலையில் வைக்கப்பட்டிருந்த பூச்சரங்களிலிருந்து குண்டு மல்லிகையையும் ஜாதிக் கதம்பத்தையும் அரி அரியாக எடுத்து, அவள் கொண்டையில் அழகுபடச் செருகினாள். மற்றப் பெண்களையும் எடுத்துச் சூடிக்கொள்ளச் செய்தாள்.

"அக்கா!"

டேவிட் கூப்பிட்ட குரல் கேட்டு, காதரீன் திரும்பினாள். வெளியிலிருந்தவாறே அவன் அவளை நோக்கி ஏதோ சைகை செய்தான். உடனே அவள், அவன் அருகே போனாள். அவன் அவள் செவியில் இரகசியமாக ஏதோ சொன்னான். உடனே அவள் முகம் மகிழ்ச்சியால் மலர்ச்சியுற்றது. "அவர் வந்து விட்டாரா?......" உணர்ச்சியை அடக்கமாட்டாமல் கேட்ட காதரீன், தரங்கிணி இருக்கும் பக்கம் சடக்கெனத் திரும்பிப் பார்த்து விட்டு, உதட்டைக் கடித்துக்கொண்டாள். பின் அவள் 'ஜோஸப்......" என மெல்ல மேலும் ஏதோ கேட்கத் தொடங்கியவள் நிறுத்திக் கொண்டு, "சரி, நீ போ" என்று கூறி அனுப்பிவிட்டு உள்ளே வந்தாள்.

"உம். ஆயிற்று,சீக்கிரம் முடியுங்கடி!"

காதரீன் சொல்லிக்கொண்டே, நிலைக் கண்ணாடியில் தெரியும் தரங்கிணியின் அழகிய தோற்றத்தைப் பார்த்தவாறே, அவளை அணுகினாள்.

அவரவர்களுக்குத் தோன்றியபடியெல்லாம் தரங்கிணிக்கு ஒப்பனை செய்தனர். அவள் பதுமைபோல் அவர்களிடையே இருந்தாளே யொழிய, எவ்வித உணர்ச்சியையும் வெளிப்படுத்தவில்லை. கடைசியாக, பாகீரதி, தரங்கிணியின் செவ்வரி படர்ந்த கண்களுக்கு மை தீட்டினாள். சாரதா குட்டிகூரா நறுமணப்பொடியை அவள் முகத்தில் அளவாகப் பூசினாள்.

அலங்காரம் எல்லாம் முடிந்தபிறகு, சரியாக இருக்கிறதா என்று பார்க்க, காதரீன், தரங்கிணியின் தோள் அருகே வந்து முகத்தை வைத்து, நிலைக் கண்ணாடியில் உற்றுப் பார்க்கலானாள். அவளுக்கு என்ன தோன்றியதோ? தன் முகத்தைத் தரங்கிணியின் முகத்தோடு சேர்த்து வைத்துச் சிறிது நேரம் பார்த்துவிட்டு, அவளை, அன்பு மேலீட்டால் சேர்த்துக் கட்டிக்கொண்டு முத்தமிட்டாள்.

ஏற்கனவே, தரங்கிணியின் முகத்தில் அரும்பும் வியர்வையை மணப்பொடி கலையாமல் இருக்க அடிக்கடி கைக்குட்டையால் மெல்ல ஒத்தி எடுத்துக்கொண்டிருந்த ஐரின், "கடித்துத் தின்றுவிடாதேடி காதரீன்! அவளுடைய கணவனுக்கும் கொஞ்சம் இருக்கட்டும். அவள் கன்னத்தை ஆப்பிள் என்று நினைத்துக் கொண்டாயா, என்ன?......" என்று குறும்பாகச் சொல்லி, உதடுபட்டுக் கலைந்த இடங்களில் மீண்டும் மணப்பொடியை ஒத்தினாள்.

சாரதா, காதரீனைப் பார்த்துக் கண்சிமிட்டியவாறு, காதரீனுக்கு ரொம்பநாளாக இந்த ஆசை இருந்தது. அதை இன்று தீர்த்துக்கொண்டாள். நாம் லேடி சிவஸ்வாமி ஐயர் உயர்நிலைப்பள்ளியில் படித்துக் கொண்டிருக்கையில், பாரதி பாட்டுப் போட்டியில் பாடித் தரங்கிணி தங்கப்பதக்கம் பரிசு பெற்றதைப் பாராட்டிப் பேசிக் கொண்டு வந்தபோது, காதரீன் சொன்னது உங்களுக்கு

நினைவில்லையா? ஏன் ஐரின், நீ இதையெல்லாம் நன்றாக ஞாபகம் வைத்திருப்பாயே?"

சாரதா கிண்டல் செய்வதைக் கவனியாமல், பாகீரதி, தன் இரு கைகளாலும் தரங்கிணியின் முகத்தை வழித்து, தன் கபோலங்களில் வைத்துச் சொடுக்கிக் கண்ணேறு கழித்தாள்.

"தரங்கிணிக்கு நம் கண்களே பட்டுவிடும், அடி! முக்கியமாக, என் கண் மயிரைப் பிடுங்கிப் போடு, பாகீரதி!" என்று, காதரீன் உணர்ச்சியுடன் சொன்னாள்.

கூடத்துச் சுவரில் மாட்டப்பட்டிருந்த கடிகாரம் பத்துமணி அடித்தது.

இச்சமயம், செல்லம்மாள் அங்கு வந்து, "உங்களில் யாருக்குங் கேட்கவில்லையா, நாங்கள் கூப்பிடுவது காதரீன்? ரிஜிஸ்டிரார் வந்துவிட்டார். தரங்கிணியை அழைத்துக் கொண்டு வா சீக்கிரம்!" என்று சொன்னவள், திடீரென நினைத்துக்கொண்டு, சாரதா, நீ தரங்கிணிக்குத் தோழிப் பெண்ணாய் இருக்கணும்! என்ன?" என்றாள்.

சாரதா, தலையை யாட்டிவிட்டு, தரங்கிணியின் பின்னே போய் நின்று, அவள் தோள்களைப் பற்றிக்கொண்டாள்.

"உம், எல்லோரும் வாருங்கள்!"

செல்லம்மாள் சொல்லிவிட்டு முன்னே போனாள்.

காதரீனும் பாகீதியும் இருபக்கமும் வர, சாரதா, தரங்கிணியைக் கூடத்துக்கு நடத்தி அழைத்துக்கொண்டு சென்றாள். மற்றைத் தோழிகள் முன்னும் பின்னுமாகப் போகலாயினர்.

ரிஜிஸ்டிரார், கூடத்து நடுவே போடப்பட்டிருந்த நாற்காலியில் அமர்ந்து, தன்முன் மேஜைமீது விரிக்கப்பட்டிருந்த ரிஜிஸ்டர் புத்தகத்தில், ஏதோ எழுதிக்கொண்

டிருந்தார்.அவர் பக்கத்தில் சந்தோஷம்பிள்ளை உட்கார்ந்து ரிஜிஸ்டிரார் கேட்கும் தகவல்களை விவரமாகச் சொல்லிக் கொண்டிருந்தார். மற்றவர்கள், அவர்களைப் பார்த்துக் கொண்டு, மெல்லத் தங்களுக்குள் பேசிக்கொண்டு இருந் தனர்.

தோழிகள் புடைசூழ, தரங்கிணி, தலை குனிந்தவாறு வெள்ளை அன்னம்போல் மென்னடையிட்டு வந்து கொண் டிருந்தாள். செல்லம்மாள்,அவளுக்கு வழிகாட்டுவதுபோல, முன்னால் மெல்லச் சென்றாள்.

மணப்பெண் வருகிறாள் என்றதுமே, கூடத்திலிருந்த எல்லோரும் திரும்பிப் பார்த்தனர். நாணமே அழகு ஓவிய மாக ஓர் உருக்கொண்டாற்போல மெல்லடியிட்டு வரும் தரங்கிணியைக் கண்ட அவர்களுடைய கண்கள், இமைக்க நெடுநேமாயின.அவர்களுடைய கண்களில் ஒளிரும் கருமணி களில் தரங்கிணியின் அழகிய உருவம் பிரதிபலித்துச் சென்றது.

ரிஜிஸ்டிராரோ, தரங்கிணியின் கண்கொள்ளாப் பேரெழிலைக் கண்டு பிரமித்துப்போய், கையில் பேனாவைப் பிடித்தபடியே, நாற்காலியில் சாய்ந்துவிட்டார்.

செல்லம்மாள், தரங்கிணியை ரிஜிஸ்டிரார் முன்னிலை யில் நிற்கவைக்குமாறு குறிப்புக் காட்டினாள். அவ்விதமே சாரதா தரங்கிணியைப் பிடித்து நிற்க வைத்தாள். கவிழ்ந்த தலையைச் சிறிது நிமிர்த்த சாரதா, தன் கையைத் தரங்கிணியின் மோவாயண்டை கொண்டு போனாள். தரங்கிணி, குனிந்த தலையை நிமிரவேயில்லை.

ரிஜிஸ்டிரார் முன்னதாகக் கேட்டறிய விரும்பிய விவரங்களையெல்லாம் கூறி முடித்ததும், சந்தோஷநாதம் பிள்ளை, தங்கராஜை நோக்கிக் கண்ணால் ஜாடை காட்டி னார். அவன் உடனே எதிர் அறையண்டை போய்,

'ஜோஸப்' என மெல்ல அழைத்தான். அடுத்த கணம், ஜோஸப், சௌந்தரராஜனை அழைத்துக்கொண்டு அறையிலிருந்து வெளியே வந்தான். சௌந்தரராஜன், கதர்ப் பட்டு வேட்டி, சட்டைகளை உடுத்திருந்தான். சரிகைக் கரைபோட்ட மேல் வேட்டியை உருமாலையாகப் போட்டிருந்தான். இடது மணிக்கட்டில் தங்கச்செயினில் மாட்டப்பட்டிருந்த விலையுயர்ந்த கடிகாரத்தைக் கட்டியிருந்தான். கைவிரலில் நீலக்கல் மோதிரம் ஒன்று விளங்கிக் கொண்டிருந்தது. அவனுடைய அகன்ற நெற்றியில் திருநீறும் சந்தனப் பொட்டும் திகழ்ந்து கொண்டிருந்தன. எடுப்பான மூக்கின்மீது தங்கவிளிம்பு போட்ட மூக்குக்கண்ணாடி மிளிர்ந்து கொண்டிருந்தது. நடுவகிடு எடுத்து வாரிவிடப்பட்ட அமெரிக்கன் கிராப், அவனுடைய அழகிய முகத்துக்கு மேலும் அழகு செய்துகொண்டிருந்தது.

ஜோஸப், சௌந்தரராஜனை, தரங்கிணிக்குப் பக்கத்தில் கொண்டுவந்து நிறுத்திவிட்டு, அவன் பின்னால் நின்றான். அவன் பார்வை, தரங்கிணிக்கும் சௌந்தரராஜனுக்கும் உள்ள ஜோடிப் பொருத்தத்தைப் பார்ப்பதுபோல் இருந்தது. தரங்கிணியின் தலைக்குமேலே சௌந்தரராஜனின் திரண்ட தோள் உயர்ந்திருந்தது.

"சரியான ஜோடிப் பொருத்தம்!"

"ஒருவர் இன்னொருவருக்கென்றே பிறந்ததுபோல் அல்லவா கன பொருத்தமாயிருக்கிறது!"

"மணமக்கள் என்று இருந்தால் இப்படித்தான் இருக்க வேண்டும்."

"ரதி, ரதி என்று சொல்லுகிறார்களே, அவள் இந்தக் கலியாணப் பெண்ணின் கால் சுண்டுவிரல் அழகுக்குக்கூடச் சமமாக மாட்டாள்! அடடா! என்ன அழகு! என்ன

லாவண்யம்! பார்க்கப் பதினாயிரம் கண்களல்லவா வேண்டும் போலிருக்கு!"

"பிள்ளைக்குத்தான் என்ன; மன்மதன் கெட்டான் போங்கள்! ராஜாதிராஜன் போலல்லவா இருக்கிறான்! ஆயுசெல்லாம் இவனைப் பார்த்துக் கொண்டிருந்தால்கூட ஆசை தீராது, ஐயா?"

அங்கிருந்தோர், மணமக்களுடைய சௌந்தரியத்தில் மயங்கிப்போய்த் தங்களுடைய உணர்ச்சியை வார்த்தைகளாக வெளிப்படுத்திக் கொண்டிருந்தனர்.

"சொர்ண விக்கிரகம் போலுள்ள இந்தப் பெண்ணைத் தான், இந்தப் பிள்ளையின் பெற்றோர், பணமில்லாத காரணத்தால் வேண்டாம் என்று சொல்லிவிட்டார்களாம்!"

விஷயமறிந்த ஒருவர், மெல்ல மற்றொருவர் காதில் கிசுகிசுத்தார்.

"அதனால்தான், அவர்களின் பணப் பேராசையில் மண்ணைக் கொட்டுவதுபோல, பெண் வீட்டாருக்குப் பைசா செலவு வைக்காமல், பிள்ளையே பெண்ணுக்கு விலை உயர்ந்த ஆடை ஆபாரணங்களையெல்லாம் வாங்கிக் கொடுத்துக் கலியாணஞ் செய்து கொள்ளுகிறாப் போலிருக்கு."

"உஷ். மெதுவாகப் பேசுங்கள். வேறு யார் காதிலாயினும் விழப்போகிறது."

மற்றொருவர் எச்சரித்தார்.

"சும்மா இருங்கள், ஐயா! ரிஜிஸ்டிரார் மணமக்களைப் பார்த்து ஏதோ கேட்கிறார். என்னவென்று கேட்போம்."

இன்னொருவர், மற்றவர்களைப் பார்த்துக் கையமர்த்தினார்.

அந்த மனிதர் குறிப்பிட்டதுபோல், ரிஜிஸ்டிரார், மணமக்களைக் கேள்விகள் கேட்டுக் கொண்டே, தம் ரிஜிஸ்டரில் ஒவ்வொன்றாகப் பதிவு செய்யலானார்.

"உங்கள் இருவரின் பெயர்களையும், பெற்றோர் பெயர்களையும், உத்தியோகத்தையும் முன்பே கேட்டு எழுதிக் கொண்டிருக்கிறேன். இப்போது நான் கேட்கும் முக்கிய கேள்விகளுக்கு மட்டும் நீங்கள் பதில் சொன்னால் போதும்."

சௌந்தரராஜன், ரிஜிஸ்டிராரின் கேள்வியை எதிர் பார்த்துக் கொண்டிருந்தான்.

"நீங்கள் இந்தப் பெண்மணியை விரும்பித்தானே திருமணஞ் செய்து கொள்ளுகிறீர்கள்?"

"ஆமாம், முழு விருப்பத்துடன்தான் தரங்கிணியை நான் திருமணஞ்செய்து கொள்ள முன்வந்திருக்கிறேன்..."

"ஜோஸப் குரலா இது?" தரங்கிணியின் நெஞ்சம் அவளைக் கேட்டது. தலைநிமிர்ந்து தன்பக்கத்தில் இருப்பவரைத் திரும்பிப் பார்க்க எண்ணினாள். ஆனால், அவளுள் எழுந்த நாணம், அவளை அவ்விதம் பார்க்க வெட்டாமல் தடுத்துவிட்டது.

ரிஜிஸ்டிரார். தரங்கிணியைப் பார்த்துக் கேட்டார்: "ஏனம்மா, நீங்கள் இவரைக் கலியாணஞ் செய்து கொள்ள முழுச் சம்மதந்தானே?"

தரங்கிணி தலையை நிமிராமலே, "சம்மதந்தான்" என்றாள்.

ரிஜிஸ்டிரார், "ஐயா, இன்று நான் திருமணச் சட்டப் படி செய்துகொள்ளும் பதிவுத் திருமண வாயிலாக மனைவியாக ஏற்றுக்கொண்டிருக்கும் தரங்கிணியை, இன்பத்திலும் துன்பத்திலும், எந்நிலையிலும் இணைபிரிய மாட்டேன்; தாம்பத்திய வாழ்வுக்கு மாறாக நடந்து

துரோகஞ் செய்யமாட்டேன் என்று, இதன் மூலம் உறுதி கூறுகிறேன் என்று சொல்லுங்கள்."

சௌந்தரராஜன், ரிஜிஸ்டிரார் சொன்னபடியே திரும்பிச் சொல்லி, உறுதிமொழி அளித்தான்.

கணீர் கணீரென்று ஒவ்வொரு வார்த்தையையும் அழுத்தந் திருத்தமாகச் சொன்ன சௌந்தரராஜனின் மொழிகளைக் கேட்டதும், தரங்கிணி அதிர்ந்து போனாள். "இது ஜோஸப், குரல் இல்லையே! அவன் வார்த்தைகளை இவ்வளவு தெளிவாக உச்சரிக்கமாட்டானே! இது வேறு ஒருவருடைய குரலாகவல்லவா இருக்கிறது? இக் குரலை வேறெங்கோ அல்லவா கேட்டது போலிருக்கு! எங்கு கேட்டிருப்போம்? இது யாருடைய குரல்?" என்றெல்லாம் அவள் மனம் சிந்தனை செய்து, ஆராயத் தொடங்கியது.

அவளையறியாமலே, அவள் சிரம் நிமிர்ந்து, தன்பக்கத்தில் நிற்பவரைப் பார்த்தது. உடனே அவள் கண்கள் அவ்வுருவத்தின்மீது நிலைகுத்தி நின்றுவிட்டது. 'இது சிதம்பரத்திலிருந்து என்னைப் பார்க்கவந்த எம். காம். பிள்ளையல்லவா? இவர் எப்படி இங்கு வந்தார்? எவ்விதம் என்னைக் கலியாணஞ் செய்துகொள்வதற்கு உடன்பட்டார்? தாய் தகப்பனுருக்குத் தெரியாமலா இங்கு வந்து ரிஜிஸ்டர் மணம் செய்து கொள்கிறார்? காதரீன் குடும்பத்தாருக்கு இவரை எப்படித் தெரியும்? இவர்களை இவர் இவ்விஷயத்தில் எப்படித் தொடர்பு கொண்டார்? எல்லாம் ஒரே அதிசயமாக இருக்கிறதே! ஒரு வேளை ஜோஸப்.........?"

ஜோஸப் இருக்கவேண்டிய இடத்தில்தான், சிறிதும் எதிர்பாராத வகையில் சௌந்தரராஜன் இருப்பதைக் கண்டு, தரங்கிணிக்குச் சொல்லொணுத் திகைப்பு உண்டாய்விட்டது. ஒன்றும் புரியாமல், அவள், தன் உள்ளத்தினுள் குழம்பிக் கொண்டிருந்தாள்.

இதற்குள் ரிஜிஸ்டிரார், தரங்கிணியை நோக்கி' சௌந்தரராஜன் சொன்னதுபோல் சொல்லச் சொன்னார். தரங்கிணியின் வாயிலிருந்து உடனே வார்த்தைகள் வரவில்லை. அவளுக்குப் பின்னால் நின்றிருந்த சாரதா, அவளை ரிஜிஸ்டிரார் செல்லுகிறபடி சொல்லுமாறு தூண்டினாள். தரங்கிணி பிரமை பிடித்தவள்போல் நின்றிருந்தாளேயொழிய வாய் திறக்கவில்லை. இது கண்டு பாகீரதி பதறினாள். காதரீன் மனங்கலங்கினாள். ஜோஸப் துடிதுடித்தான். சௌந்தரராஜன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

சிறிது தூரத்திலிருந்து செல்லம்மாள் சமீபத்தில் வந்து, "தரங்கிணி, ஐயா சொல்லச் சொல்கிறபடி சொல்லம்மா!" என்று பரிவோடு கூறினாள்.

"ஆமாம் குழந்தை! சொல்லு; நேரமாகிறது, பார்!"

சந்தோஷநாதம் பிள்ளையும் சொன்னார்.

சாரதா, மறுபடியும் தரங்கிணியின் தோள்களைப் பற்றி உலுக்கினாள்.

இவ்வளவும் நடந்தபிறகே, தரங்கிணி உறக்கத்திலிருந்து திடுக்கிட்டு விழித்தவள்போல், ரிஜஸ்டிரார் சொல்லி வந்தபடி, பின்தொடர்ந்து மெல்லச் சொல்லலானாள்.

அடுத்து ரிஜிஸ்டரார், தாம் ஏற்கனவே தயாரித்து வைத்திருந்த ரிஜிஸ்டர் பாரத்தை மணமக்கள்முன் தள்ளி, "சரி, இந்தப் பாரத்தில் நீங்கள் இருவரும் கையெழுத்துப் போடுங்கள்" என்று கூறினார். அவர் சொல்லியவிதமே முதலில் சௌந்தரராஜன் அப் பாரத்தில் கையெழுத்துப் போட்டான். அடுத்து, சாரதா தரங்கிணியைப் போடச் செய்தாள்.

பின், சந்தோஷநாதம் பிள்ளை தரங்கிணி சார்பில் சாட்சிக் கையெழுத்துப் போட்டார். தம் உறவினர் ஒருவரையும் போடச் செய்தார். அவர் முன்னமே சொல்லி வைத்தபடி, சௌந்தரராஜனுக்காக அங்கிருந்த இரு பெரியவர்கள் சாட்சிகளாகக் கையெழுத்து இட்டனர்.

இதனிடையே ஜோஸப், விரைந்துபோய், காதரீன் அறையிலிருந்து இரு பெரிய ரோஜா மாலைகளை ஒரு வெள்ளித்தட்டில் கொண்டுவந்து, தன் தகப்பனாரிடம் கொடுத்தான். அவர், அம் மலர்மாலைகளை ரிஜிஸ்டிராரிடம் தந்து, மணமக்களிடம் கொடுக்குமாறு கேட்டுக் கொண்டார். அவர் அவ்விதமே சௌந்தரராஜன் கையிலும் தரங்கிணியின் கையிலும் தனித்தனியாக ரோஜா மாலைகளைக் கொடுத்து, ஒருவருக்கொருவர் போட்டுக்கொள்ளச் சொன்னார். சௌந்தரராஜன், அம்மாலையை வாங்கி இடது முழங்கையில் தாங்கிக்கொண்டு, தன் சட்டைப் பையில் வைத்திருந்த பொன்னாலான தாலிச்சரடு ஒன்றை எடுத்து, முதலில் அதை மகிழ்ச்சி முகத்தில் பொங்கத் தரங்கிணியின் கழுத்தில் அணிந்து, பின் ரோஜாமாலையை எடுத்துப் போட்டான். உடனே சாரதா தரங்கிணியைத் தூண்டி, சௌந்தரராஜன் கழுத்தில் ரோஜாமாலையைப் போடச் செய்தாள். உடனே அங்குள்ளவர்கள், தங்கள் கையில் கொடுக்கப்பட்டிருந்த உதிரிமலர்களை எடுத்து, மணமக்கள் மீது சொரிந்துவிட்டுக் கைகொட்டி மகிழ்ச்சி தெரிவித்து, வாழ்த்தொலி எழுப்பினர்.

இதே சமயத்தில், அவ்வீதி முனையில் ஒரு வீட்டில் நடந்துகொண்டிருந்த திருமணத்தில், தாலிகட்டும் சமயத்தில் வாசிக்கப்படும் நாதசுர ஓசையும், தவில் சப்தமும் பலமாகக் கேட்டன.

இதற்குள் சந்தோஷநாதம் பிள்ளை ரிஜிஸ்டிராருக்குச் செலுத்தவேண்டிய கட்டணங்களைச் செலுத்தி, பூ, பழம்,

தாம்பூலங்களை ஒரு தட்டில் வைத்துக்கொடுத்து, மரியாதை யுடன் வழியனுப்பினர். மணமகனும் ஜோஸபும் தங்க ராஜும் அவருக்கு வணக்கஞ் செலுத்தினர். "இன்று என் உத்தியோகக் கடமையுடன், மகத்தான காரியம் ஒன்றைச் செய்த திருப்தியும் மகிழ்ச்சியைத் தருகிறது" என்று சொல்லிச் சிரித்தவாறே, அவர், தம் சிப்பந்தியுடன் அவ் விடத்தை விட்டு அகன்றார்.

"வாத்தியார் சார்! வாருங்கள். இன்னும் ஏன் அங்கேயே இருக்கிறீர்கள்? அம்மாவுடன் வந்து, உங்கள் மகள் மணாளனுடன் மணக்கோலத்தில் இருப்பதைக் கண் குளிரப் பார்த்துவிட்டு வாழ்த்துங்கள்."

சந்தோஷநாதம் பிள்ளை வாசல் பக்கத்து அறையைப் பார்த்துச் சொன்னார். உடனே பரமசிவம், ஆனந்தக் கண்ணீருடன் வெளியே வந்தார். செல்லம்மாளும் பாகீரதி யும் போய்க் காமாட்சியம்மாளை அழைத்து வந்தனர்.

தன் தாய் தந்தையரைக் கண்டதும் தரங்கிணிக்கு உடம்பு புல்லரித்தது. தனக்கு ஆச்சரியத்தின்மேல் ஆச்சரியம் காத்திருப்பதறிந்து அவள் திக்குமுக்காடினாள். அவளுடைய உள்ளத்தில், இப்போது எழுந்திருப்பது சந்தோஷமா? துக்கமா? என்று அவளால் உணர முடிய வில்லை.

அப்போது ஏற்பட்ட உணர்ச்சியைத் தாங்கமாட்டா மல், அவள், "அம்மா, அப்பா!" எனக் கூறியவாறே பெற்றோரை நோக்கி ஓடினாள்.

"உன்னை நல்வாழ்வு வாழவைக்கப் பெருமுயற்சி யெடுத்துக்கொண்ட அந்த மனிததெய்வங்களை முதலில் வணங்கி ஆசிபெறு, அம்மா!" என்று, பரமசிவம் சந்தோஷ நாதம் பிள்ளை தம்பதிகளை நோக்கிக் கை காட்டினார்.

பாகீரதி, செல்லம்மாள் கையைப்பிடித்து அழைத்துப் போய், சந்தோஷநாதம் பிள்ளை பக்கத்தில் நிற்க வைத்தாள். தரங்கிணி, அவர்கள் காலில் விழுந்து வணங்கினாள். அவளுக்கு முன்பே, சௌந்தரராஜன் நெடுஞ்சாண்கிடையாய் விழுந்துவிட்டான்.

சந்தோஷநாதம் பிள்ளை பதறிப் போய், அவனைக் கைலாகு கொடுத்துத் தூக்கினார். பின் அவர், அவன் கரங்களைப் பற்றியபடியே, "படித்த பிள்ளை; உங்களுக்கு நாங்கள் அதிகமாக ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. தரங்கிணி எளிதில் கிடைத்தற்கரிய பெண் இரத்தினம்! உங்கள் குடும்பத்துக்கு நந்தாமணி விளக்காகத் திகழ்வாள். அவளுக்கு யாதொரு குறையும் இல்லாமல் பார்த்துக் கொள்ளவேண்டியது உங்கள் கடமையாகும்" என்று கூறினார். செல்லம்மாள், தரங்கிணியின் முகத்தைத் தன் இரு கரங்களாலும் பற்றித் தலையை உச்சிமோந்து, வாழ்த்தினாள்.

"நீங்கள் என்பால் வைத்திருக்கும் நம்பிக்கைக்குப் பாத்திரமாக நான் நடந்துகொள்வேன், ஐயா" என்று அடக்கமாகச் சொன்னான், சௌந்தரராஜன்.

அடுத்து, அவன் தன் மாமனார் மாமியார் கால்களில் விழுந்து வணங்கினான். காமாட்சியம்மாள் ஒதுங்கிக் கொள்ள முயன்றாள். தரங்கிணியும் வணங்கி எழுந்தாள்.

"நீங்கள் பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ வேணும்."

பரமசிவம் நெஞ்சந் தழுதழுக்க ஆசி மொழிந்தார்.

"தீர்க்க சுமங்கலியாய் இரு, அம்மா!"

காமாட்சியம்மாள், தரங்கிணியைச் சேர்த்தணைத்துக் கொண்டு, சிரத்தின்மீது கைவைத்துச் சொன்னாள்.

தோழிகள், தாங்கள் கொண்டு வந்திருந்த பரிசுகளைத் தரங்கிணியிடம் தரலாயினர். மாலைகளையும் அணிந்தனர்; மாப்பிள்ளைக்கும் அணியச் செய்தனர்.

மகிழ்ச்சியான இக்காட்சிகளையெல்லாம், ஒருபுறம் சுவரோரமாக ஒதுங்கி நின்று, ஜோஸப், உவகை பொங்கப் பார்த்துக்கொண்டிருந்தான்.

இந்த ஆரவாரமெல்லாம் ஒருவிதமாக அடங்கிய பின்னர், தரங்கிணியின் கண்கள், அங்கிருப்போரிடையே ஜோஸப் எங்கு இருக்கிறான் என ஆராயலாயின. அவன் நின்றிருக்கும் இடத்தைப் பார்த்ததும், இத்தனை பேருக்கு நடுவே, தான் அவனிடம் எப்படி நன்றி தெரிவிப்பது என்று தவிக்கலானாள். இந்தச் சங்கடத்ததைத் தீர்க்க முற்படுபவன் போல், சௌந்தரராஜன், ஜோஸப்பிடம் போய், அவன் கரங்களை அன்பாகப் பற்றிக்கொண்டு, "ஜோஸப், உனக்கு நான் எப்படி நன்றி சொல்லுவதென்றே தெரியவில்லை. எனக்கு இன்பவாழ்வளித்த நீ, உன் வாழ்க்கையில் எல்லா விதமான ஏற்றங்களையும் பெற்று, இனிது வாழ இறைவன் திருவருள் புரிய வேண்டும்" என்று மொழிந்தான்.

கணவனைப் பின் தொடர்ந்து வந்த தரங்கிணி, "ஆமாம், அண்ணா! ஆண்டவன் உங்களுக்கு எல்லா நன்மைகளும் வழங்குவார். இது நிச்சயம். பரோபகாரியல்லவா நீங்கள்...?" மேலே பேசமுடியாதபடி, நன்றியுணர்ச்சி அவளுடைய நெஞ்சை அடைத்தது.

தரங்கிணி 'அண்ணா!' என வாய்நிரம்ப அழைத்ததைக் கேட்டு, ஜோஸபுக்கு மெய் சிலிர்த்தது. அவனையறியாமல், அவன் கண்களில் நீர் ததும்பியது. "நான் என்ன அப்படிப் பிரமாதமாகச் செய்துவிட்டேன். இருவரும் சேர்ந்துகொண்டு என்னை ஒரேடியாகப் புகழ்ந்து பேசுகிறீர்களே! மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் செய்ய வேண்டிய கடமை இது..."

சந்தோஷநாதம் பிள்ளை அங்கு வந்து, "கார் வந்து காத்திருக்கிறது. மணியும் பத்தரைக்குமேல் ஆகிவிட்டது மாப்பிள்ளை! முதலில் நீங்கள் உங்கள் மனைவியை அழைத்துக் கொண்டுபோய், உங்கள் பெற்றோரிடம் ஆசீர்வாதம் பெற்று வாருங்கள்."

சௌந்தரராஜன் கையைப் பிசைந்தான்.

"எப்படி ஐயா, அவர்கள் முகத்தில் போய் விழிப்பேன்? அப்பா ரொம்பக் கோபக்காரர் ஆச்சே!..."

"பிள்ளையவர்கள், "நீங்கள் என்ன தப்புச் செய்து விட்டீர்கள், பயப்பட? அவர்கள் கோபித்துக் கொண்டாலும், பரவாயில்லை. அவர்களின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளுங்கள். விடாதீர்கள்" என்று யோசனை சொன்னார்.

"ஆமாம்: தயங்காமல் போய் வாருங்கள் மாப்பிள்ளை; பெற்றவர்கள் ஆசியைப் பெறுவது அவசியம்."

பரமசிவமும் வற்புறுத்திக் கூறினார்.

சௌந்தரராஜன் சிந்தனையுடன் புறப்பட்டான். எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டான். தரங்கிணியும், அனைவரிடமும் சொல்லிக் கொண்டாள். கடைசியாக, காதரீனிடம் வந்து, அவள் கரத்தைப்பற்றி, "காதரீன்! நீ உன் அண்ணனுடன் சேர்ந்துகொண்டு, எவ்வளவு காரியங்களைச் சாமர்த்தியமாகச் சாதித்திருக்கிறாய்? இவ்வளவும் திட்டமிட்டுச் செய்துவிட்டுக் கடைசிவரை ஒன்றுந் தெரியாததுபோல் என்னிடம் நீ நடமாடினாயே? மகா கள்ளியடி நீ! இரு, இரு. எனக்கும் ஒரு சந்தர்ப்பம் வரும். அப்போது வட்டியும் முதலுமாகச் செலுத்தி விடுகிறேன். இந்த நாடகத்தில், பாகீரதியும் முக்கிய பாத்திரமேற்றிருக்கிறாள் என்று நினைக்கிறேன். அப்படித்தானே?" என்று பக்கத்திலிருந்த பாகீரதியைப் பார்த்துக் கேட்டாள்.

காதரீனும், பாகீரதியும் புன்னகையை உதிர்த்தனர்.

"நேரமாய்விட்டது அம்மா! டாக்ஸிக்காரன் சத்தம் போடுவான்" என்று சந்தோஷநாதம் பிள்ளை துரிதப்படுத்தினார் பின், "நீங்கள் எண்ணியிருந்தபடியே எல்லாம் நல்ல விதமாக நடந்துவிட்டது, இல்லையா? வாத்தியார் சார்! உங்களுக்குச் சந்தோஷந்தானே!" என, பரமசிவத்தைப் பார்த்துக் கேட்டார்.

"உங்களுக்கு நன்றி சொல்ல எனக்கு வார்த்தை கிடைக்கவில்லை, பிள்ளைவாள்!"

பரமசிவம், ஆனந்தக் கண்ணீர் வடித்தவாறே பதில் சொன்னார்.

மணமக்கள், கடைசி முறையாக எல்லோரிடமும் சொல்லிக்கொண்டு புறப்பட்டனர்.

அவர்களுக்குப் பின்னே பரமசிவம் தம்பதிகள் புறப்பட முயன்றனர்.

"நீங்கள் இருங்கள். அப்புறம் போகலாம்" என்று அவர்களைத் தடுத்து நிறுத்தி, "தங்கராஜ், எதற்கும் நீ அவர்களுடன் டாக்ஸியில் போ. போகும் இடத்தில் என்ன நிலைமை என்று தெரிந்துகொண்டு வந்து சொல்லு. மாப்பிள்ளையின் பெற்றோர் ஒரே பிடிவாதமாக அவர்களை வீட்டினுள் அனுமதிக்க முடியாது என்று கூறிவிட்டால், அவர்களை நீ இதே டாக்சியில் திருப்பி நம் வீட்டுக்கு அழைத்து வந்துவிடு. அப்புறம் நடக்கவேண்டியதைப் பார்த்துக் கொள்ளலாம். என்ன சொல்லுகிறீர்கள்? வாத்தியார் சார்!" என்று கேட்டார்.

"நீங்கள் சொல்வதுதான் சரி," என்றார் பரமசிவம்,

தங்கராஜ் விரைவில் சென்று மணமக்களுடன் டாக்ஸி யில் ஏறிக்கொண்டான்.

அவனுக்கு முன்பே தெருத்திண்ணையண்டை போய் நின்ற ஜோஸப், டாக்ஸியில் வேகமாகச் செல்லும் மணமக் களைப் பார்த்துக்கொண்டே நின்றான். டாக்ஸி அவன் பார்வையை விட்டு மறைந்தும், அவர்கள் உருவம் அவனுடைய அகக்கண்களை விட்டு அகலவில்லை.

# 14

''தர்ம ஸம்ஸ்த்தா பனார்த்தாய
சம்பவாமி யுகே யுகே!''

குருக்ஷேத்திர மகாயுத்தத்தில், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா, அர்ஜுனனுக்கு உபதேசித்து அருளிய 'பகவத் கீதை' புத்தகம், இராமகிருஷ்ணன் கரத்தில் இருந்தது. அவருடைய வாய், மேற்படி சுலோகத்தை ஓசையோடு உச்சரித்துக் கொண்டிருந்தது.

''ஓவாது பிறந்திடுவேன் யுகந்தோறும் யுகந்தோறும்.''

'ஓ! அர்ஜுனா! நான் பிறப்பில்லாதவனாயினும், அழி வில்லாதவனாயினும், சகல உயிர்களுக்கும் தலைவனாயினும், பல வகையாக அந்தப் பிரபஞ்சம் அனுபவிக்கின்ற அழியுந் துன்பங்களைப் போக்குவதற்காக, உலகத்துடன் சிறிதும் பற்று ஒட்டு இல்லாது நின்று, என் மாயையினாலே உண்மையென எண்ணுமாறு உடம்பு தாங்கி, ஒவ்வொரு யுகத்திலும் பிறந்திடுவேன். எப்பொழுது உலகத்தில் தர்மம் சிதைந்து அதர்மம் மிகுகின்றதோ, அப்பொழுது நான் அவதரிக்கிறேன். மேலும், நான், நல்ல மக்களைப் பாதுகாக்கவும், கெட்டவர்களைத் தண்டித்து அடக்கி ஒடுக்கவும், நல்லறத்தை இவ்வுலகில் நிலை நாட்டுவதற்கும்

யுகந்தோறும் என்னை நானே படைத்துக்கொண்டு பிறக்கின்றேன்."

தமிழ் விளக்கத்தையும், அவர், அடுத்து நிதானமாகப் படித்துக் கொண்டிருந்தார்.

இருந்தாற்போலிருந்து கேட்ட காரின் ஹாரன் சப்தம், மேல்மாடி அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலாவியவாறு படித்துக்கொண்டிருந்தவரின் கவனத்தை ஈர்த்தது. உடனே அவர் நின்று, ஜன்னல் வழியாகக் கீழே எட்டிப் பார்த்தார். தம் வீட்டின்முன் ஒரு கார் வந்து நிற்பதைக் கண்ட அவர், புத்தகத்தை ஊஞ்சல் பலகைமீது வைத்துவிட்டுத் தன்னைப் பார்க்க யார் வந்திருப்பது என்றும் அறியும் ஆவலோடு, அவசரம் அவசரமாகக் கீழே இறங்கலானார்.

சாளரத்தின் வழியாக உள்ளே படர்ந்த சூரிய வெளிச்சம், இராமகிருஷ்ணன் காதுகளில் போட்டிருந்த வைரக்கடுக்கன் மீதும், விரல்களில் அணிந்திருந்த பச்சைக் கல் மோதிரத்தின் மீதும், சிவப்புக்கல் மோதிரத்தின் மீதும் பட்டு ஜிலு ஜிலுத்தது. அவர் அரையில் பட்டு வேட்டி பளபளத்தது. அவருடைய குடுமி மயிர் காற்றில் பறக்கலாயிற்று. உடம்போடு ஒட்டியிருந்த பனியன் அவரது சரீரச் செழுமையை எடுத்துக் காட்டியது. மிடுக்கான கம்பீரத் தோற்றத்தைப் பார்ப்பவர்கள் யாரும், அவர் ஆயுளில் பாதிவயதைக் கடந்துவிட்டவர் என்று சொல்லமாட்டார்கள். இந்த முதிய வயதில், வேறு எவராலும் மாடிப்படிகளில் இவ்வளவு வேகமாக இறங்கிவரவே முடியாது."

அவர், உள்ளிருந்து வெளிவராந்தாவுக்கு வருவதற்கும், சௌந்தரராஜன் டாக்சியிலிருந்து இறங்கி, மனைவி பின் தொடர உள்ளே நுழைவதற்கும் சரியாக இருந்தது.

முதலில் அவனைப் பார்த்ததும், "இராத்திரி ஏன் வர வில்லை, ராஜா! பாங்கியில் ஏதாயினும்...?" என்று கேட்டுக் கொண்டே வந்தவர், அவன் பின்னால் நிழல்போல் தொடர்ந்து வந்துகொண்டிருந்த தரங்கிணியைக் கண்டு விட்டு, வாயடைத்துப்போய் அயர்ந்து நின்று விட்டார்.

"அப்பா! என்னை மன்னித்துவிடுங்கள், அப்பா!" என்றி கூறியவாறே, சௌந்தரராஜன் தந்தையின் கால் களில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்துவிட்டான். தரங் கிணியும் மண்டியிட்டு விழுந்து வணங்கினாள்.

இதற்குள், இராமகிருஷ்ணன் நிலைமையை ஒருவாறு புரிந்துகொண்டார். அவர் வெளியே நோக்கினார். இவர் களை ஏற்றி வந்த டாக்சி புறப்பட்டுப் போய்க்கொண் டிருந்தது. தங்கராஜ் மணமக்களுடன் இறங்கிக்கொண்டு, டாக்சியைச் சிறிதுதூரம் கொண்டுபோய் நிறுத்தி வைத்தி ருக்கும்படி டிரைவரிடம் சமயோசித புத்தியுடன் சொல்லி யனுப்பினான். பின்னர், வெளிவாயில் கதவோரத்தில் ஒதுங்கி நின்று, உள்ளே என்ன நடக்கிறதென்று கவனித்துக் கொண்டிருந்தான்.

தகப்பனாரின் பாதங்களில் விழுந்த சௌந்தரராஜன் எழுந்திருக்கவேயில்லை. தரங்கிணிக்குத் தருமசங்கடமாகப் போய்விட்டது. நெடுநேரம் அவளால் மண்டியிட்டிருக்க முடியவில்லை. கணவன் எழுந்திருக்காமல் தான் எழுந்திருப் பதும் உசிதமாகத் தோன்றவில்லை.

"சரி, சரி; எழுந்திருடா!" என்று தம் முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு சொன்ன இராமகிருஷ்ணன், தரங்கிணியைக் கூர்மையாகப் பார்த்துவிட்டு, "யார் இது? அந்த மயிலாப்பூர் வாத்தியார் பெண்தானே!" என்று, பற்று ஒட்டு இல்லாததுபோல் கேட்டார்.

தந்தையின் குரலில் உள்ள மாறுதலையுணர்ந்த சௌந்தரராஜன், தைரியமுற்றவனாய் எழுந்து, "ஆம்; அப்பா! அதே பெண்தான்" என்று மெல்லச் சொன்னான்.

தரங்கிணியும் எழுந்து, சேலைத் தலைப்பை இழுத்து விட்டுக் கொண்டு, அடக்க வொடுக்கமாக நின்றாள்.

இராமகிருஷ்ணன் பார்வை அவள்மீது படர்ந்தது.

"என்ன, கூப்பிட்டீர்களா?"

நீலாய தாட்சியம்மாள், கேட்டுக்கொண்டே, பச்சைப் பட்டுப் புடைவை ஈரசரக்கச் சமையல் உள்ளில் இருந்து வந்தாள். அவள் பார்வையில், தரங்கிணிதான் முதலில் பட்டாள்.

"யார் இந்தப் பொண்ணு? எங்கோ பார்த்த முகமா யிருக்கிறதே?" என்று கேட்டுக்கொண்டே கணவன் பக்கம் திரும்பியவள், அவருக்கு எதிரில் அடங்கியொடுங்கி நிற்கும் தன் குமாரனைப் பார்த்துவிட்டு, "நேற்று எங்கே போயிருந்தாய் சுந்தர், சொல்லாமல் கொள்ளாமல்? ஆபீஸில் வேலையிருந்தால், யார் மூலமாயினும் தகவல் சொல்லியனுப்பப்படாதோ? வருவாய், வருவாய் என்று இராத்திரியெல்லாம் கண்விழித்துக் கொண்டிருந்தோம்" என்று ஆற்றாமையோடு பேசினாள்.

இராமகிருஷ்ணன் இடைமறித்து, "உன் அருமை மகன் வேறெங்கும் போகவில்லை. உனக்கு மருமகளைத் தேடுகிற சிரமத்தை வைக்கக்கூடாது என்று, தானே தேடிப் பிடித்துக்கொண்டு வந்து விட்டான். அவன் கலியாணத்துக்கென நாம் ஒரு பைசாச் செலவு செய்ய வேண்டியதில்லை. நிலபுலத்தை விற்று ஆயிரம் ஆயிரமாகக் கொட்டிப் படிக்கவைத்தோமே என்று, வரவுக்கும் இனி நீ எதிர்பார்க்க முடியாது புரிகிறதா?"

அவ்ருடைய குத்தல் மொழியைக் கேட்டு, தரங்கிணி குன்றிப்போனுள். என்ன ஆகுமோ, ஏது ஆகுமோ என்ற பயத்துடன், அவள் ஒவ்வொரு கணத்தையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

நீலாயதாட்சியம்மாள், திகைப் பூண்டு மிதித்தவள் போல், ஒன்றும் புரியாமல் நின்று விட்டாள்.

"நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்.........?"

இராமகிருஷ்ணன் குறும்பாகச் சிரிப்பைச் சிந்திஞர். "இப்போது உனக்கு ஒன்றும் புரியாது. பின்னல் போகப் போகத் தெரிந்துகொள்ளலாம். நீ முதலில் உள்ளே போய் வஸந்தாவையும், ஜலஜாவையும் அழைத்துக்கொண்டு, ஆலங் கரைத்து எடுத்துக் கொண்டுவா. நம் வீடு தேடி வந்திருக்கும் லக்ஷ்மியை அதிகநேரம் நிற்கவைத்திருப்பது அபசாரம். அத்துடன், இன்று புதன்கிழமையல்லவா? பன்னிரண்டு ஒன்றரை ராகுகாலம். ராகுகாலம் வருவதற்குள், உள்ளே அழைத்துப்போய், மணமக்களுக்குப் பாலும், பழமும் கொடு."

நீலாயதாட்சியம்மாள், எப்போதும் அகமுடையவரின் பேச்சுக்கு மறுவார்த்தை சொல்லமாட்டாள். ஆதலால், அவள் வேறு மாற்றம் எதுவும் உரையாமல், உடனே உள்ளே போனுள். அடுத்த சில கணங்களில், ஜலஜாட்சியும், வஸந்தாவும் அங்கு வந்து தோன்றினர். அவர்கள், ஆச்சரியத்தோடு, தரங்கிணியைப் பார்க்கலாயினர்.

"என்ன? அப்படி பார்க்கிறீர்கள்? உங்கள் அண்ணன் உங்களுக்கு மன்னியைத் தேடிக் கொண்டுவந்திருக்கிருன்; உங்களுக்குப் பிடித்திருக்கிறதல்லவா?"

இராமகிருஷ்ணன், தம் செல்விகளை நோக்கிக் கேட்டார்.

மல்லிகைப் பூங்கொடிகள் போல் காணப்பட்ட அப் பெண்மணிகள், தங்கள் தோள்களிலிருந்து வழுக்கிவிழும் வங்கப் பட்டுச்சேலைகளின் முந்தானைகளைத் தள்ளிவிட்டுக் கொண்டு, "எங்களுக்குப் பிடித்திருக்கிறதாவா? லக்ஷ்மி விக்கிரகத்தை விரும்பாதவர்கள் உண்டா, அப்பா?......" என்றார்கள், தரங்கிணிமீது வைத்த விழிகளைத் திரும்பி வாங்காமல்.

"சபாஷ்! சரியாகச் சொன்னீர்கள்!"

நீலாய தாட்சியம்மாள், ஒரு வெள்ளித்தட்டில் ஆலங் கரைத்து, அதில் கற்பூரத்தை வைத்து ஏற்றிக் கொண்டு வந்தாள்.

வெளியிலிருந்தவாறே உள்ளே நடப்பதை ஒற்றுக் கேட்டு, ஒருவாறு நிலைமையை ஊகித்துக் உணர்ந்து கொண்ட தங்கராஜ், இனி தனக்கு அங்கு ஒன்றும் வேலை யில்லை என்று கருதி, அவ்விடத்தைவிட்டு நீங்கி, டாக்சி யில் ஏறிக்கொண்டு, தங்கள் வீடு நோக்கி விரைந்து ஓட்டச் சொன்னான்.

நீலாய தாட்சியம்மாள் அவ்விடத்துக்கு வரும்போதே; "அவர்களை வாசலண்டை போய் நிற்கச் சொல்லுங்கள்" என்றாள்.

இராமகிருஷ்ணன் சிரித்துக்கொண்டே, "நீ தான் சொல்லேன்" என்றார்.

உடனே ஜலஜாட்சி, சௌந்தரராஜனிடம் ஓடி, "அண்ணா, மன்னியை இப்படி அழைத்துக்கொண்டு வந்து நில்" என்று சொல்லி, தரங்கிணியின் மெல்லிய கரத்தைப் பிடித்து, வாசலுக்கு வெளியே அழைத்துப் போனாள். வஸந்தா, இருவரையும் ஒன்றாக நிற்கவைத்து, கை கோத்துக் கொள்ளச் சொன்னாள்.

சௌந்தரராஜன் முகத்தில் புன் முறுவல் தவழ்ந்தது. தரங்கிணியின் முகம் நாணத்தால் குங்குமச் சிவப்பாயிற்று.

நீலாயதாட்சி, மணமக்களுக்கு மூன்றுமுறை ஆலஞ் சுற்றி, மஞ்சள் நீரை விரலில் தொட்டு இருவருடைய நெற்றியிலும் பொட்டாக இட்டுத் திருஷ்டி கழித்து, "வலது காலை முன்னே எடுத்துவைத்துத் திரும்பிப்பார்க் காமல் உள்ளே போங்கள்" என்று சொல்லிவிட்டு, ஆலத்தை வெளியே ஊற்றிவிட்டுவரப் போனாள்.

ஜலஜாவும் வஸந்தாவும், இருபுறம் இருந்து சௌந்தரராஜனையும் தரங்கிணியையும் வீட்டினுள் அழைத்துச் சென்றனர். கூடத்தின் சுவரில் பெரியதாக மாட்டியிருக்கும் ஸ்ரீராமபிரான் பட்டாபிஷேகப் படத்தைக் கைகூப்பிக் கும்பிட்டுக்கொண்டே, சௌந்தர ராஜன், தன் வாழ்க்கைத் துணைவியுடன் உள்ளே நுழைந் தான்.

இராமகிருஷ்ணன், களிவோடு, மகனும் மருமகளும் போவதைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

வெளியிலிருந்து ஆலத்தட்டுடன் திரும்பி வந்த நீலாயதாட்சி, கணவனுடைய நிலையைக் கண்டு உள்ளூர மனம் பூரித்தவளாய், "நீங்களும் உள்ளே வாருங்கள்" என்று சொல்லிக்கொண்டு போனாள். மனைவியின் பின்னே, இராமகிருஷ்ணன், சிந்தனையுடன் மெல்ல நடந்து செல்ல லானார்.

முற்றுப் பெற்றது

## இந் நூலாசிரியர் எழுதியுள்ள வேறு சில நூல்கள்

### நாவல்கள்

உயிரோவியம்
இவ்வுலகைத் திரும்பிப் பாரேன்?
யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்?
காதலனா? காதகனா?
தாசி ரமணி
வேலைக்காரி
வேடதாரி
புதுமைப் பெண்
நடுத்தெரு நாராயணன்
சீமான் சுயநலம்
கோகிலா
தியாகத் தழும்பு
தும்பைப் பூ
நிறுத்துங்கள் திருமணத்தை!

### நாடகங்கள்

உயிரோவியம்
சதுரங்கம்
பந்தபாசம்
தீண்டாதார் யார்?
சீவக நம்பி
குமரி முதல் காஷ்மீர் வரை
திருவருட்பிரகாச வள்ளலார்
தெய்வப்புலவர் திருவள்ளுவர்

## சிறு கதைகள்

பார்வதி
அழகாம்பிகை
சபலம்
தேவகி
மேனகா
ஹம்ஸா நந்தி
ஜீவாவின் சிறுகதைகள்—1
ஜீவாவின் சிறுகதைகள்—2

## வாழ்க்கை வரலாறுகள்

கௌதமபுத்தர்
மகாவீரர்
ஆதிசங்கரர்
இராமாநுஜர்
ஸ்ரீமாத்வர்
கபீர்தாஸ்
இராமகிருஷ்ண பரமஹம்ஸர்
சாரதாமணி தேவியார்
இராமதீர்த்தர்
விவேகானந்தர்
ஏசு கிறிஸ்து
முகம்மது நபி
தயானந்த சரசுவதி
இராஜாராம் மோகன்ராய்
இரவீந்திரநாத தாகூர்
சரோஜினி தேவி
அன்னி பெஸண்டு

அரவிந்தர்
இரமண மகரிஷீ
கிர்டி சாயிபாபா
இராமலிங்க சுவாமி
திருவள்ளுவர்
நெப்போலியன்
முஸ்தபா கமால் பாஷா
ஏமன் டிவேலரா
பிரான்கிலின் ரூஸ்வெல்டு
வின்ஸ்டன் சர்ச்சில்
அடால்ப் ஹிட்லர்
பெனிடோ முஸோலினி
ஜெனரல் பிராங்கோ
மகாகவி சுப்பிரமணிய பாரதியார்
சிவாஜி மகாராஜா
மீராபாய்

## பிற நூல்கள்

கண்ணன் ஞானோபதேசம் (பகவத் கீதை)
தமிழில்-நாடகம்

# பேராசிரியர் நாரண துரைக்கண்ணன்

'தரங்கிணி' நாவலின் ஆசிரியரான திரு. நாரண துரைக் கண்ணன் தமிழ் இலக்கிய உலகம் நன்கறிந்த புகழ்பெற்ற எழுத்தாளர். இவர், இலக்கியப் படைப்பாளராக ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகவும், பத்திரிகாசிரியராக நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகவும் பணிபுரிந்து, லட்சோப லட்சம் வாசகர்களின் பேரன்பையும், பாராட்டையும் பெற்றிருப்பவர்.

தமிழ் எழுத்தாளர் சங்கம், முற்போக்கு எழுத்தாளர் சங்கம், தென்னிந்தியப் பத்திரிகையாளர் பெரு மன்றம், நாடகக் கழகம் போன்ற பல அமைப்புக்களுக்கும் பல்லாண்டு களாகத் தலைமைப் பதவி வகித்து, எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள், கலைஞர்கள் நலனுக்காகத் தொண்டாற்றி யிருப்பவர்.

இன்று பத்திரிகை உலகிலும், இலக்கிய உலகிலும் முன்னணியில் இருக்கும் எழுத்தாளர்கள் பெரும்பாலோரைத் தமிழகத்துக்கு அறிமுகப்படுத்தி உருவாக்கிய பெருமையும் இவருக்கு உண்டு.

தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் தோன்றிய காலத்திலிருந்து இயக்குநராயிருந்துவரும் இவர், அதன் வளர்ச்சிக்காகப் பலவகையிலும் பேருதவி புரிந்திருக்கிறார்.

'நாரண துரைக்கண்ணன் அவர்களை அறியாதவர்கள் தமிழ் அறியாதவர்கள்' என்று அமரர் கல்கி அவர்களே பாராட்டியிருக்கிறார் என்றால், வேறு சொல்வானேன்!

Wrapper printed at Neo Art Press, Madras-2